# KURUNTHOGAI VACHANAM

By

S. A. RAMASWAMY,

*(Author of Vasaikavivanar, Pulamai Vithaga Bothini, Kolai Maruthal Vachanam, Tamil Nool Kalanjiyam etc.)*

OTTRUMAI OFFICE

சா. அ. இராமசுவாமி

(வசைகவி வாணர், கொலைமறுத்தல் வசனம்,

புலமை

வித்தக போதினி, தமிழ்நூல் களஞ்சியம்

முதலிய

நூல்களின் ஆசிரியர்.)



ஒற்றுமை ஆபீஸ்

நெ. 8, வியாசராவ் தெரு,
தியாகராயநகர்,
மதராஸ்.

1941 விலை 1-4-0

PRINTED AT
THE ROYAL PRINTING WORKS
MOUNT ROAD : : MADRAS.

# நான்முகம்.

---

உலகினுள் வழங்கும் அலகிலா மொழிகளில் பழமையும் பண்பும் ஆதியவற்றால் சிறந்து மிளிர்வது செந்தமிழ்

மொழியே என்பது அறிஞர்கள் பலரும் ஆய்ந்துரைத்த அருமொழியாகும். இழுமெனும் ஒலியொடு விழுமிய

பொருளைத் தரும் எழிலமைந்து ஏற்றமுற விளங்கும் இவ் வின்றமிழ் மொழியில் உள்ள சங்க இலக்கியங்களாகிய

பழம் பெருநூல்கள் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க்கணக்கென முத்திறத்தனவாகும். இவற்றுள் பத்துப்பாட்டும் பதினெண் கீழ்க்கணக்கும் இவை யென்

பதை

" முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை
பெருகு வளமதுரைக் காஞ்சி—மருவினிய
கோலநெடு நல்வாடை கோல்குறிஞ்சி பட்டினப்
பாலை கடாத்தொடும் பத்து"

" நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப்
பால்கடுகங் கோவை பழமொழி மாமூலம்
இன்னிலைய காஞ்சியொடு ஏலாதி யென்பவே
கைந்நிலையொ டாங்கீழ்க் கணக்கு."

என்னும் வெண்பாக்களான் முறையே அறியலாகும். இனி நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு என்னுமிவை எட்டுத்தொகையின் பாற்படுவனவாம். இதனை

" நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூ
றொத்த பதிற்றுப்பத் தோங்கு பரிபாடல்

கற்றறிந்தா ரேத்துங் கலியே யகம்புறமென்
றித்திறத்த வெட்டுத் தொகை.''



என்னுஞ் செய்யுளானுணரலாகும். இந் நூல்கள்
ஒவ்வொன்றும், பல்வேறிடங்களில் பலகாலத்திருந்த புல
வர்கள் பலர் இயற்றிய செய்யுட்களையெல்லாம் ஒருங்கு
திரட்டிப் பாட்டானும், அளவானும், பொருளானும்
பின்னுள்ளோரால் தொகுக்கப் பெற்றமையின் தொகை
யெனப் பெயர் பெற்றன. அவற்றுள் பதின்மூன்றடிச்
சிற்றெல்லையையும் முப்பத்தோரடிப் பேரெல்லையையுங் கொண்டது நெடுந்தொகை.
ஒன்பதடிச் சிற்றெல்லையையும் பன்னிரண்டடிப் பேரெல்லை
யையுங் கொண்டது நற்றிணை. இவற்றைப் பார்க்கினுங்

குறைந்த அளவினவாய நான்கடிச் சிற்றெல்லையையும்
ஒன்பதடிப் பேரெல்லையையுங்கொண்ட செய்யுட்களால்
தொகுக்கப் பெற்றமையின் இந்நூல் குறுந்தொகை யெனப்
பெயர் பெற்றது. இக்குறுந்தொகை நூல் கடவுள் வாழ்த்
துளப்பட நானூற்றிரண்டு செய்யுட்களைக்கொண்டு
விளங்குகின்றது. இச்செய்யுட்களைப் பாடிய புலவர்
இருநூற்றைவர் என்பதும், தொகுத்தவர் பூரிக்கோ என்ப
தும் இந்நூலின் இறுதியிலுள்ள தொடர்களால் விளங்
கும்.

இப்புலவர் பெயர்களிற் பல இந்நூற் செய்யுட்களை
இயற்றிய காரணத்தாற் பெற்ற சிறப்புப் பெயர்களாகும்.
இதனைச் செம்புலப் பெயனீரார், அணிலாடு முன்றிலார்,
நெடுவெண்ணிலவினார், மீனெறி தூண்டிலார், விட்ட

குதிரையார், ஓரேருழவனார் முதலிய புலவர்கள் பெயரால்
அவர்கள் இயற்றிய செய்யுட்களைக் கொண்டு தெளிய
லாகும். இவர்களுள் ஔவையார், ஆதிமந்தியார், வெள்ளி
வீதியார், காக்கை பாடினியார் முதலிய பெண்பாற் புலவர் களும் பலர் உளர்.

தமிழ் நூலார் வகுத்துக்கொண்ட அகம் புறம் என்னும் இருவகைப் பொருள்களுள் இந்நூல் அகத் தைப்பற்றியதாகும்.

V

அகம் என்னுஞ் சொல்லிற்கு இன்பம் என்பது முடிந்த பொருளாகும். இவ்வகம்; குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்னும் ஐந்து திணையாகவும், ஒவ்வொரு திணையும் முதல், கரு, உரி என்னும் மூன்றுறுப்புக்களை யுடையதாகவும் பகுக்கப்படும். ஆகையால் அகப்

பொருளைப்பற்றிய செய்யுளியற்றும் புலவர் இப்பாகுபாடு களைப் பொருந்தியே இயற்றுவர். மற்றைய தொகை நூல் களிலும், கீழ்க்கணக்கு நூல்கள் சிலவற்றிலும் இத்திணைப் பாகுபாடுண்மை தமிழ் நூற் பயிற்சியுடையார் யாவரும் அறிவர். அங்ஙனமாகவும் இக்குறுந்தொகை நூற்செய்யுட்

கள் திணைவகுக்கப் பெறுமைக்கு யாதுகாரணம்

என்பது

இனிது விளங்கவில்லை.

இந்நூற் செய்யுட்களெல்லாம்

வனப்பெட்டனுள்

அழகின் பாற்படுமென்பதும்,

அழகினிலக்கணம் இன்ன

தென்பதும்

"செய்யுண் மொழியாற் சீர்புனைந் தியாப்பி
னவ்வகை தானே யழகெனப் படுமே"

என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தானும்,

அதற்குப்

பேராசிரியர் எழுதிய 'அவையாவன நெடுந்தொகை முத லாகிய தொகை எட்டுமென்றவாறு' என்னுமுரைப்பகுதி

யானும் எதிர் நிறை நிறையே அறியலாகும். இங்ஙனம் செய்யுண் மொழியாலியற்றப்பட்ட பாக்களை யாவரும் கற்று எளிதிற் பொருளுணர்தலாகாமையின் இற்றைக்குப் பன்னூற்றுண்டுகட்கு முன்னிருந்த பேராசிரியரும்; அவர் எழுதாது விட்ட இருபது செய்யுட்களுக்கு நச்சினார்க்கினியருமாக உரையெழுதி முடித்தனர் என்பது

" நல்லறி வுடைய தொல்பே ராசான்
கல்வியுங் காட்சியுங் காசினி யறியப்
பொருடெரி குறுந்தொகை யிருபது பாட்டிற்
கிதுபொரு ளென்றவ னெழுதா தொழிய
இதுபொரு ளென்றதற் கேற்ப வுரைத்தும் "



என்னும் நச்சர் உரைப்பாயிரப் பகுதியால் விளங்கும்.

ஆயினும் இவ்வுரைகள் இக்காலத்தில் கிடைத்திலவாதலின் இற்றைக்கு இருபத்தைந்தாண்டுகட்கு முன்பு சௌரிப் பெருமாளரங்கன் என்னும் புலவர் ஓர் உரை எழுதி வெளியிட்டனர். அவ்வுரையும் பிற்காலத்தரிதாயினமையின், செந்தமிழ்த்தாயின் சிரிய புதல்வராகிய டாக்டர். மகா

மகோபாத்தியாய உ. வே. சாமிநாத ஐயரவர்கள் நீண்ட
உழைப்பின் பயனாகப் பல்வகையாராய்ச்சிக் குறிப்புக்
களுடன் ஈடும் எடுப்பு மில்லாத சிறப்பு முறையில்
செவ்விய நடையில் உரை எழுதித் தமிழுலகிற் கீந்துள்ள
னர். அந்நூல் பெயரளவிற் குறுந்தொகையாயினும்,
வடிவாலும் விலையாலும் பெருந்தொகையாகவே விளங்கு
கின்றது. இந்நூல் மூலத்தை மட்டும் வித்வான், சோ.
அருணாசல தேசிகர் என்பவரும் பதிப்பித்துள்ளனர்.

இந்நூலால் பண்டைத் தமிழ் மக்களுடைய பழக்க
வழக்கங்களும், உழவு வாணிபம் முதலிய தொழில் முறை
களும், அரசர் வள்ளல் முதலியோருடைய வரலாற்றுப்
பகுதிகளும், தமிழர் கற்புமேம்பாடும், நட்பின் பெருக்க
மும், நட்டோர் கடமையும், இல்லற நிகழ்த்து நெறியும்,

விலங்கு பறவை நிலம் உணவு உடைநாகரிகம் முதலியனவு
மாக அறியப்படும் பொருள்கள் மிகப்பலவாம். ஆயினும் சங்க நூற்பயிற்சி யிலார்க்கு இந்நூற் பொருளுணர்தல் அருமையாதலின் அக்குறைநீங்க எனது நண்பரும், புலமை
வித்தக போதினி என்னும் நூலின் ஆசிரியரும், சிறந்த
எழுத்தாளருமாகிய திருவாளர் ச. அ. இராமசாமி அவர்கள் தெள்ளிய சிறந்த உரைநடையில் செய்யுட் பொருள்
சிதைவுருமல் கற்பாருள்ளங்கதுவுறுமாறு வசனப்படுத்திக் 'குறுந்தொகை வசனம்' என்னும் பெயரீந்து தங்கடமையை ஆற்றியுள்ளனர். இந்நூலை ஒருமுறை படித்துப்பிறகு குறுந்தொகை நூற்செய்யுட்களைக் கற்பராயின், அன்னார் அச்செய்யுட் பொருளை உள்ளங்கை நெல்லிக் கனியென



உணர்ந்து உவப்பெய்துவார் என்பது ஒரு தலை. இவ்வுரை
நடை நூர்ல் சங்கநூலைப்
பயில்வார்க்கும், பயின்ருர்க்கும்

ஒப்பப் பயன்படும் என்பது ஒவ்வொருவரும் நடைமுறையில் உணர வேண்டிய உண்மையாகும். இத்தகைய சிறந்த பணியை யாற்றிய ஆசிரியர் அவர்கட்குத் தமிழுலகம் நன்றி செலுத்துமாக.


22—4—'41
திருவொற்றியூரான்
வடமொழிக் கல்லூரி
சூளை சென்னை.

பண்டித. மி. பொ. இராமநாதஞ் செட்டியார்,
தமிழாசிரியர்.


# பிழையுந் திருத்தமும்

| பக்கம் | வரி | பிழை |
| --- | --- | --- |
| 29 | 12 | * வாழ்ந்ற் தலைவி |
| 67 | 20 | தேனீருலை |

71 3 போல் வாளாகிய

73 20 துணையும்படி

74 7 கெண்பாயாக

74 15 உரைக்கல்

77 30 தின் கன்

86 16 பொன்ற

93 9 நரிவெருஉத்தலைவர்

திருத்தம்

வாற்ருல் தலைவி

தேளிருலை

போல்வாளாகிய

துணியும்படி

காண்பாயாக

உரைகல்

தின்கண்

போன்ற

நரிவெரூஉத் தலையார்

| | | | |
|---|---|---|---|
| 127 | 23 | போகவுந் வருத் | போகவும் வருத் |

---

* இப்பிழை எல்லாப் பிரதிகளிலும் இராது. தேய்வினாற் பல எழுத்துகளிற் புள்ளிகள் நன்கு தெரியமாட்டா அவைகளை யெல்லாந் திருத்திக் கொள்க.

குகமயம்

வள்ளிநாயகிதுணை

# குறுந்தொகை வசனம்

## முருகக் கடவுள் வாழ்த்து

தாமரை மலரையொத்த அழகிய திருவடிகளையும், பவழத்தின் நிறத்தைப் போன்ற திருமேனியையும், விளங்குகின்ற ஒளியையும், குன்றுமணியின் வண்ணத்தை நிகர்த்த அழகிய ஆடையினையும், கிரௌஞ்ச மலையின் மார்பு பிளக்கும்படியாக வீசிய நல்ல சுடர் பொருந்திய நீண்ட வேலாயுதத்தையு முடைய; அழகிய சேவற்கொடியோன் காத்தருளுதலால், இந்த உலகத்திலுள்ள உயிர்கள் நல்ல பாதுகாப்புடையனவாக விருக்கின்றன.

பாரதம் பாடிய பெருந்தேவனார்.

## நூல்

### 1

[தோழி கையுறை மறுத்தது.]

மலைநாடனே! போர்க்களம் செந்நிறத்தையுடைய தாம்படி, சூரபன்மனாதிய வசுரரைக் கொன்றொழித்த சிவந்த திரண்ட அம்பையும், சிவந்த தந்தத்தையுடைய பிணிமுக மென்னும் யானையையும், கால்களிலே யணிந்த வீரவளைகளையும் உடைய முருகவேளுக்குரிய இக்குன்றமானது, செந்நிறப் பூங்கொத்துள்ள காந்தளைத் தன்னிடத்தே கொண்டது. (ஆகலால் நீ கொணர்ந்த இக் காந்தள் மலர்க் கொத்தை யாம் வேண்டேம்.

திப்புத்
தோளார்.



## 2

[தலைவன் இயற்கைப் புணர்ச்சிக்குப்பின் நலம் பாராட்டியது.]

பூந்தாதைத் தேடியுண்ணும் வாழ்வினையும் அழகிய

சிறையிணையு முடைய தும்பியே! என்னுசையைப் பார்த்து

நீ பாரபட்சமாகக் கூருமல் உண்மையென்று கண்டதைக்

கூறு. நீ பார்க்கும் மலர்கட்குள்ளே என்னேடு பழகுதல்

பொருந்திய நட்பையும், மயில் போன்ற சாயலேயும்,

நெருங்கிய பற்களையுமுடைய இப்பெண்ணின் கூந்தலேப்

போல நறுமணமுடைய மலர்களு முள்ளனவோ?

இறையனர்.

3

[களவுப் புணர்ச்சியில் தலைவன் வேலிப்புறத்தே

நின்றதை யறிந்த தோழி, அவன் விரைந்து வரைந்து

கொள்ளுதலே விரும்பி இயற் பழித்தவழி தலைமகள் இயற்

பட மொழிந்தது.]

மலேயின் பக்கத்திலுள்ள கரிய கொம்புகளையுடைய

குறிஞ்சி மரத்தின் பூக்களைக் கொண்டு,

மிகுந்த தேனை
வண்டுகள் திரட்டுதற் கிடமாகிய
நாட்டையுடைய தலைவ
ஞெடு நான் செய்த நட்பானது, இம்
மண்ணுலகத்திலும்
மிகப் பெரிது.
விண்ணுலகத்தைப் பார்க்கினு முயர்ந்தது.
கடலைக்காட்டினும் மிகுந்த ஆழத்தை யுடையது,

தேவ குலத்தார்.

4

[பிரிவிடையாற்ருது வருந்திய தலைவியைத் தோழி
தேற்றத் தோழிக்குத் தலைவி யுரைத்தது.]

என் மனமானது மிக வருந்துகிறது. என் மனமானது
மிக வருந்துகிறது. கண்ணிமைகளைத் தனது வெப்பத்
தாலே சுட்டெரிக்கத்தக்க வெம்மையினை யுடைய கண்
ணீரை மாற்றித், தழுவி இருத்தற்கமைந்த நமது காதலர்

இப்பொழுது பிரிந்திருத்தலானே எனது மனம் மிகவும் வருந்துகிறது.

காமஞ்சேர் குளத்தார்.

5

[பிரிவிடையாற்ருளெனவருந்திய தோழிக்குத் தலைவி சொல்லியது.]

தன்னிடத்தே தங்கி யிருக்கும் பறவைகள் துயிலு தற்குக் காரணமாகிய இனிய நிழலைக்கொண்ட புன்னை மரமானது, கரையை யுடைக்கின்ற அலைகளின் றுளியால் அரும்புகின்ற இனிதாகிய நீர்ப் பரப்பைக் கொண்ட மெல்லிய கடற் கரையை யுடைய தலைவன் பிரிந்தமை யானே, தாமரை மலரை நிகர்த்த என்கண்கள் உறங்கு

தலைப் புரியா வாயின. தோழியே! காம நோயானது
அத்தன்மை பொருந்தியதோ?

நரிவெரூஉத்தலையார்.

6

[வரைவின் செலவுக்குப் பொருளீட்டத் தலைமகன்
பிரிந்தவழி, ஆற்ருளாகிய தலைமகள் தோழியை நோக்கிச்
சொல்லியது.]

நள்ளிரவு மிகப் பொருந்திய இருளையுடையதாக
இருக்கின்றது. மக்கள் தாங்கள் பேசுதலை ஒழித்து
இனிமையாகத் துயில் புரிகின்றனர். அகன்ற உலகத்தி
லுள்ள எல்லா வுயிர்களும் வெறுப்பின்றித் துயில்
கின்றன. நான் ஒருத்தியே உண்மையில் தூங்காதவளாக
விருக்கின்றேன்.

பதுமனார்.

[உடன் போக்கின் கண் இடையிற் பாலை நிலத்தில் கண்டார் கூறியது.]

ஆரியக் கூத்தர் மூங்கிலின் மேற் கட்டிய கயிற்றின் மேல் நின்று ஆடும்பொழுது அடிக்கப்படும் பறையைப்



போலக், காற்ருனது தாக்குதலானே நிலை கலங்கி, வாகை மரத்தின் வெள்ளிய நெற்றுக்கள் ஒலிக்கும் மூங்கில் பொருந்திய பாலைநிலத்தைக் கடந்து செல்ல வருபவர்களுள், கையில் வில்லையுடைய இவ்வாடவனது கால்களிலே வீரக்கழல்கள் விளங்குகின்றன. வளையல்களை யணிந்த நங்கையின் மிருதுவாகிய வடிகளிலே சிலம்புகள் உள்ளன.

இந் நல்லோர் யாவர்? பிறரின் கருணையைப் பெறுதற்கு

இவர்களுரியவராவர்.

பெரும்பதுமனார்.

8.

[தலைவி தன்னைப் பழித்தாளெனக் கேள்விப்பட்ட காதற் பரத்தை, தலைவியின் பக்கத்திலுள்ளார் கேட்கும்படி கூறியது.]

வயற் பக்கத்திலுள்ள மாமரத்தினது கனிந்து வீழு
கின்ற இனிய பழத்தை, வயலிலுள்ள வாளை மீன்கள்
வாயாற் பற்றி உண்ணுதற்கிடமாகிய ஊரையுடைய தலை
வன், எம்மிடத்தி லெம்மை வயமாக்குதற்குரிய பெரிய
மொழிகளைக் கூறிவிட்டுத் தம்முடைய வீட்டிற்குச்
சென்று, தனக்கு முன்னின்றார் கையையும் காலையும்
தூக்கத் தூக்கும் கண்ணாடிப் பாவை போலத், தன் மகன்
தாய்க்கு விரும்பிய வற்றைச் செய்வான்.

ஆலங்குடி

வங்கனார்.

9

[பரத்தையிற் பிரிந்து மீண்ட தலைமகனுக்குத் தோழி சொல்லியது.]

மாமை நிறத்தையுடையவளாகிய தலைவி, மூட்டு வாயாற் பெருமைப்பட்ட செப்பினுள் விட்டடைப்பத் தனித்தனவாகிப் பொருந்திய, சூடாத பூக்களைப்போல வுடல் சாம்பினள். பசிய இலைக்கு மேலே உயர்ந்து காணப்படும் திரண்ட காம்பையுடைய நெய்தற் பூவானது, கூட்டமாகிய மீன்களைக் கொண்ட பெரிய வுப்பங்கழியின்



கண்; வெள்ள மதிகப்படுந்தோறும் தடாகத்தில் மூழ்கு கின்ற மகளிரது கண்ணை யொத்தற்கிடமாகிய, குளிர்ந்த துறையை யுடைய தலைவனது கொடுமையைச் சொல்லு தற்கு வெட்கப்பட்டு, மறைத்தலையுடைய சொற்களைச் சொல்லுகின்றாள். ஆதலின் கற்புக் கடம் பூண்டவளானாள்.

கயமனார்.

## 10

[இதுவுமது.]

தலைவன் செல்வம் பெற்று மகிழ்ந்து விளங்குதற்குக் காரணமாகத் தலைவி யிருக்கின்றாள். பயற்றின் கொத்தைப் போன்ற பூங்கொத்தி லுள்ளனவாகிய பசிய மகரந்தப் பொடிகள், தங்கள் மேலே படும்படி உழவர்கள் வளைத்த கமழுகின்ற பூக்களமைந்த, மெல்லிய கிளைகளைக் கொண்ட காஞ்சி மரத்தையுடைய ஊரனது கொடுமையைப், பிறரறி யாதபடி மறைத்தனளாதலின் அவன் வெட்கும்படி எதிர் கொள்ள வருவாள்.

ஓரம்போகியார்.

## 11

[தலைமகள் தன் நெஞ்சிற்குச் சொல்லுவாள் போன்று தோழி கேட்பச் சொல்லியது.]

எனது நெஞ்சே! நீ வாழ்வையாக.

சங்கினையரிந்து
செய்யப்பட்டு விளங்கும் கைவளை சோர்வுறல் நெகிழ,
நாள்தோறும் இமை பொருந்துத லில்லாதனவாகிக்
கலங்கியழும் கண்ணொடு தனித்து வருந்தி
இங்கேயிப்படித் தங்குதலில் நின்றும் தப்புதற்
பொருட்டுத் தலைவரிருக்கு மிடத்திற்குச்
செல்ல விப்பொழுது எழுவையாக. முன்னே யுள்ள
கஞ்சங்குல்லையாலான மாலையைத் தரித்த வடுகருக்
குரிய இடத்தினதாகிய, பல வேலையுடைய கட்டி
யென்
பவனது நல்ல நாட்டுக் கப்புறத்திலுள்ள மொழி
வேறு பட்ட . தேசத்திலுள்ளாராயினும்,
அவருடைய நாட்டி னிடத்திலே
செல்லுதலை யெண்ணினேன். மாமூலனார்.



## 12

[தலைவனது பிரிவைத் தலைவி யாற்றாளென
வருந்திய
தோழிக்குத் தலைவி சாற்றியது.]

தலைவர்போன வழியானது எறும்பின்
வளைகளைப்

போலக் குறுமையையுடைய பலவாகிய சுனையைக் கொண்
டது. கொல்லனது உலைக்களத்துப் பட்டடைக்கல்லைப்
போன்ற வெம்மையையுடைய பாறையின் மீதேறிக்,கொடிய
வில்லையுடைய எயினச் சாதியார் தம் அம்புகளைத் தீட்டு
தற்கிடமாகிய பிளவு பட்ட வழிகளையுடைய தென்று
பார்த்தோர் கூறுவர். ஒலியினையுடைய இந்த ஊரானது
அவ்வழியின் கொடுமையைப் பற்றிய துன்பத்தை
எண்ணுமல் வேறு விதமாகப் பேசும்.

ஓதலாந்தையார். **13**

[தலைவன் பாங்கியினுதவியால் தலைவியைக்கூடி ஆற்
றும் வகையா னுற்றுவித்துப் பிரிய அக்காலை தலைவி கூறி யது.]

மேலேயுள்ள தூசி நீங்கும்படி கழுவப்பட்ட யானை
யைப் போலப், பெருமழையை யேற்றுத் தூய்மையுற்ற

பெரிய சுர சுரப்பினையுடைய நெருங்கிய கல்லானது;
பசுமையை யுடைய ஓரிடத்தில் தங்குகின்ற மலைநாட்டை
யுடைய தலைவன் காமநோயைக் கொடுத்தான்.
குவளை மலரைப் போலிருந்த வெனது கண்கள் இப்போது பசலை நிரம்பப்பெற்றன.

கபிலர்.

## 14

[தோழியாற் குறை மறுக்கப்பட்ட தலைவன், தலைவி யைப் பெறும்பொருட்டு னென்றது.]

மறுகிடை மடன்மாலூர்வே

அமுதத்தினினிமை நிரம்பிய சிவந்த நாவானது பயப் படும்படி முளைத்து, நேராக விளங்குகின்ற கூர்மையாகிய

பற்களையும், சிலவாகிய, மொழிகளையுமுடைய தலைவியை நான் பெறுவேனாக. பெற்றபின்பு இவ்வூரிலுள்ளாரறிவா

ராக. வீதியிலுள்ள பலர், இந் நல்லாளுடைய கணவ னிவ

னென்று கூற யான் சிறிது நாணுவேனாக.

தொல்கபிலர்.

## 15

[உடன் போக்கின் பிறகு தோழி செவிலிக்கு அறத் தொடு நிற்கச், செவிலி நற்றாய்க் கறத்தொடு நின்றது.]

தோழியே! அழகிய வீரக்கழலையும், செம்மையாகிய இலைத்தொழிலமைந்த வெள்ளிய வேலையுமுடைய தலைவ

னொடு நின்மகள் செய்த நட்பானது; மிகப்பழைய ஆலமரத்தடியின்கண்ணுள்ள பொதுவிடத்தில் தங்குதலைக் கொண்டு தோன்றிய நல்லூர்க் கோசர் நன்மொழி யுண்மையாவதைப் போலப், பறை முழங்கவும் சங்கொலிக்

கவும் மணஞ் செய்தலால் உண்மையாகியது.

ஔவையார்.

[பொருள்

**16**

வயிற் பிரிந்தவிடத்துத் தலைமகள் தாற்று மையைக் கண்ட தோழி கூறியது.]

தோழி! வழி மறித்தல் செய்யுங் கள்வர் ஒழுங்கு படுத்தும் பொருட்டுக், கரும் பொன்னிறற் செய்யப்பட்ட தமது அம்பை நகநுனியினாலே புரட்டுதலாலாகிய வோசை யைப்போற்,
சிவந்த காலையுடைய ஆண் பல்லியானது தனது
துணையாகிய பெண் பல்லியைக்
கூப்பிடுதற் கிடமாகியதும்,
அழகிய அடியையுடைய கள்ளிகளைக்
கொண்டதுமான பாலையைக் கடந்து,
பொருள் தேடுதற் பொருட்டுப் பிரிந்து
சென்ற தலைவர் நம்மை நினைக்க மாட்டாரா?

பாலைபாடிய பெருங்கடுங்கோ.

## 17

[தோழியிற் கூட்ட நாடிய தலைவன், தோழி குறை மறு திருத்தற் பொருட்டுக் கூறியது.]

காம நோயானது அதிகப்பட்டால் ஆடவர் பனை
மடலையுங் குதிரையெனக் கொண்டூர்வர். குவிந்த அரும்
பினையுடைய எருக்கமலர் மாலையையும் அணிந்துகொள்வர்.
மறுகிடைப் பிறர் தம்மைக்கண்டாரவாரிக்கவும் பெறுவர்.
இதுவுமன்றி மலையின் மேலிருந்து குதித்திறத்தல் முதலிய
பிறசெயல்களையு முடையராவர்.

பேரெயின் முறுவலார்.

## 18

[இரவுக் குறியில் வந்து நீங்குந் தலைமகனிடத்துத், தலை
வியின் பருவங் கூறித் தோழி வரைவு கடாயது.]

மூங்கில் வேலியமைந்த பலா மரத்தின் வேரிலே
பழக்குலை பொருந்திய பக்கத்தையுடைய மலை நாடனே!

பலா மரத்ினது சிறிய கொம்பிலே பெரிய பழந் தொங்கு
வதைப் போலத்; தலைவியினது சிறிய உயிரினிடத்திலே
உண்டாகிய காமநோய் மிகவும் பெரியது. அந்நிலையை
யறிந்தவர்கள் யாவர்? அவளை விரைந்து வரைந்து
கொள்ளும் பருவத்தை யுடையவனுவாயாக.

கபிலர்.

## 19

[தெளியச் செய்துந் தெளியாத ஊடலிடத்துத் தலை மகன் செப்பியது.]

மனமே! வீட்டுத் தோட்டத்திலுள்ள மரத்தின்மீது
படர்ந்த விளக்கத்னதயுடைய முல்லைமலர்கள் மணம்
வீசுதற்கிடமாகிய விவள், நம்மிடத்து எத்தகைய உற
வுடையவளாவளோ? எவ்வியென்னுங் கொடையாளியை
இழத்தலாலுண்டாகிய வறுமையையுடைய யாழ்ப்

பாணரது, அழகில்லாத தலை பொலி விழுந்திருத்தல் போலப் பொலி விழுந்து வருந்துவாயாக.

பரணர்





## 20

[தலைவன் பொருள் வயிற் பிரிதலை யுணர்த்திய தோழிக்குத் தலைவி சாற்றியது.]

தோழியே! அருளையு மன்பையு நீக்கித் தம் துணைவியை விட்டுப் பொருள் தேடும் முயற்சியிற் பிரியுந்தலைவர், அறிவுடையவராயின் அவ்வாற்றலையுடையோர் அறிவுடையவரே யாகுக. அவரைப் பிரிந்திருத்தற்கு வலியில்லாத நாம் மடமையுடையேமாகுக.

கோப்பெருஞ் சோழன்.

## 21 .

[தலைவி தானாற்றி யிருத்தலைத் தோழிக்குப் புலப்படுத்தும் பொருட்டுப் பருவம் மறுத்துக் கூறியது.]

தோழி! வண்டுகள் தேனுண்ணுதற்கு வந்து வீழும்படி, நெருங்கி மலர்ந்த நீளத்தை யுடைய பூங்கொத்துக்களைத் தழைகளினிடையே யிட்டுப் பொன்னாற் செய்ததும், அணிந்தும் கொள்ளுதற்குரியதுமாகிய தலையணிகளைக் கோத்துக்கட்டிய மகளிரது கூந்தலைப் போலக், கண்ணுக்குத் தோன்றுகின்ற புதிய பூக்களைக் கொண்ட கொன்றை மரங்களையுடைய காடானது, இது கார்ப்பருவமென்று தனது மலர்களாற் றெரிவிப்பினும் யானதனைத் தெளிய மாட்டேன். ஏனெனிலோ அவர் பொய்ம்மொழி புகலாராதலிலென்க.

ஓதலாந்தையார்.

## 22

[தலைவன் செயலாற் பிரிவுக் குறிப்பறிந்து வருந்திய தலைவியைத் தோழியாற்று வித்தது.]

மலை தனக் கழகாகக் கொண்டதும், வலமாகச் சுரித்ததும் ஆகிய வெண்கடப்ப மலரை யுடைய வேனிற் காலத்தில், மலர்ந்த பொலிவினையுடைய கிளையினிடத்தில் மணக்கின்ற நன்மணம் பரவிய விளக்கத்தையுடைய நெற்றி

யமைந்தவளே! நீர் சொரியுங் கண்ணையுடையவளாகி நீ யிங்கே தனியாகத் தங்க, நின்னைப் பிரிந்துசெல்லு மாற்ற லுடையவர் யாவர்? தலைவன் செலவு நின்னொடுதானாகும்.

சேரமானெந்தை.

## 23.

[கட்டுக் காணிய நின்ற விடத்துத் தோழி அறத்தொடு நின்றது.]

தேவதைகளை விளித்துப் பாடுங் கட்டுவிச்சியே! தேவதைகளை விளித்துப்பாடுங் கட்டுவிச்சியே!! சங்குமணி யினாலாகிய கோவையைப் போன்ற வெண்மையாகிய நல்ல நெடிய கூந்தலையுடைய கட்டுவிச்சியே!!! இன்னும் பாட்டு களைப் பாடுவாயாக. தலைவரது நெடிய குன்றத்தைப் பற்றிப் பாடிய பாட்டுக்களை யின்னும் பாடுவாயாக.

ஔவையார்.

## 24

[பருவங்கண் டாற்றாளாகிய தலைவி உரைத்தது.]

கரிய அடியையுடைய வேம்பின்
ஒள்ளிய பூவின் புது
வருவாயானது, எனது தலைவனில்லாமலும் தொலைந்து போவதோ? கொடிய மகளிருடைய நாக்கள் என் காதலர் என்னை நீங்கியகல, யாற்றின் கரையிலே முளைத்து வளர்ந்த வெள்ளிய கிளையை யுடைய அத்திமரத்தினது.
ஏழு நண்டுகளான் மிதிக்கப்பட்ட ஓர்
அத்திப்பழங் குழை
வதைப் போல, நான் துன்புறும்படி
பழிச்சொல் பகர்ந்து
முழங்கின.
பரணர்.

25.

[வரைவு நீடுதலான் மனங் கவன்ற தலைவி தோழிக் குரைத்தது.]

தோழியே! தலைவனென்னைக் களவின் மணந்த
காலத்திற் சாட்சியாவார் வேறு யாருமிலர். தலைவனாகிய
கள்வனொருவன் மாத்திரந்தானிருந்தான். தலைவன், தான்

கூறிய சபதத்தினின்றுந் தவறினால், யான்
செய்யத்தகுவது
யாது ? ஓடுகின்ற நீரில் ஆரல் மீனை
யெதிர்பார்த்து நிற்கும்
தினையினடியைப் போன்ற சிறிய பசிய
கால்களையுடைய
நாரையுமிருந்தது.
கபிலர்.

26

[தலைவியின் வேறுபாடு கண்டு, நற்றாயுஞ்
செவிலித்
தாயுங்
கட்டுவிச்சியை வினவிய காலத்திற் கட்டுவிச்சி, வேறு
பாட்டுக்குக் காரணம், பிறிதோர்
தெய்வமென்று கூறிய
காலை பாங்கியறத்தோடு நின்றது.]

அரும்புந் தன்மையில்லாமல் அலர்ந்த கரிய

அடியை

யுடைய வேங்கை மரத்தின் மேலே வளர்ந்த பெரிய கிளை

யில் இருந்த மயிலானது, மலரைக் கொய்கின்ற மகளிரைப்

போல விளங்குகின்ற நாட்டையுடைய தலைவன், தலைவிக்

குத் தக்கவனல்லான் போலக் கட்டுவிச்சி தீமையான வாச

கத்தைக் கூறினும், தேமாவின் கனியை அருந்தும் முள்ளைப்

போன்ற கூரிய பற்களையும், சிவந்த வாயினையுமுடைய

மலைகளிலாடும் வலிமை மிக்க குட்டியின் தந்தையாகிய

கடுவனும் அக்கொடியவனாகிய தலைவனையறியும். ஆதலின்

அது தன் கண்ணாற்கண்ட கூட்ட நிகழ்ச்சியைக் காணே னென்று பொய் சொல்லாது. வெள்ளிவீதியார்.

27.

[பிரிவிடையாற்றா ளெனக்கவன்ற

தோழிக்குத் தலைவி
யுரைத்தது.]
நல்ல பசுவினது இனிய தீம்பால்
கன்றினுமுண்ணப்
படாமலும், கறக்கும் பாத்திரத்தில் விழாமலும்
பூமியிற்
சிந்தி வீணாவதைப்போலத், தேமல் பொருந்திய
அல்குலை
யுடைய எனது மாமை யமைந்த
பேரழகை, எனக்
கும் பிரயோசனமில்லாமல், என் தலைவனுக்கும்
பிரயோ
சனமில்லாமல் பசலையானது தான் பருக
விரும்புகிறது.

கொல்லன் அழிசி.



**28**

[வரை விடை யாற்று ளெனக்கவன்ற
தோழிக்குத்

தலைவி சொல்லியது ]

சுழலுதலையும் அசைதலையுமுடைய தென்றற் காற்றா
னது வருத்த, அதனால் வருந்தும் எனது காமநோயை
யறிந்து கொள்ளாமல் கவலையின்றித் தூங்கும் ஊராரை
யான் முட்டுவேனோ ? அல்லது தாக்குவேனோ ? ஒரு
காரணத்தை மேற்கொண்டு ஆவென்றும் ஒல்லென்றும்
ஓசையுண்டாகக் கூப்பிடுவேனோ ? இன்னது செய்வ
தென்பதை யறியேன்.

ஔவையார்.

29

[இரவுக்குறியை நாடுந் தலைமகன், இரவுக்குறி மறுக்
கப்பட்ட காலை தனது நெஞ்சை நோக்கிக் கூறியது.]

மனமே! நல்ல வுரையை நீங்கிப் பயனற்ற வுரைகள்
பரவப்பெற்றுப் ; பெய்தலையுடைய மழையின்

நீரை யேற்
றுக் கொண்ட சுடப்படாத பசு மண்ணலாகிய பாண்டத்
தைப்போல, உள்ளத்தால் தாங்க முடியாத ஆசை வெள்
ளத்தில் நீந்தி நின்று, பெறுதற்கரியதைப் பெறுவான்
ஆசைப்பட்டனை ; உயர்ந்த மரக்கிளையிலுள்ள குட்டியை
யுடைய பெண் குரங்கு, தன் குட்டியால் தழுவப்பெற்று
அமைதலைப்போல, மனம் பொருந்தும்படி தழுவி என
துரையைக் கேட்கக் கூடியவர்களைப்' பெற்றால் உனது
போராட்டம் மிகவும் பெருமையை உடையது.

ஔவையார். **30**

[வரைபொருட் பிரிவுக்கு நீ வருந்திக் கலங்குவதென்னென்ற இருளைக்குத் தலைவி இயம்பியது.]

தோழியே ! கேட்பாயாக. பொய் பேசுதலில் வல்லவ ஞன தலைவன், என்னுடம்புடன் தழுவுதலைப் பொருந்திய

மெய்போலுந் தன்மையுடைய பொய்யாகிய கனவு மருட்டத், துயிலுணர்ந்தெழுந்து தலைவனென வெண்ணிப் படுக்கையைத் தடவுதலைச் செய்து பார்த்தேன். வண்டுகள் வீழ்ந்துழக்கிய குவளை மலரைப்போல மெலிந்து, உண்மையாகத் தனித்தவளாக விருந்தேன். ஆதலால் யான் அளி செய்யப் பெறத் தக்கவளாவேன்.

கச்சிப்பேட்டு நன்னாகையார்.

## 31

[நொதுமலர் வரைய வந்தபோது தலைவி யறத்தொடு நின்றது.]

மாண்புமிக்க தலைவனை வீரர் சேர்ந்துள்ள சேரிவிழாவின் கண்ணும், மகளிர் தம்முட்டழுவியாடுகின்ற துணங்கைக் கூத்தின் கண்ணும, ஆகிய எவ்விடத்துங் கண்டேனில்லை. யானும் ஆடுகின்ற ஒரு களத்திற்குரிய மகளே. சங்கினை யறுத்துச்

செய்யப்பட்டு என் கையினிடத்து விளங்கும் வளையலை நெகிழச் செய்த பெருமை பொருந்திய தலைவனும், ஆடுகின்ற களத்திலுள்ள ஒரு மகனே.

ஆதிமந்தியார்.

## 32

[குறையிரந்து பின்னின்ற தலைவன் தோழிக்குக் கூறியது.]

காலையும், பகலும், பிரிந்தவர் செயலறுதற்குரிய மாலையும், ஊரார் துஞ்சுகின்ற நள்ளிரவும், விடியற்காலையும் என்று இந்தப் பொழுதுகள் இடையே தோன்றுமாயின், காமமானது பொய்யாகும். பிரிவு வருமாயின் பனைமடலாற் செய்த குதிரையோடு தெருவினிடத்துத் தோன்றி, யாவருங் காணும்படி தனது காமம் இன்னாளால் நேர்ந்ததென்று வெளிப்படுத்தலும் பழியாகும். அது

செய்யாது
வாழ்ந்திருத்தலும் பழியாகும்.

அள்ளூர்நன் முல்லை.



33

[தூதாகச் சென்ற பாணன் கேட்கும்படி, தோழியை நோக்கித் தலைமகள் தூதிற்குடன் படுவாளாகக் கூறியது.]

தோழியே! இவன் ஒரு இளைய மாணக்கன். இவன் தன்னூரிடத்திலுள்ள மன்றத்தின்கண் ணைத்தன்மைய ளோ? பிச்சையுணவால் நன்குவளராத சரீரத்தோடு புதிதாகப்பெறும் விருந்தின் பொருட்டுச் செல்லுந் தலைமையையுமுடையவனாக விருக்கிறான்.

படுமரத்து மோசிகீரன். 34

[இனி விரைவில் வரைவு நிகழுமென்பதைத் தோழி
தலைவிக்குச் சொல்லியது.]

முன்னிடத்திலுள்ள கடற்கரையில் வசிக்கும் யானை

யங்குருகின் பெரிய கூட்டமானது, பகைவரைக் கொன்ற
வீரர்களது வெற்றி முழக்கத்தைக் கேட்டு அஞ்சுதற்கிட
மாகிய குட்டுவனது மரந்தை நகரைப் போன்ற
இவ்வூரி
லுள்ளவர்கள் ; தமது பனிச்சை விளங்குகின்ற நெற்றிக்
குரியவனும் அவனே என்பதையறிந்தும்: சுற்றத்தினர்
ஒறுக்கவும் வருத்தம் நீங்காராகித் தோழியர் பல
காரணம்
கூறி வருந்துதல் தகாதென்று கூறவும்
தெளியாதவர்க
ளாகியு முள்ளதன்மை தெளிந்தும்; தலைவரைப்
பிரிந்து
தனியராய் உறங்கும் வருத்த
மில்லாதவராகியும்;
இனியது கேட்டு மகிழ்ச்சியை யடைக
(இவ்வூரிலுள்ளவர்கள் என்றது தலைவியை)

கொல்லிக்கண்ணன். **35**

[பிரிவிடை மெலிந்த தலைவி தோழிக்குச் சொல்லியது.]

தோழி! தலைவர் பிரிந்த நாளில் உடன்
பட்டுக், கருப்
பத்தையுடைய பசும்பாம்பின் சூல்
முதிர்ச்சியைப் போன்ற

திரண்ட கரும்பினது குவிந்த அரும்பு மலரும்படி, நுண்ணிய மழை பொழிந்து அழிந்த துளி பொருந்திய தண்மையொடு வருதலையுடைய வாடைக்காற்றுப் பொருந்திய கூதிர்க்காலத்துப், பிரிந்தவர் பொருட்டு அழலால் எம்முடைய கண்கள் நிச்சயமாக நாணமில்லாதனவாயின.

கழார்க்கீரனெயிற்றி.

## 36

[வரைவிடை வைத்துப் பிரிய, அப்பிரிவைத் தலைவியாற்றாளெனத் தோழி கவல அதனைத் தலைமகளாற்றுவித்தது.]

தோழி! உருண்டைக் கல்லின் பக்கத்திலுள்ளதாகிய மாலை யென்னும் பெரிய கொடி, தூங்குகின்ற யானையின் மேற் படரும் குன்றங்களையுடைய நாட்டுக்குத் தலைவன், நான் நின்னெஞ்சிடமாக விருந்து பிரியேனென்று தோளை மணந்த காலத்தில் கெடாத உறுதிமொழியை என்னிடத்தில் கூறியது நின்னிடத்தில் வருத்தத்துக்குக் காரணமாகுமோ? ஆகாது. (அதனை நான் பொறுத்து ஆற்றியிருக்க நீ யேன் வருத்தப்படல்வேண்டும்?)

பரணர்.

37

[தலைவர் விரைவில் வருவாரென்று கூறித் தலைவியை யாற்றுவித்தது.]

தோழி

தோழி! தலைவர் நின்னிடத்தில் அதிக விருப்ப முடையவர் : நின்திறத்தில் அருளையுஞ் செய்வர். அவர் சென்ற வழிகள் பெண் யானையினது பசியை நீக்கும் பொருட்டுப் பெரிய கையையுடைய ஆண் யானை, மெல்லிய கிளைகளையுடைய யாமரத்தின் பட்டையை யுரித்து அதன் நீரை அப்பிடி பருகச் செய்யும் அன்பைக் காட்டுவதற்கு இடமாக வுள்ளன.

பாலைபாடிய பெருங்கடுங்கோ.



[வரைவு

38

நீடத் தலைவி தனது ஆற்றுமை தோன்றத்

தோழிக்குக் கூறியது.]

தோழி! காட்டிலுள்ள மயில், பாறையிலீன்ற முட்டைகளை வெயிலில் விளையாடும் குரங்கின் குட்டி யுருட்டுதற்கிடமாகிய மலை நாட்டையுடைய தலைவன் நட்பு, அவன் பிரிய மைதீட்டப்பெற்ற கண்களினின்றும் பெருகும் நீரோடு ஒரு படியாக, அப்பிரிவை நினைந்து வருந்தாமல் பொறுத்தலில் வல்லமையுடையவர்கட்கு மாத்திரம் எக்காலத்திலும் மிக நல்லதாகும்.

கபிலர்.

## 39

[பிரிவிடையாற்றல் வேண்டும் என்ற தோழிக்குத் தலைவி கூறியது.]

தோழி! நமது முலையினிடத்துத் தூங்குதலை வெறுத்தவர் சென்றவழி, கொடிய வலியையுடைய கடுங்காற்றானது மரக்கிளையிலே வீசுவதால், வாகைமரத்தினது நெற்றின் முற்றியவற்றல் ஒலித்தற்கிடமாகிய, மலைகளையுடைய கடத்தற்கரிய சுரமாகுமென்று கூறுவர்.

## 40

ஔவையார்.

[இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த பின்னர்த், தலைவியின் பிரிவச்சத்தை நீக்கக் கருதிய தலைமகன் கூறியது.]

என்னுடைய தாயும் நின்னுடைய தாயும் என்ன
உறவுடையவராவர் ? என் தந்தையையும் நின் தந்தையும்
எந்த முறையில் உறவினராவர் ? நானும் நீயும் எவ்வழி யால் உறவுடையோம் ? ஒருவித உறவும் இல்லையே ?
செம்மண் தரையில் வீழ்ந்த மழைநீர் அம்மண்ணின்
நிறத்தை யடைந்தாற்போல, அன்புடைய நமது இரு
வருடைய நெஞ்சமும் ஒன்றுபட்டு விட்டன.

செம்புலப்பெயனீரார்.





41.

[பிரிவிடை வேறுபாடு கண்டு கவன்ற தோழிக்குக் கிழத்தி கூறியது.]

தோழி! காதலர் அருகிலிருப்பாராயின் பெரிது மூவந்து திருவிழாக் கொண்டாடும் ஊரினர் மகிழ்வதைப் போலமகிழ்வேன். அவர் என்னைப்பிரிந்த காலத்தில் பாலைநிலத்திற் பொருந்திய அழகிய குடியை யுடைய சிற்றூரில், மனிதர்கள் நீங்கிச்செல்ல அணில் விளையாடும் முற்றத்தையுடைய தனிமையுள்ள வீட்டைப் போலப் பொலிவிழந்து வருந்துவேன்.

அணிலாடுமுன்றிலார்.

42

[தோழி, இரவுக்குறி விரும்பிய தலைவனுக்கு மறுத்துரைத்தது.]

நள்ளிரவின்கண் தொகுதியையுடைய பெரிய மழை பொழிதலால் நீர் பெருகி, அதனுல் அருவியானது மலைக் குகைகளில் ஒலிக்கும் நாட்டையுடைய தலைவனே! காமம் நீங்குவதாக விருந்தாலும் நின்னிடத்தில் எமக்குள்ள நட்பும் அழியுமோ? அழியாது.

கபிலர். 43

[பிரிவிடை மெலிந்த தலைவி சொல்லியது.]

தோழி! நான் தலைவர் நம்மைப் பிரிந்து செல்வாரல்லரென்று அலட்சியமாக விருந்து விட்டேன். பிரிந்து செல்வதை அவளுக்கு அறிவித்தால் அதற்கவள் உடன்படாள் என்று எண்ணித்தலைவர் சொல்லா தகன்ருர். அக்காலத்தே இருவரிடத்துமுள்ள இரண்டு பெரிய ஆண்மைகள் செய்த போரினுல், என் அல்லலையுடைய நெஞ்சம், நல்லபாம்பு கடித்து வருத்தப்படுவதைப் போல இப்பொழுது மிகக் கலக்கத்தை யடைகிறது.

ஔவையார்.

B



## 44

[உடன் போக்கின் பின்பு, அவர்களைத் தேடிச் சென்ற செவிலி காணுது வருந்திச் செயலற்றுக் கூறியது.]

எனது கால்கள் நடக்க மாட்டாது ஓய்ந்தன. எனது

கண்கள் தலைவனுந் தலைவியுமாக வருவாரைப் பார்த்துப் பார்த்து ஒளியை இழந்தன. நான் கூறுவது உண்மை யாகும். இந்த உலகத்திலே தலைவனுந் தலைவியுமாகப் பிறந்தவர்களோ, இடமகன்ற பெரிய ஆகாயத்தின் கண் ணுள்ள மீன்களைப்பார்க்கினும் பலராவர். (இவர்களுள் எனது மகளையும் அவளது தலைவனையும் எங்ஙனம் கண்டு பிடிப்பேன்?)

வெள்ளி வீதியார்

## 45

[பரத்தையிற் பிரிந்த தலைமகன் விட்ட தூதிற்குத், தலைவி உடன் பட்டாளென்பதைத் தோழி புலப்படுத் தியது.]

காலையிலெழுந்து விரைந்துசெல்லும்தேரைத்தயாரித்து,

வெள்ளிய ஆபரணங்களை யணிந்த பரத்தையரைத்

தழுவச்

சென்ற தலைவன், மிகச் சிறந்தவ னென்றெண்ணிச் சிறு வனைப் பெற்ற தலைவி அவன் வருதற் குடன்படுவாளாயி னும் மனம் சுழலுவாள். இத்தகைய குடியிற் பிறத்தல்

மிகத் துன்பம் தருவதாகும்.

ஆலங்குடிவங்கனார்.

## 46

[பிரிவிடை ஆற்ருளெனக் கவன்ற தோழிக்குத் தலைவி ஆற்றுவேனென்பது படச்சொல்லியது.]

தோழி! ஆம்பற்பூவின் வாடலை யொத்துக் குவிந்த சிறகுகளோடு வீட்டின் கண் வசிக்குங் குருவிகள், முற்றத் திற்
காயுந் தானியங்களைத் தின்று மன்றத்தின் கண்ணுள்ள எருவினது நுண்ணிய பொடியைக் குடைந்து



வீட்டி னிறப்பிடத்தே தங் குஞ்சுகளோடு தங்கியிருக்கும் மாலைக்காலமும் தனிமையும் அத்தலைவர் பிரிந்து சென்ற தேசத்தில் இல்லையோ? (அங்குமுளவாமாதலின் அவர் விரைந்து வருவார்.)

மாமலாடன்.

## 47

[இரவுங் தொழுகுங்காலை, முன்னிலைப் புறமொழி யாக நிலாவிற்கு உரைப்பாளாகத் தோழி உரைத்தது.]

நீடித்தலை யுடைய வெண்மையான

நிலாவே! கரிய்

அடியையுடைய வேங்கை மரத்தின் பூவுதிரப்பெற்ற குண்டுக்கல், பெரிய புலிக்குட்டியைப் போலக் காணப்படும் காட்டினிடத்தில், இரவின்கண் வருந்தலைவரது களவொழுக்கத்திற்கு நீ நன்மை தருவாயல்லை.

நெடுவெண்ணிலவினார்.

## 48

[தலைவன் தலைவியை எப்பொழுது வரைந்து கொள்வானோவென்று கவலையுற்ற தோழி சொல்லியது.]

மகரந்தப் பொடியாற் செய்த குளிர்ச்சியையுடைய விளையாட்டுப் பாவையானது, காலைப் பொழுதில் வருந்துதலாற் பிறந்த செயலறுதலை ஒழிப்பாயாகவென்று, விளையாட்டையுடைய மகளிர் கூட்டம் கூறக்கேட்டும், இத்தகைய தன்மை வாய்ந்த வருத்தத்தை அதிகமாகவுடையும் நல்ல நெற்றியை யுடைய தலைவியின் பசலை நீங்கும்படி, தலைவரிடத்திலிருந்து இவளுக்கு விருப்பத்தை யுண்டாக்கும்படியான ஒரு சொல் பிறக்கமாட்டாதோ?

பூங்கணுத்திரையார்.

## 49

[பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகனிடத்திற் றலைவி கூறியது.]

அணிலின் பல்லையொத்த முள்ளையுடைய தாறு முதிர்ந்த முள்ளிச் செடியையும், நீலமணியின் நிறத்தை

யொத்த கரிய நீரையுமுடைய கடற்கரையை யுடைய தலைவனே! இப்பிறப்புமாறி நமக்கு மறுபிறப்பு வந்தாலும், என்னுடைய தலைவன் நீயேயாகுக. நின்னுடைய நெஞ்சுக்குகந்த காதலி நானே யாகுக.

அம்மூவனார்.

**50**

[பரத்தையிற் பிரிந்த தலைவன் விட்ட தூதுவரை நோக்கித் தலைவி கூறியது.]

வெண் சிறுகடுகைப்போன்ற சிறிய பூக்களையுடைய ஞாழல் மரத்தின்பூ, செம்மையாகிய மலர்களையுடைய மருத மரத்தின் பழம் பூவோடு பரந்து, தலைவருடைய ஊரின் நீர்த்துறையை அழகு செய்தது. அவர் முன்பு சேர்ந்த எனது தோள், விளங்கும் வளை யல்கள்

மூட்டு

வாய்ச் சங்கைக் கடந்து நெகிழும்படி மெலிந்து தனிமை யையே அழகாகப் பெற்றது.

குன்றியனார்.

## 51

[கலந்து மகிழ்ந்த தலைவனொடு மணம் நிகழுமென் பதைத் தோழி தலைவிக்குக் கூறியது.]

வளைவாகிய முள்ளையுடைய கழி முள்ளியினது மிகக் குளிர்ச்சியையுடைய கரியமலர், நூலறுந்துதிர்ந்த முத்துக் களைப்போலக் காற்றாற் சிதறித் துறைதோறும் பரவும் ஒள்ளிய மணல் பொருந்திய கடற்கரைக்குத் தலைவனை நானும் விரும்புகிறேன். நினது தாயும் விரும்புகிறாள். நினது தந்தையும் அவனுக்கு நின்னை மணஞ் செய்து கொடுக்க விரும்புகிறான். பழிச் சொல்லுரைக்கும் ஊரி னரும் நின்னை அவனொடு சேர்த்துத்தான் சொல்லுகின்றனர்.

குன்றியனார்.

வரைவுக்காம் வினைகள் விரைந்து செய்யப்படுதலைக் கண்டு மகிழ்ந்த தலைவிக்குத் தோழி கூறியது.]

நரந்தப் பூவின் மணம் விளங்குகின்ற அடர்த்தியாகிய கரிய கூந்தலையும், வரிசைப்பட விளங்கும் வெண்மையான பற்களையும் உடைய பெண்ணே! பொருந்திய யானைகள் துவைத்தமையா லுண்டாகிய பள்ளத்தில் தங்கிய நீர்செறிந்த மலைப்பக்கத்திலுள்ள தெய்வத் தால் விரும்பப் பெற்ற

பான்மையையுடையையாகி, நீ வருந்துதலைக் கண்டு நான் சிறிது சிறிதாக அந்நாளில் வருந்த வில்லையோ?

பனம்பாரனார்.

53

[வரைவு நீடித்த காலை தோழி தலைமகனுக்குச் சொல்லியது.]

தலைவனே! முற்றத்திலுள்ள அரும்பு முதிர்ந்த புன்னை மரத்தின் பூக்கள் உதிர்ந்து விளங்கும் வெள்ளிய மணலின் பரப்பு, வெறியாட்டெடுப்பவனாற் செய்யப்பெற்ற வெறி யாட்டுக்களந் தோறும், செந்நெலாலாகிய

வெண்பொரி
யைச் சிதறினுலொத்த தோற்றத்தைக் கொடுக்கும் மணல் பொருந்திய எம்மூரின் அகன்ற நீர்த்துறையில், நீ தலைவியினது முன் கையைப் பற்றிக்கொண்டு தெய்வ மகளிரைச் சுட்டிக் கூறிய உறுதிமொழி எம்மைத்
துன்புறுத்தின. (நீ விரைவில் மணந்துகொள்ளுதல் வேண்டும்.)
கோப்பெருஞ் சோழன்.

54.

தலைவன் தலைவியை எல்லைப்படுத்திக் கொ ள் ள ா தொழுகுங் காலை, வரைவின்மையைக் குறித்துக் கவன்ற தலைவி கூறியது.]



தோழி! நான் இவ்விடத்திலிருக்கின்றேன். என்

பெண்மை நலனே; தினைப்புனக் காவலர் விடும் கவண் கல்லின் ஓசைக் கஞ்சிக் காட்டில் யானை கைவிட்ட பசிய மூங்கிலானது, மீனைப் பற்றிக்கொண்ட தூண்டிலைப் போல மேலே செல்லுதற்கிடமாகிய நாட்டையுடைய தலைவனோடு, பொருந்திய அந்தக் காலத்திலேயே சென்று விட்டது.

மீனெறி தூண்டிலார்.

55

[தலைமகன், சிறைப்புறத்தானாகக் கேட்பத் தோழி
கூறியது.]

இந்த நலல சிறிய ஊரானது, கரிய கழியினிடத்திலே
யுள்ள நீலமணிபோன்ற பூக்கள் குவியும்படி, நறிய அலை
யிடத்திலிருந்து வெளிப்பட்ட பிதிராகிய துளியையும்,
மேகத்தைப் பொருந்திப் பிரிந்தோர் செயலறும்படி வந்த

தடவுதல் பொருந்திய வாடைக் காற்றையும், துன்பத்தைத் தரும் தங்குமிடத்தை யுடையதாகின்ற சில நாட்களை யுமுடையது.

நெய்தற்கார்க்கியர்.

## 56

[தலைமகளை யுடன்கொண்டு போதலை மறுத்துச் சென்ற தலைவன், பாலை நிலத்தின் பான்மையைக் கண்டு பகர்ந்தது.]

வேட்டைத் தொழிலையுடைய செந்நாய் தோண்டி யுண்டு மிகுதிப்பட்டதும், காட்டு மல்லிகை மலர் மூடிய அழுகல் நாற்றத்தை யுடையதுமாகிய சிறிது நீரை, வளை பொருந்திய கையையுடைய எமது தலைவி, எம்மோடுண் ணுதற்கு வருக. வந்தால் என் மனத்தின்கண் விரும்பிய மாந்த அத்தலைவி மிகவும் இரங்கத்தக்காள்.

சிறைக்குடியாந்தையார்.

57

[காவல் மிகுதிக்கண் தலைவி கவன்று
தோழிக்குச்
சொல்லியது,]

செய்யக் கடவனவாகிய முறையை
அறிந்து தலைவன்
தலைவியாகப் பொருந்தி வந்த இவ்வுலகத்தில்,
பிரிவினால்
தனிமைப்பட்ட துன்பம் நீங்கித் தப்புவதற்குப் ;
பூவானது
இடைப்பட்ட அற்பகாலங்கூடப் பல்லாண்டு
கடந்தாற்
போன்ற துன்பத்தை யுண்டாக்கும்
தன்மையையுடைய,
நீரின்கண் வசிக்கின்ற மகன்றிற் பறவைகளின்
புணர்ச்சி
யைப் போலப், பிரிதலற்ற குறையாத
காமத்தோடு எம்
மிருவருடைய உயிர்களும் போவனவாகுக.

சிறைக்குடியாந்தையார்.

58.

[தன் காமநோய் நீங்கச்செய்த லரிதென்று தலைவன் பாங்கனுக்குக் கூறியது.]

இடித்துரைக்கும் நண்பரே ! உமது
வேலையாக எனது
காமநோயை நிறுத்தினால் மிக நன்று.
கதிரவன் வெம்
மையை வீசுவதாலுண்டாகிற
வெப்பத்தையுடைய பாறை
யினிடத்தே, கையற்ற ஊமன் கண்ணினாற்
பாதுகாத்துக்
கொண்டிருக்கின்றதற்கு
முயலும் உருகிய வெண்ணெயைப்
போல,
என்பாலுண்டாகிய இக்காமநோய் பரவி விட்டது,
பொறுத்துக் கொண்டு நீக்குவதற்கருமையாக
விருக்கின்
றது.

வெள்ளிவீதியார்.

59

[பொருட் பிரிவின் பொருட்டுப் பிரிந்த தலைவனை நினைந்துவருந்திய தலைவிக்குத் தோழி சாற்றியது.]

ஒருகண் மாக்கிணையென்னும் பறையை இயக்குந்
தாளத்தையுடைய பாணர் முதலிய இரவலரைப் பாது
காப்பவனது அரலைக் குன்றத்தின் கண்ணுள்ளதும்,



அகன்றவாயையும் ஆழத்தையும் உடையதுமாகிய சுனை
யின் கண் மலர்ந்த குவளை மலர்களோடு, சேர்த்துத்
தொடுத்த காட்டு மல்லிகையின் மணம் வீசும் நின் நல்ல
நெற்றியைத் தலைவர் மறப்பரோ? பல நாள் முயலினும்
பாலைநிலம் பல குறுக்கிட்ட கிடைத்தற்கரிய பொருள்

விரம்பாவாதலின் தலைவர் அதிக நாளைக்கு
நீட்டித்துத்
தங்குதலைச் செய்யார்.

மோசிகீரனார்.

## 60

[பிரிவிடை யாற்றாமையிற்றலைமகள்
தோழிக் குரைத்
தது.]

குறுகிய அடியையுடைய கூதளஞ் செடி
அசைந்த
உயர்ந்த மலையிலுள்ள பெருந் தேனடையைக்
கண்ட
முடவன், உள்ளங்கையைச் சிறு பாத்திரம் போற்
குவித
துக் கீழே யிருந்துகொண்டே அத்தேனடையைச்
சுட்டிக்
காட்டி நக்கினாற்போலத், தலைவர் தண்ணளி
செய்யாரா
யினும் விரும்பாராயினும், பலமுறை அவரைப்
பார்த்தல்
என் மனத்திற் கின்பத்தைக் கொடுக்கும்.

# 61.

[பரத்தையிற் பிரிந்த தலைமகனது தூதாக வந்தார்க்
குத் தோழி யுரைத்தது.]

தச்சனாற் செய்யப்பட்ட சிறிய குதிரை பூட்டப்பட்ட
தேரில் இவர்ந்து இன்பத்தை யடையா ராயினும், கையா
லிழுத்து இன்பத்தையடையுஞ் சிறுவர்களைப்போல் ; தலை
வனைச் சேர்ந்து தழுவி இன்பமடையேமாயினும், நல்ல
தேர்களையும் பொய்கைகளையு முடையதலைவனது நட்பை
மேன்மேலும் பெருகச் செய்து இன்ப மடைந்தேம்.
அதனால் வளைகள் கழலாது இறுகின. (தலைவன் வந்து
செய்யத்தக்கது யாதுமில்லை. என்பது குறிப்பு.)

தும்பிசேர்கீரன்.

62

[இடந்தலைப்பாட்டின்கண் தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறியது.]

காந்தள் மலரையும், தோற்றிய அரும்பிலிருந்துண்டாகிய பருவ மலர்களாகிய முல்லைப் பூக்களையும், வாசனை பொருந்திய இதழ்களையுடைய குவளை மலர்களோடு பொருந்தும்படி கலந்து அழகியதாகத் தொடுக்கப்பட்ட பெருமை பொருந்திய மாலையைப் போல, நல்ல வாசனையை யுடைய தலைவியின் சரீரம் தளிரைக் காட்டிலும் சிறந்தது. தழுவுதலுக்கும் மிக இனிமையாக விருக்கும்.

சிறைக்குடியாந்தையார்.

63

[பொருள் தேடவேண்டுமென்று துணிந்த நெஞ்சை நோக்கித் தலைவன் கூறியது.]

இரவலர்க்கீதலும் இன்பங்களைத் துய்த்தலும் பொருளற்றவர்கட்கில்லை யென்று நினைத்துப் பொருள் தேடுதற் காம் வினைகளை மிக யோசிக்கின்றாய். அப்பொருள் தேடுதற்காரியத்திற்கு அழகிய மாமை நிறத்தையுடைய தலைவியும் வருமோ? அல்லது என்னை மட்டும் செல்லச் சொல்லுகின்றாயோ? நெஞ்சே சொல்லுவாயாக.

உகாய்க்குடிகிழார்.

## 64

[பிரிவிடையாற்றாமை கண்டு, வருவரெனச் சொல்லிய தோழிக்குத் தலைவி யுரைத்தது.]

தோழி! பல பசுக்கள் நீண்ட தூரத்திற்குச் சென்றுள்ளனவாக. அவை தங்கியிருத்தற்குள்ள புல்லிய இடத்தை நோக்கி மாலை நேரத்தில், மடப்பம்

பொருந்திய கண்
களையுடைய கன்றுகள் தலை தூக்கிப் பார்த்து வருந்திணற்
போன்ற, தம் வரவு நோக்கிய துன்பத்தையுடையே
மாதலை



அறிந்திருந்தும், தூர தேசத்திற்குச் சென்றவர்
இன்னும் தூர தேசத்திலேயே இருக்கின்றார்.

கருவூர்க் கந்தப் பிள்ளை.

## 65

[தலைவன் வருவதாகக் கூறிச் சென்ற பருவம்
வந்த இடத்து வருந்திய தலைவி தோழிக் குரைத்தது.]

வலிய பருக்கைக் கற்களினிடத்தேயுள்ள
தெளி வுடைய நீரைப் பருகிய ஆண்மான்,
இன்பத்தை யடைதற் குரிய தன்னுடைய
பெண்மானோடு களிப்பினாற்றுள்ளி விளையாடவும்,
வாராதிருக்கின்ற தலைவர் ; திரும்பி வருதலை
விரும்பி மிக வருந்தித் தங்கும் பொருட்டு இருந்தீரோ
என்று கேட்பதற்கு வந்தாற் போல, மழைத்
துளியைத்

தருகின்ற குளிர்ந்த கார்காலம் வந்தது.

கோவூர்க்கிழார்.

## 66

[பருவங் கண்டு வருந்திய தலைமகளை நோக்கித் தோழி
பருவம் மறுத்துக் கூறியது.]

கற்கள் விளங்கும் பாலை நிலத்தைத் தாண்டிச் சென்ற
தலைவர், வருவதாகக் கூறிச் சென்ற பருவம் வராமலிருக்க வும், பருவமற்ற காலத்திலே பெய்யும் மழையைக் கார் காலத்து மழையென்று நினைத்து, நெருங்கும்படி கொம்பு களில் வரிசையாகப் பூங்கொத்துக்களைப் புறப்படச் செய் தன. ஆகையால்
அடிபரந்த கொன்றை மரங்கள் உண்மை யாகவே அறியாமையையுடையனவாக விருக்கின்றன.

கோவதத்தன்.

## 67

[தலைவனது பிரிவையாற்றாத தலைவி, தலைவர் நம்மை நினையாரோ என்று தோழிக் குரைத்தது.]

தோழி! கிளி, வளைந்த தனது அலகினிடத்திலே கொண்ட வேம்பினது விளக்கம் பொருந்திய பழம், புதிய

குறுந்தொகை வசனம்

27

பொற்கம்பியை இடையே செலுத்தும் பொற் கொல்லனது
முனை மாட்சிமைப்பட்ட கூரிய கைந்நகத்திற் கொண்ட
பொன்னுபரணத்திற்குரிய ஒரு காசை ஒத்திருக்கும்படி விளங்குகின்றதும், நிலம் கரிந்துள்ளதும், கள்ளியை யுடையதுமான பாலை நிலத்தைக் கடந்து சென்ற தலைவர், என்னை நினைக்க மாட்டாரோ?

அள்ளூர்நன்முல்லை.

68

[பிரிவினிடத்துத் தலைவி மெலிந்து கூறியது.]

குறும்பூழ்ப் பறவையின் காலையொத்த செம்மையான
காலையுடைய உழுந்தினது மிக முற்றிய

காய்களை, மான்
கூட்டங்கள் தின்னும் பொருட்டுக் கவரும் அரிய முன்
பனிக்காலத்திற்கு மருந்து, என்னை முன்பு சேர்ந்த அவ
ருடைய மார்பேயாகும் வேறு இல்லை.

## 69.

அள்ளூர்நன் முல்லை.

[தலைவன் இரவுக்குறியினிடத்து வருதலைத் தோழி மறுத்தது.]

கரிய கண்களையும் தாக்குதலையும் உடைய ஆண் குரங்கானது இறந்து விடக், கைம்மைத் துன்பத்தை யாற்ற மாட்டாத பெண் குரங்கானது, தாவுதல் பழகாத தனது
குட்டியைச் சுற்றத்தினிடத்திலே ஒப்புவித்து விட்டு, ஓங்கிய மலைப்பக்கத்தில் தாவி உயிரைமாய்த்துக் கொள்ளும் சாரல் பொருந்திய நாட்டையுடைய தலைவனே! நடு இரவில் வரற்க. அங்ஙனம் வரின் நினக்கு யாதேனும் தீங்கேற்படுமென்று நாங்கள்

வருந்துகின்றோம்.'

கடுங்கோட் கரவீரன்.

## 70

[புணர்ந்து நீங்குந் தலைவன் தன் நெஞ்சிற்குப் புகன்றது.]



ஒடுங்கிய நெய்ப்பையுடைய கூந்தலையும், ஒளி பொருந்திய நெற்றியையும் உடைய தலைவி, வாசனையையும் தண்மையினையுமுடைய தன்மையள். ஆயினும் பிரிவுக் காலத்தில் துன்பத்தைத் தருபவள். இத்தன்மையளென்று அவளைப் புகழ்ந்து பேசுதலை நானறியேன். அவளுடைய சொற்கள் மிருதுத் தன்மை வாய்ந்தன. யானவளைச்

சேரும்போது பஞ்சணையைப்போல மிக மெல்லிய தன்
மையையுடையவள்.

ஓரம் போகியார்.

71

[பொருள் தேடுதலை விரும்பிய நெஞ்சிற்குத் தலைவன்
கூறியது.]

அரும்பிய தேமலையுடைய அழகிய பெருமை வாய்ந்த
இளமுலையையும், பெரிய தோளையும் குறுகிய இடையினையு
முடையவளும், கற்கள் பொருந்திய காட்டையுடையவ
ராற் பெறப் பெற்றவளுமாகிய தலைவி, எனக்கு உண்ணு
தற்காம் அமிழ்தமாகவும் செல்வமாகவும் விளங்கு
கின்றாள்.

கருவூர் ஓதஞானி.

## 72

[வேறுபாடு கண்டு வினவிய பாங்கனுக்குத் தலைவன் உரைத்தது.]

இனிய மொழியினையும் திரண்ட மெல்லிய தோளினையுமுடையளாய், மலைப்பக்கத்திலுள்ள பருத்தி விளைத்த தினைப்புனத்தின்கண் முதிர்ந்த தினைகளை யுண்ணவரும்
குருவியினங்களை ஓட்டுகின்றவளாய, ஒருத்தியின் பெரிய குளிர்ந்த கண்கள், மலரினை யழகில் ஒத்துச் சுழலுந் தன்மையையுடையன. அவை அம்பினை யொத்து எல்லாரும் அறியும் வண்ணம் எனக்கு நோயைச் செய்தன.

மளளனா. குறுந்தொகை வசனம்



## 73

[பகற்குறி இரவுக்குறிகளை மறுத்த தோழி தலைவிக்
குக் கூறியது.]

தோழியே! நீ தலைவனது மார்பையே விரும்புதலு

டையை. நன்னனது நல்ல காவன் மரமாகிய மாமரத்தை
வெட்டி, அவனது நாட்டிற் சென்ற வஞ்சினத்தையுடைய
கோசரைப் போலச், சிறிதளவு வன்கண்மையையுடைய
சூழ்ச்சியும் வேண்டும். நீ அதுபற்றி வருந்தற்க.

பரணர்.

## 74

[தோழி தலைவன் குறைமறுதவாற்றாற் தலைவிக்குக் கூறியது.]

அவிழ்த்துவிடப்பட்ட குதிரையின் வேகத்தைப்போல,
வளைத்துப் பின் விடப்பட்ட பசிய மூங்கில் ஆகாயத்திற்
செல்லும் குன்றத்தையுடைய நாட்டுக்குத் தலைவன், நாம்
தன்னை நினைந்து மெலிதலை யறியானாகித் தானும் வேனிற்
காலத்தின் வெம்மையை ஆற்றாத இடபத்தைப்போல,
நமது மாட்சிமைப்பட்ட

நலத்தை விரும்பி மெலிந்தான்.

விட்ட குதிரையார்.

# 75

[தலைவன் வரவுணர்த்திய பாணனுக்குத் தலைவி கூறியது.]

பாண! தலைவரது வரவை நீ கண்டாயோ? அன்றிக் கண்டாரிடத்திருந்துங் கேட்டாயோ? யாரிடத்திருந்து அறிந்தனை? உண்மையை அறிய விரும்பினேம். ஆதலின் சொல்லுவாயாக! சொன்னால் வெள்ளிய கொம்பையுடைய யானைகள் சோனையாற்றிற் படிந்து விளையாடும் செல்வமிக்க பாடலிபுத்திர நகரத்தைப் பெறுவாயாக!

படுமரத்து மோசிகீரனார்.

## 76

[பிரிவை யுணர்த்தச் சென்ற தோழியை நோக்கித் தலைவி கூறியது].

மலையிலுள்ள சேம்பினது அசையும் வளவிய இலையைப், பெரிய யானையின் காதுபோலத் தோன்றும்படி தடவிக் குளிர்ச்சியையுடைய வாடைக் காற்று அசைதற்குரிய மிக்க பனியையுடைய முன் பனிக்காலத்தில், நடுங்குதற்குக் காரணமாகிய துன்பத்தை நானடையும்படி, கன்மலைபோலொத்த மார்பையுடைய தலைவர், காந்தள் வேலியோங்குகிற மலைபொருந்திய நல்ல நாட்டிடத்துப் பிரிந்து போவாரென்று கூறுகின்றனர்.

கிள்ளிமங்கலங்கிழார்.

## 77

[பிரிவின் கண் ஆற்றாத தலைவி தோழிக்குக் கூறியது.]

தோழி ! ஒன்று சொல்லுவேன் கேட்பாயாக ! கொடிய பாலை நிலத்தில் இறந்த வழிப்போக்கர்களுடைய யாக்

கையை மறைத்த தழையைச், செயற்கையாக இட்ட குவிய லானது, உயர்ந்த நல்ல யானைக்குப் பொருந்திய நிழலாக விளங்கும் பாலை நிலத்தில் சென்ற தலைவர் திறத்தில்,

மெலிந்தனவாகிய பரந்த என் மெல்லிய தோள்கள் தவறுடையனவெனின் சிறிதும் தவறில்லாதன.

மதுரை மருதன் இளநாகனார்.

## 78

[பாங்கன் தலைவனை நோக்கிப் பகர்ந்தது.]

பெரிய மலையினுச்சியிலுள்ள நெடிய வெள்ளிய அருவி யானது, அறிவு பொருந்திய கூத்தரது முழவைப்போல ஓசையைச் செய்து பக்க மலையின்கண் வீழும் விளங்குகின்ற மலையையுடைய தலைவ! காமம், நன்மையைச்



சிறிதும் உணரார் மாட்டும் சென்று தங்குகின்ற அறிவின்மையை யுடையது. ஆதலின் அது

வெறுக்கத் தக்கது.

நக்கீரனார்.

## 79

[பொருள் வயிற் பிரிந்த தலைவனை நினைத்த தலைவி தோழிக்குச் சொல்லியது.]

தோழி! பிரிதற்கு நாம் ஒருப்படேமென்ற தவற்றினாற் சொல்லாது செல்லுதலில் வல்லவராகிய தலைவர், காட்டு யானையால் பட்டை விரும்பி யுண்ணப்பட்ட பொரிந்த அடியையுடைய ஓமை மரத்தினது, காற்று மோதும் நீண்ட கிளையின் அசைதலையுடைய வற்றற் கொம்பிலேறி, ஓய் யென்று புலம்புகிற குரலையுடையனவாகிய ஆண்புறுக்கள் பெண்புறுக்களை யழைக்கும் பாலை நிலத்திற் பொருந்திய அழகிய குடிகளையுடைய சிற்றூரில் தங்கினாரோ?

குடவாயிற்கீரனக்கன்.

## 80

[தலைவிக்குப் பாங்காயினார் கேட்பப் பரத்தை சாற்றியது.]

நாம், எமது கூந்தற்கண் ஆம்பலினது புறவிதழொடிந்த முழுப்பூவைச்சூடி, அதிக நீர் வரப்பெற்ற பெரிய துறையை விரும்பிப் புனல் விளையாடலைச் செய்வாம் சேர்கின்றேம். தலைவி இங்ஙனம் விளையாடுதலை யஞ்சுவாளாயின், வெம்போரில் பகைவரை நடுநிலை யுண்டாகும்படி வஞ்சியாது எதிர் நின்று கொல்லும், பலவேற்படையை யுடைய எழினியென்னும் உபகாரியினது, போர்முனையிடத்தேயுள்ள பசுக்களின் வரிசையைப் போலத், தன் கொழுநன்மார்பைச் சுற்றத்தாரோடும் காத்துக் கொள்வாளாக.

ஔவையார்.



## 81

[தோழியிற் கூட்டங் கூடிப் பிரிந்ததலைவனுக்குத்

தோழி கூறியது.]

இவள், நின்சொல்லை யேற்றுக் கொண்ட என் சொல்லைத் தெளிந்து, பசிய அரும்புகளை யுடைய ஞாழல் மரத்தினது பல கிளைகளடர்ந்த ஒரு பக்கத்தில், புதிதாக விருந்த தன் பெண்மை நலத்தை இழந்ததனு லுண்டான தனிமையையுடையள். நிலவையும் இருளையும் போலப் புலால் நாற்றம் வீசும் அலைகளையுடைய கடலும், அதன் கரையிலுள்ள சோலையும் காணப்படுகிற மடல்கள் தாழ்ந்த பனைமரங்களையுமுடைய எமது சிறிய நல்ல ஊர் அதோபார். இனி எம்மை மறவாது நினைத்தல் வேண்டும்.

வடமவண்ணக்கன்.

82

[பருவங்கண்டு வருந்திய தலைவி வருவரென்று வற்புறுத்துந் தோழிக்குச் சொல்லியது.]

தோழி ! மலைப்பக்கத்திலுள்ள பெரிய தினைப்புனத்திலுள்ள குறவனது சிறிய தினையரிந்த மறுகாலிடத்தில், கொழுவிய அவரைக் கொடி மலருகின்ற அரிய பனியையுடைய முன்பனிக் காலத்திலும் வராத தலைவர், நீளத்தையுடைய வளைந்த கூந்தலை வகிர்ந்து முதுகைத் தடவி அழேலென்று கூறி, முன்பு நமது அழுத கண்ணைத்துடைப்பர். இப்பொழுது அவர் எத்தன்மையை யுடையவராக இருக்கின்ருரோ ?

கடுவன்மள்ளன்.

## 83

[தலைமகன் வரைந்தெய்துதல் உணர்த்திச் செவிலியைத் தோழி வாழ்த்தியது.]

தமதில்லத்தின் கண்ணிருந்து தமது பொருளை உண் டாற் போன்ற இன்சுவையைத் தருவனவாகிக், கிளை



தோறும் இனிய பழங்கள் தொங்குகின்ற பலாமரங்களை யுடைய உயர்ந்த மலைநாடனை, வரைதற்குரிய பொருளோடு வருவானென்று கூறிய அன்னை, பெறுதற்கரிய அமிழ்தமே. உண்ணும் உணவாகப் பெரும்புகழுடைய சுவர்க்கத்தைப் பெறுவாளாக.

வெண்பூதன்.

## 84

[உடன் போக்கின்பின் செவிலித்தாய் உரைத்தது.]

சுழலும்படி யிட்ட தோள்வளையையுடைய ஆயென் னும் வள்ளலது, மேகந்தவழுகின்ற பொதிய மலையின் வேங்கை

காந்தள்களினது மணத்தை வீசி, ஆம்பல்மலரைக் காட்டிலும் குளிர்ச்சியையுடையளாகிய என் மகள் ஒரு முறை நான் தழுவிய தோடமையால், மறுமுறையும் தழு விய காலத்து வியர்த்தே னென்று கூறினாள். நான் தழு வியது அவளுக்குத் துன்புண்டாகியதன் காரணத்தை அப்பொழு தறிந்திலேனாயினும் இப்பொழுதறிந்தேன்.

மோசிகீரன்.

## 85.

[வாயில் வேண்டிச் சென்ற பாணனுக்குத் தோழி கூறியது.]

ஊரினுள்ளிருக்கும் குருவியின், துள்ளிய நடையை யுடைய ஆண்பறவையானது, சூன் முதிர்ந்த பெண் குருவிக்குப் பொறையுயிர்த்தற்குரிய இடத்தை யமைக் கும் பொருட்டுத், தேன் பொதிதலைக் கொண்ட

இனிய கோலையுடைய கரும்பின் வாசனை யற்ற வெண்மலரைக் கோதியெடுக்கும்
புது வருவாயையுடைய ஊருக்குத் தலை வன், பாணனது வாய்ப் பேச்சளவில் தான் எல்லாரினும் இனியன். தலைவி மாட்டுப் பேரன்பினை யுடையன்.
(உண்மையில் இங்ஙனம் அல்லன்).

வடமன் தாமோதரன்.



86.

[ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குத் தலைவி சொல்லி
யது.]

மழைத்துளி மிகுந்து வாடைக்காற்று வீசித்தூவுகின்ற கூதிர்ப்பருவத்தின் நடு இரவில், எருதானது ஈயொலிக்குந்
தோறும் அலைக்கின்ற நாவினாற்

சப்திக்கும் கொடிய மணி
யின் மெல்லிய ஓசையைத், தடுக்கப்பட்ட நீர் உடைந்து
துளித்துளியாக விழுகின்ற செவ்வரி பரந்த குளிர்ந்த கண்
ணேடும், தாங்குதற்கரிய
காமநோயோடும் தனிமை வருத்
துதலாற் கலங்கிக் கேட்டு வருந்துவார் என்னை
யல்லாமல்
வேறு மகளிரும் உள்ளார்களோ ?

வெண்கொற்றன்.

## 87

[சூள் தப்பிய தலைவனைத் தெய்வம்
ஒறுக்காதிருத்தற்
பொருட்டுத் தலைவி தெய்வம் பராயது.]

மன்றத்தின் கண்ணுள்ள மரத்திற்றங்கும் பிறருக்கு அச்சம் விளைத்தல் முதிர்ந்த தெய்வம், கொடியோரை வருத்துமென்றுயர்ந்தோர் கூறுவர். எங் தலைவர் அத் தெய்வத்தாலொறுத்தற்குரிய கொடுமையையுடையவ ரல்லர். என் நெற்றி நான் அவரை விரும்பியதாற் பசந்தது. மனம் அவர் திறத்து நெகிழ்ந்தமையால் மெல்லிய என் தோள் மெலிவுற்றது.

கபிலர்.

## 88

[தலைவன் இனி இரவிலே வருவானென்று தோழி தலைவிக்குக் கூறியது.]

தோழி! சப்திக்கின்ற வெள்ளிய அருவியையுடையமலை நாடன், சிறிய கண்ணையுடைய பெரியகளிறு வலிமையை யுடைய புலியைத்தாக்கிப்; பழைய வலி சோர்தற்கிடமாகிய, மக்கள் அடைதற்கரிய சாரலின் வழியே இடையிரவில்



வருதலையும் செய்வான். நாம் அவன் வரும்பழிக்கு நாணு

தல் கூடாது.

மதுரைககதககணணன.

## 89

[தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி தன்னுள்ளே

சொல்லுவாளாய்ச் சொல்லியது.

பெரிய ஆபரணத்தை யுடைய சேரனுக்குரிய அச்சந்

தருதல் மிகுந்த கொல்லிமலையிலுள்ள கரிய கண்களை

யுடைய தெய்வம், அம்மலையின் மேற்குப் பக்கத்திலெழுதிய

நல்ல இயல்பையுடைய பாவையை யொத்த இந்த மெல்

லிய இயல்பையுடைய தலைவி, தலைவன் பெயரைப் பாடி இடிப்பாளாயின், பரந்த அடியினையுடைய உரலினது பகுவா யிடத்துத் தானியம் இடிக்கும்பொழுது

பாடும் வள்ளைப் பாட்டைக் குறித்து அயலார்கள் குறை

கூறுதலையுஞ் செய்வார்கள்.

அறியாமையையுடைய இவ்

வூரினர் கூறும் சொற்களின் பொருட்டு நோதலாற் பயன்

யாது?

பரணா.

**90.**

[வரைவு நீடித்த இடத்து ஆற்ருளாய தலைவிக்குத்

தலைவன் சிறைப் புறமாகத் தோழி கூறியது]

தோழி! சூல் முற்றி: மிளகுக் கொடி வளர்கின்ற மலைப்பக்கத்தில் இரவில் முழக்கத்தைச் செய்த மேகத்தினது பெரிய மழைக்கால் வீழ்ந்தனவாக. மிகுந்த மயிரையுடைய ஆண் குரங்கு தீண்டியதனுல் நழுவிய பூமணத்தை

வீசும் பலாப்பழத்தை, மலையிலிருந்து இழியும் அருவியானது
நீருண்ணுந் துறைக்கட் கொண்டு செல்லுகின்ற குன்று
களுள்ள நாட்டையுடைய தலைவனது நட்பு, நினது மெல்
லிய தோள்களை மெலியச் செய்தும் அமைதியைத் தந்தது.
இது எத்தன்மையது?

மதுரை எழுத்தாளன் சேந்தன் பூதன்.



## 91

பரத்தையிற் பிரிந்து வந்த தலைவன் மாட்டுத் தன் நெஞ்சஞ் சென்றதை யறிந்த தலைவி தன் நெஞ்சிற்குச் சொல்லியது.]

நெஞ்சே! ஒன்றோடொன்றிணை தலையுடைய பிரப்பங்
கொடியின் புறத்தே வரிகளையுடைய விளைந்த பழத்தை,

ஆழ்ந்த நீரையுடைய குளத்திலுள்ள கெண்டை மீன் கௌவுதற்கிடமாகிய தண்ணிய நீர்த்துறைகளையுடைய ஊர்த்தலைவனுக்குரிய மனைவியாக நீ யிருப்பின், நின் மனத்தில் துன்பம் பலவாக ஆகுக. ஒழியாது கொடுக்கும்

மேகம் போன்று கைம்மாறு கருதாத வண்மையினையுடைய

கையையும்; விரைந்த நடையையுடைய ஆண்யானைகளையும்,

உயர்ந்த தேர்களையுமுடைய அதியமானஞ்சியினது அச்

சத்தைச் செய்யும் போர்க்களத்தில் உள்ள, இரவையுடைய

ஊரிலுள்ளார் போல் நீதுயிலும் நாட்கள் சிலவேயாகுக.

ஔவையார்.

## 92

[காமம் மிக்க கழிபடர் கிளவியால் ஆற்றேனென்பது

படச் சொல்லியது.]

ஞாயிறு மறைந்த அகன்ற இடம் பொருந்திய ஆகா

யத்தில் வளைந்த சிறகுகளையுடைய பறவைகள், தாம் தங்

கும்படி யுயர்ந்த; வழியினருகில் வளர்ந்த கடம்பின் கண்
ணுள்ள கூட்டிலிருக்கும் குஞ்சுகளின் வாயினுள்ளே
செருகும் பொருட்டு, இரை கொண்டமையின் விரைந்து
செல்லும் அவை இரங்கத்தக்கன.

தாமோதரன்.

93

தலைவன் தூதாக வந்த தோழிக்குத் தலைவி கூறியது.]

தோழி! நல்ல பெண்மை நலந் தொலையவும். சரீர
அழகு குறையவும், இனியவுயிர்போனாலும் அவர்பாற்



பரிவு மிகுந்த சொற்களைச் சொல்லற்க. அவர் நமக்குத் தாயுந் தந்தையுமல்லரோ ? அன்பில்லாத பொழுது ஊட லுண்டாவது எதன் பொருட்டு ?

அள்ளூர் நன்முல்லையார்.

[தோழிக்குத் தலைவி ஆற்றுவேனென்பது படச் சொல்லியது.]

பெருங்குளிரையுடைய
மழைக்காலத்தில் மலரவேண்
டிய பிச்சியின் அரும்புகள்,
அறிவின்மையினால் மலர வேண்
டிய காலத்திற்கு முன்பே மலர்ந்தன. இவற்றின் அறி
யாமையைக் கண்டு நானோ மயங்குவேன்? மயங்கேன் ஆயி
னும்; என்னைப் பிரிந்திருக்கும் என் தலைவர்,
அருவிகள்
மலையினின்றுந் தத்தி விழும்படி கூட்டமாகும்
பெரிய
மேகத்தினது ஒலிக்கும் ஓசையை நள்ளிரவில்
கேட்டால்,
பிரிவால் வருந்திக் கொண்டிருக்குமவர் அதிகமாக
வருந்து
வார் என்றே கலங்குகின்றேன்.

கந்தக்கண்ணன். **95**

[தலைவன் பாங்கனிடத்திற் சாற்றியது]

பெரிய மலையினிடத்தும் நின்று இழிந்துவரும்
பரிசுத்த
மாகிய வெள்ளிய அருவி, பாறைகளின்
வெடிப்புகளில்
ஒலிக்கும் பல மலரையுடைய சாரலில்
உள்ள சிறிய ஊரில்
வசிக்கும் குறவனுடைய பெரிய தோளையுடைய ஒரு
மகளி
னது நீரைப் போன்ற மெல்லிய தன்மை, நெ
ருப்பை
யொத்த என் வலிமையை அழித்தது.

கபிலர். 96

[தலைவனை இயற்பழித்த காலை தலைவி கூறியது.]

நல்ல நெற்றியையுடையாய் !
அருவியிடத்து வளர்ந்த வேங்கை மரங்களையுடைய
பெரிய மலைகள் பொருந்திய

நாட்டிற்குத் தலைவன் திறத்து நானென்ன செய்வேனென்று கூறி அவனைப் பழிக்கின்றாய். நான், நீ கூறியதை விளையாட்டென்று நினைத்திராவிடின் நீ என்ன பாடு படுவாய்?

அள்ளூர் நன்முல்லை.

## 97.

[வரைவு நீட்டித்த காலை தலைவி தோழிக்குச் சொல்லியது.]

நானிவ்விடத்தில் தனியே இருக்கின்றேன். என் பெண்மை நலம் குறையாத வருத்தத்தோடு கடற்கரைச் சோலையிடத்திலிருக்கிறது. தலைவன் தன்னுடைய ஊரினிடத்துள்ளான். எங்கள் இரகசியம் பரவுதலடைந்து ஊரம்பலத்திற்கு வந்துவிட்டது.

வெண்பூதி.

## 98

[பருவங் கண்டு வருந்திய தலைவி தோழிக்குக் கூறியது.]

தோழி! நமது தோட்டத்திலுள்ள நீரொழுகுகின்ற பசிய புதலினிடத்துத் தழைத்துப் படர்ந்ததும், மாரிக் காலத்தில் மலரும் தன்மை வாய்ந்ததும் ஆகிய பீர்க்கின் மலர்கள் சிலவற்றைக்கொண்டு; தலைவரை நெருங்கிச் சென்று, தலைவி இவ்வலரைப்போன்ற பசலையை அடைந்தாள் என்று, தலைவர்பாற் சொல்லுவாரைப் பெற்ருல் மிக நலமாக விருக்கும்.

கோக்குளமுற்றன்.

## 99.

[பொருள்தேடி மீண்ட தலைவன், பிரிந்திருந்த காலை எம்மை நினைத்தீரோ என்ற தோழிக்குச் சொல்லியது.]

உயர்ந்த மரத்தினது கொம்பைத் தொட்டுப் பெருகும் வெள்ளம் பிறகு கையால் இறைத்துண்ணும் அளவு சிறுத் துச் சென்றதுபோல, வெள்ளத்தைப் போன்ற பெரிய

காமம், இங்கு யான் வருதலால் முடிவடையும்படி நான்
நினைத்தேனல்லனோ? நினைத்து மீட்டும் மீட்டும் மிக நினைவு கூர்ந்தேன் அல்லனோ? நினைவு கூர்ந்து உலகத் தியல்பை எண்ணி மயங்கினேன் அல்லனோ?

## 100

ஔவையார்.

[தலைவன் பாங்கனிடத்தில் மலைவாணர் மகளாற்கா முற்றதாகக் கூறியது.]

அருவிபாயும் பரந்த நிலத்தில் மலை நெல்லை விதைத்து, இடையிற் களையாக முளைத்த பெருத்த இலையையுடைய மலை மல்லிகையோடு பசு மரலைக் களைந்தெறியும் காந்தள் வேலியையுடைய சிறிய ஊரிலுள்ளார், பசிப்பின் தறுகண்மையையுடைய யானைத் தந்தத்தை விற்றுண்ணுதற்கிடமாகிய, வல்வில் ஓரியினது கொல்லிமலையின் மேற்குப் பக்கத்திலுள்ள பாவைபோல நான் கண்டு விரும்பிய மகள்

அறியாமையை யுடையள். ஆயினும் அவளது மூங்கிலைப் போலப் பருத்த தோள்கள் தழுவுதற்கரியன.

கபிலர்.

## 101

[தலைவன் இல்லறம் நடத்தும்போது தலைவியின் இன்பத் தன்மையைத் தலைவியின் தோழி முதலாயினோரறியச் சாற்றியது.]

விரிந்த அலைகளையுடைய பெரிய கடலாற் சூழப்பட்ட வளைந்த இப்பூவுலக வின்பமும், அருமையான தான தருமங் களாற் பெறப்படுகிற சிறப்பினையுடைய தேவருலகத்தின்பமும், ஆகிய இரண்டும்; தாமரை மலரை யொத்தமை யுண்ட கண்களையும், பொன்னினை யொத்த சரீர நிற வழகையும், பெருமை மிக்க கோடுகளையுடையவல் குலையும் பெற்ற, தலைவியினது தோளோடு தோள் மாறுபடத் தழு



வும் நாளிலடையும் இன்பத்தோடு ஒருங்கு

வைத்தா ராய்ந்தாலும் ஒப்பாகா.

பரூஉமோவாய்ப்பதுமன்.

## 102-

[தலைவன் பிரிந்து அதிக நாள் நீடித்தானாக, அக்காலை ஆற்றாளெனக் கவன்ற தோழிக்கு, யான் எவ்விதம் ஆற்று வேனெனத் தலைவி சாற்றியது.

தலைவரை யெண்ணினால் என் மனம் வேகும். நினையா திருப்பேனாகில், இருத்தல் எனது வலிமைக்கு உட்பட்ட தன்று. ஆசை நோயோ என்னைத் துன்புறச் செய்து, ஆகாயத்தைச் சென்று தோய்வ தொத்தமிகுதியையுடையது. எம்மாற்றமுவப்பட்ட தலைவர் நல்ல தன்மையுடைய வரல்லர்.

ஔவையார்.

## 103

[தலைவன் வருவதாகக் கூறிச் சென்ற பருவம் வந்த பின்பும், வாராமை கண்டு வருந்திய தலைவி தோழிக்குச் சொல்லியது.]

தோழி! அதிக நீரால் நிறையப்பெற்று
அஞ்சுதற் கேதுவாகிய துனியைத் தருஞ்
சேற்றினிடத்தே மீனுகிய வுணவை
யாராய்கின்றதும், முள்ளு முருங்கைப்பூவின்

இதழைப்போன்ற மெல்லிய தூவியையு டைய து ம், செம்மையாகிய அலகையுடையதுமாகிய நாரைக்குத், துன் புண்டாகும்படி தூவுகின்ற நீர்த்துளிகளையுடையதும், பிரிந்தார் துன்பத்தை யுடைதற்குக் காரணமாகிய வாடைக் காற்றையுடைய கூதிர்க்காலத்திலும், நம்தலைவர் வராதவ ராஞர். ஆகையால் யான் வாழ்வேனல்லஞயினேன்.

வாயிலான் தேவன்.

**104**

[தோழிக்குப், பிரிவின்கண் சொல்லியது.]

ஆற்ருளாகிய தலைவி

குறுந்தொகை வசனம்

*41*

தோழி ! நம் தலைவர் நூலில்லாத முத்து வடத்தி

னின்று முதிருகின்ற முத்துக்களைப் போலக், குளிர்ந்த பனித்துளிகள் துளிக்கக் குளிர்ந்த தாளியறுகின் கொடியை விடியற்காலத்திற், பசுக்கள் மேயும் பனிக் காலத்தில் பிரிந்து சென்றனர். அவ்விதம் பிரிந்து சென்ற நாட்களும் பலவாயின. நான் எங்ஙனம் பிரிவை யாற்றுவேன்?

காவன்முல்லைப்பூதனார்,

105

[மணம் புரிதல் நீட்டித்தலைக் கண்ட தலைவி தோழிக்குச் சொல்லியது.

தோழி ! குறவனுக்குரிய தோட்டத்திலுண்டாகிய பொன்னைப் போன்ற சிறு தினையில், புதியதை யுண்ணுங் கடவுட்குப் பலியாக விட்ட வளப்பம் பொருந்திய கதிரைத் தெரியாமலுண்ட மயில், தேவராட்டி வெறியாடுகின்ற அழகைப் போல வெம்மையுற்று நடுங்குதற்கு இடமாகிய தெய்வங்கள் வசிக்கும் மலை நாட்டையுடைய தலைவனது சிநேகம், நீர் மிகுந்தகண்களோடு நாம் நினைந்து துன்புறுதற்கு இடமாகியது.

நக்கீரர். 106

[தலைவன் தூதுகண்டு தலைவி தோழிக்குக்

கூறியது.]

தோழி ! புல்லிய விழுதையுடைய இற்றிமரத்தினது வெள்ளிய வேர் ; மலையிலுள்ள கற்களிற் படர்ந்து மலை யருவியைப் போலத் தோன்றும் நாட்டையுடைய தலைவன், மாசற்ற நெஞ்சினுல் நினைந்து கூறிய சொற்களைக் கூறும் தூது நம்மிடத்திற்கு வந்தது. நாமும் அத்தூதை நெய் யைப் பெய்த தீயைப்போல ஏற்றுக்கொண்டு, அவன் எம்மை மணந்த காலத்தில் வைத்திருந்த அன்பினை இப் பொழுது முடையே மெனக்கூறித் தூதுவிடுவோம்.

கபிலர்.



## 107

[தலைவி காமம் நீங்கப் பெருத நிலையாற் சேவலைச் சபித்தது.]

குவிந்த கொத்துக்களையுடைய செங்காந்தளினது ஒளி மிக்க பூவைப்போன்ற தொகுதியான சிவந்த கொண்டையையுடைய கூட்டங்கொண்ட சேவலே! ஆழமாகிய நீரினு லுண்டாகும் புதுவருவாயையுடைய தலைவனெடு வதிந் திருந்த இன்பத்தைத் தரும் இனிய துயிலில் நின்று எம்மை நீ எழுப்பினுய்;

மிக்க இருளுடைய நடு இரவில் வீட்டி
லுள்ள எலிகளைத் தின்னத் தேடும் பூனையின் குட்டிக்குச்
சிலநாள் உணவாகி மிகுந்த துன்பத்தை யெய்துக.

. . . மதுரைக கணணனா.

## 108

[பருவங் கண்டு அழிந்த தலைவி தோழிக்குக்
கூறியது.]

தோழி! மேகங்கள் விளையாடுங் குன்று
பொருந்திய
சிற்றூரினிடத்து, மேயும்படி சென்றிருந்த பசுக்கள் தம்
கன்றுகளை நினைந்து செல்ல, முல்லை நிலத்தில் பசிய இலை
களையுடைய முல்லையினது குற்றமற்ற சிறந்த பூ செவ்
வானத்தைப் போல அழகைக் கொண்டது. தலைவர்
வரா
விடின் இக்கார் காலத்தே நான் பிழைக்கமாட்டேன்.

வாயிலான்றேவன்.

## 109

[தலைவன் வரைந்தாலன்றி நின், வேறுபாடு நீங்கா
தென்று தோழி தலைவிக்குக் கூறியது.]

வளைந்த காலையுடைய இறு மீனின்,
வளைந்த முது
கைக் கொண்ட பெரிய இனத்தைக் கடலில் தாழும்

அலே
யானது கரையிற் கொணர்ந்து தருதற்கிடமாகிய துறையை யுடைய தலைவன், நின்னொடு கலந்து மகிழ்ந்திருக்கும் இக் காலத்திலும், நினது நல்ல நெற்றியின் அழகு பிறர் அலர்



கூறும் வேறுபாட்டை யடைந்தது. மிக இரங்கத்தக்க தாகும்.

## 110

நம்பிகுட்டுவன்.

[தலைவன் வாராமையின் நான் இறந்து படுவேனென்று தலைவி தோழிக்குக் கூறியது.]

[தோழி! நீரிலுள்ள நீலத்தினது மலரத்தக்க காலத்தையுடைய அரும்பை மலரச் செய்து, புதலிலே யுள்ள மயிற் பீலியின் ஒளி தங்கிய கண்போன்ற கருவிளை மலரை அலைத்துக் கூரிய முள்ளையுடைய ஈங்கையினது

செவ்விய அரும்புகள் மலர்ந்த நிறத்தையுடைய தூய மலர் கள் உதிரும்படி, குளிர்ச்சியுடையதாகித் துன்பந் தருவ தாய் வீசுகின்ற வாடைக் காற்றினால், தலைவி யென்னவாயி ஞளோ என்று நினைந்து வாராத தலைவர் ; வரினும் வரா விடினும் எத்தகைய உறவினையுடைய ராவர் நமக்கு ?

கிளிமங்கலங்கிழார்.

## 111

[நின் தாய் நினது வேறு பாடு கண்டு வெறி யெடுத் தலைத் தலைவன் அறிவானாக என்று தோழி தலைவிக்குக் கூறியது.]

தோழி ! துன்பம் நினது மெல்லிய தோளை நெகிழச்
செய்தது. வெறியாட்டாளன் முருகவேளால் வந்த தென்று கூறுவன். தாயும் அதனை நம்புவாள். இங்ஙன மாயின் ; குறிய கருமையான பெண் யானையினது கை யொளித்தாற் போன்ற நிறம் பொருந்திய பெரிய குண்டுக்
கல்லையுடைய மலை நாட்டுத் தலைவன், நம் வீட்டிலுள்ளா ரது நகைத்தற் கிடமாகிய இச்செயலைக் காணும் பொருட் டுச் சிறிது விரைந்து

இங்கே வருவானாக.

தீன்மதிநாகன்.



**112**

[ஊரார் பழிமொழிக்குப் பயந்து காமத்தை மிகுதியாக வெளிப்படுத்தாமலிருக்கிறேனென்று தலைவி தோழிக்குக் கூறியது.]

தோழி ! ஊராரின் பழிமொழியை அஞ்சினுல் காமம் மெலிவடையும். பிறர் பழித்தலற அக்காமத்தை விட்டு விடின் என்பால் எஞ்சியிருப்பது நாணம் மாத்திரமே யாகும். தலைவருண்ட எனது பெண்மை நலம் : பெரிய யானை வளைக்க வளைந்து, பூமியிற்படாத நாருடைய ஒடிந்த பட்டையைப் போன்றது. இதனை யறிந்து கொள்வாயாக.

ஆலத்தூர்க்கிழார். **113**

[பகற்குறி நேர்ந்த தலைவனுக்குத்

தோழி இடங்
கூறியது.]
பொய்கை ஊருக்கும் அருகிலுள்ளது. சிறிய காட்
டாறு அப்பொய்கைக்குத் தூரமன்று. அப்பொய்கையை
ஒட்டிச்சோலையுள்ளது. இரையைத் தேடுகின்ற வெள்ளிய
நாரைகளை யல்லாமல் வேறெவ்வுயிரும் ஆங்கு வரமாட்டா.
யாங்கள் எங்கள் கூந்தலுக்கு இட்டுப்பிசையும் பொருட்டு
எருமண் கொணர ஆண்டுச் செல்வேம். தலைவி அங்கும்
வருவாள் (நீ ஆண்டு வரின் அவளைக் கண்டு மகிழலாம்
என்பது குறிப்பு.)

மாதிரத்தன்.

## 114

[தலைவியுடன் அளவளாவி விரைவில் விடுப்பாயாக
வென்று தலைவனுக்குத் தோழி கூறியது.]
செய்யப்பட்ட தேரையுடைய தலைவனே!

நெய்தல்
நிலத்தில் எனது பாவையைக் கிடத்தி விட்டு நின்னிடத்
திற்கு வந்தேன். ஆரல் மீனை அருந்தி நிறைந்த வயிற்றை
யுடைய நாரைகள் இரவில்,
என் மகளாகிய அப்பாவையின் குறுந்தொகை

வசனம் 45

நெற்றியை மிதிக்கும். ஆதலின் நாம் போகின்றோம்.
அவளைப் போகும்படி நீயே ஏவுவாயாக.

பொன்னாகன்

**115**

[உடன் போக்கின் காலத்தில் தோழி தலைவனிடம்
கூறியது.]

அசைகின்ற மூங்கில்கள் வளர்ந்த குளிர்ந்த நல்ல
மலைப் பக்கத்தில், மெல்லிய நடையையுடைய மரையா ;
இலைகளை யுண்டு தாங்குதற் கிடமாகிய நல்ல மலை

நாட்டையுடைய தலைவனே! பெரிய நன்மை ஒன்றை ஒருவர் தமக்குச் செய்தால் அவ்விதம் செய்தவர்களைப் போற்றுதவர்களும் இருக்கின்றார்களோ ? சிறிய நன் • மையை இத்தலைவி பெற்றவளாக இருக்குங் காலத்திலும்

விருப்பம் சிறந்து புலவி நீங்கும் வண்ணம் இவளைப் பாது

காப்பாயாக. நின்னையன்றி இவளுக்கு வேறு பற்றுக்

கோடுகள் இல்லை.

## 116

கபிலர்.

[தலைவியின் கூந்தலைத் தலைவன் பாராட்டிக் கூறியது.]

என்ஞல் விரும்பப்பெற்றுறையும் த லை வி யி ன து வண்டுகள் தாவுகின்ற கூந்தல், சோழரது உறையூரிற் பெரிய நீர்த்துறைக்கண் உள்ள நுண்ணிய கருமணல் நீண்டு படிந்தாற் போன்ற நல்ல நெறிப்பையுடையன. நறுமையையுங் குளிர்ச்சியையுமுடையன.

## 117

இளங்கீரன்.

[வரைவு நீடித்த விடத்துத் தலைமகட்குத் தோழி சொல்லியது.]

மாரிக்காலத்து ஆம்பன் மலரைப் போன்ற தோற்றத் தையுடைய கொக்கினது பார்வையை அஞ்சிய துன்



பத்தையுடைய ஈர நண்டு, தாழைவேரினிடையேயுள்ள வளைக்குட் செல்லும் பொருட்டு ; இடையரது கயிற்றை யறுத்துக்கொண்டு செல்லும் எருதைப்போல வேகமாகச் செல்லுதற்கிடமாகிய துறையையுடைய தலைவன் வாரா திருப்பினும் இருக்க ? விற்பாரது கையினிடத்திலே சிறிய வளைகளும் ஈண்டிருக்கின்றன.

குன்றியனார்.

## 118

[வரைவு நீட்டித்த வழித் தலைவி பொழுது கண்டு

தோழிக்குக் கூறியது.]

தோழி! பறவைகளும் மிருகங்களும் தனிமையொடு தங்க, நள்ளென்னும் ஓசைபடவந்த அன்பில்லாத மாலைக் காலத்தில் பலர் புகுகின்ற வாயிலை அடைக்க வெண்ணி விழைவார்; உள்ளே வருகின்றவர் வெளியே யாரேனும் இருக்கின்றீர்களோ எனவும் நமது காதலர் வாராராயி னர்.

நன்னாகையார்.

## 119

[இயற்கைப் புணர்ச்சிக்குப் பின் தலைவன் பாங்கனி டம் இயம்பியது.]

மிக இளமையையுடையவள். முளையை ஒத்த ஒளி தங்கிய பற்களையுடையள். வளையணிந்த கையையுடையள். இத்தகைய ஒருத்தி, சிறிய வெள்ளிய அழகிய பாம்பினது குட்டி, காட்டானையை வருத்தினாற்போல எம்மை வருந்தச் செய்தனள்.

சத்திநாதனார்.

## 120

[தலைவி பெறுதற்கரியளென்று தலைவன் தன்

நெஞ்
சிற்குக் கூறியது.]

பொருளில்லாதவன் இன்பத்தை விரும்பினாற்போல நெஞ்சமே! நீ பெறுதற்கரியதை விரும்பினை. நமது காதலி



நமக்கு நன்மை தருபவளாதலை அறிந்தாற்போல நமக்கு அருமையானவளாதலையு நீ அறிந்தாயில்லை.

பரணர். **121**

[குறியினிடத்துச் சென்ற தலைவி
தோழிக்குக் கூறியது.]

தோழி! நீ கூறியது உண்மையோ?
மலைப்பக்கத்தில் மை பூசினாற் போன்ற கரிய நிறத்தையுடைய ஆண் குரங் கானது, கொம்பு தாங்கும்படி பாயாததவற்றின் பயன், அக்குரங்கை ஏற்று முறிந்த கொம்பினிடத்துச் சென்றாற் போல, நாடன் குறிவாய்க்கும்படி செய்யாத பிழையின் பொருட்டு என்னுடைய பெரிய மெல்லிய தோள்கள் பசப்பை யடைந்தன.

கபிலர். **122**

[தலைவன் பிரிந்திருந்த காலத்தில்
மாலைப்பொழுது கண்டு தலைவி வருந்திக் கூறியது.]

பசிய கால்களையுடைய கொக்கினது புல்லிய நிறத்தைப் போன்றதும், ஆழமாகிய நீர்ச்சுனையில் வளர்ந்தது மாய்

ஆம்பல் மலருங் கூம்பின. இப்போது மாலைக்காலம் வந்தது.

இந்த மாலை தான் மாத்திரம் வந்ததன்று. பின் வரும்

இரவையும் உடைத்து ஆகையால் யான்

இனிமேல் மிக

வருந்துவேன் என்பது குறிப்பு.)

ஓரம் போகியார். **123**

[தலைவன் விரைவில் வரும் பொருட்டுத்

தோழி

கூறியது.] (சிறைப்புறம்)

நிலவைக் குவித்து வைக்கப்பட்டாற் போன்ற

வெள்ளிய மணலின் ஒரு பக்கத்தில், இருள் செறிந்தாற்

போன்ற ஈரத்தையுங் குளிர்ச்சியையுமுடைய

கொழுவிய

நிழல் பொருந்திய கரிய கிளையையுடைய புன்னை மரங்களடர்ந்தபூஞ்சோலை தனிமையையடையத், தலைவர் இன்னும் வந்தாரல்லர். பலவகைமீன்களை வேட்டை யாடுதற் பொருட்டுச்சென்ற தமையன்மாரது படகுகள் மீண்டு வரும்.

ஐயூர் முடவன்.

## 124

[தலைவியை உடன் கொண்டு செல்லும்படி தோழி

கூறியது.]

தலைவனே! உப்பமைப் போர் பலர் சேர்ந்து கடந்து சென்ற பக்கத்தையும் அகன்ற இடத்தையுமுடைய ஊர், பாம்பட்டாற் போன்ற தோற்றத்தையுடைய ஓமை மரங்கள் பொருந்திய பெரிய பாலை நிலங்கள் துன்பத்தையுடையன, என்று சொல்லித் தனியே செல்ல விரும்பினிராயின், தலைவரைப் பிரிந்த மகளிர்க்கு வீடு இனிமை தருவனவோ?

பாலை பாடிய பெருங்கடுங்கோ.

[வரைவு நீட்டித்தவிடத்துத், தலைமகள் தோழிக்குச் சிறைப்புறமாகச் சொல்லியது.]

தோழி! மலைச் சாரலிற்றோன்றிய தழை யணிந்த அல்குலையுடைய மகளிர் பலருள்ளும், விழாவைப் போலச் சிறப்பையுடைய எனது பெண்மை நலம், பழைய விறலையுடைய சிறகின் வன்மை நீங்கியதனால் உண்டாகிய துன்பத்தையுடைய நாரை, அலைகள் தோயும் மரக்கிளையில் தங்கியிருக்கும் குளிர்ச்சியமைந்த துறைகளையுடைய தலைவனோடு இடம் மாறிற்று. நான் மாத்திரம் விளங்குகின்ற வளையல்கள் நெகிழும்படி மெலிந்து இன்னும் உயிருடன் இருக்கின்றேன்.

அமமூவன். குறுந்தொகை வசனம் 49

## 126.

[கார்காலம் வந்துந் தலைவர் வரவில்லையென்று தலைவி தோழிக்குக் கூறியது.]

தோழி ! இளமை நலத்தைத் துய்க்க எண்ணாமல்
பொருள் நலத்தை விரும்பிச் சென்ற தலைவர், இவ்

விடத்திற்கு இன்னும் வந்திலர் எவ்விடத்திலுள்ளாரோ
என யாம் எண்ணியிருப்ப, நல்ல குளிர்ச்சியையுடைய
கார்காலம் ; மழையாற் பாதுகாக்கப்பட்ட பூவையுடைய
முல்லைக் கொடியானது தொகுதியாக அரும்பிய அரும்பு
களை, விளங்குகின்ற பற்களாகக் கொண்டு ந ம் மை மப்
பார்த்து நகைக்கும்.

ஒக்கூர்மாசாத்தி.

## 127

[பாணனைத் தூதுவிட்டு வாயில் நேர்ந்த தலைவனுக்
குத் தோழி வாயில் மறுத்தது.]

நாரை கவ்வ அதன் வாயினின்றுந் தப்பி நீருட்
குளித்த கெண்டை மீன், பிறகு பக்கத்திலுள்ள நிறம்
பொருந்திய தாமரையின் வெள்ளிய அரும்புகளைக் கண்டு

பயப்படும் வயல்களையும் தோட்டத்தையுமுடையதும் ;
காஞ்சி மரங்கள் வளர்ந்ததுமாய ஊரையுடைய தலைவ !
ஒரு பாணன் பொய்யனானால் மற்றுள்ள பாணர்களெல்லாரும், நீ அகன்றதனால் தனித்திருக்கும் மகளிருக்குப் பொய்யரைப் போலத் தோற்றுவர்.

## 128

ஓரம்போகியார். [தலைவன் குறியிடத்துத் தலைவியைக் காணாது தன்
நெஞ்சொடு கூறியது.]
நெஞ்சே ! கீழ்க்கடலலைக்கு அருகிலுள்ளதாகிய
சிறகின் வன்மை நீங்கப்பெற்ற நாரை, திண்ணிய தேரை
யுடைய சேரனது தொண்டி யென்னும் பட்டினக் கடற
D


றுறையிலமைந்த ; அயிரை மீனாகிய அரிய

இரையைப் பெறும் பொருட்டுத் தலையை
மேலெடுத்தாற் போலத்,
தூரத்திலுள்ளவளும் அருமையானவளுமாகிய தலைவி
யைப் பெற நினைந்தாய். நீ துன்பத்தையுடையை : துன்பத்
திற்குக் காரணமான ஊழ்வினையையுமுடையை.

பரணர்.

## 129

[தலைமகன் பாங்கற்கு உரைத்தது.]

தோழ! இளைஞர் இன்புறுதற்குக்
காரணமாகிய
நட்பையுடையோய்! அறிஞரது தோழ!
கேட்பாயாக.
பெரிய கடலின் நடுவில் எட்டா நாளாகிய
அட்டமிக்குரிய
இளைய வெள்ளிய திங்கள் தோன்றினாற் போல, ஒரு
பெண்
ணின் கூந்தலுக்குப் பக்கத்தில் விளங்குகின்ற
சிறிய
நெற்றி ; புதிதாகப் பிடிக்கப்பட்ட
யானையைப்போல
எம்மைப் பிணித்தது.

கோப்பெருஞ்சோழன்.

## 130

[தலைவனைத் தேடித்தருவேனெனத் தலைவிக்குத் தோழி கூறியது.]

நமது காதலர் பூமியைத் தோண்டி உள்ளே புகார். ஆகாயத்திலே பறக்க மாட்டார். விளங்குகின்ற சமுத்திரத்தைக் காலால் கடக்கமாட்டார். நாடுகடோறும் குடிகடோறும் ஆராய்ந்தால் அகப்படாமல் தப்புவாரும் ஆவாரோ ? ஆகார்.

வெள்ளிவீதியார்.

## 131

[தலைவியை விரைவிலடைய

வேண்டுமென்று தலைவன் கூறியது.]

அசைகின்ற மூங்கிலை யொத்த அழகிய பருத்த தோளை யும், பெரிய அமர்த்தலையுடைய கண்ணையும் பெற்ற தலைவி



இருந்த ஊர்,

அடைதற்கரிய நெடுந்தூரத்திலுள்ளது. என்

மனமானது ஈரமுண்டாகிய செம்மையையுடைய பசிய புனத்தைப் பெற்ற, ஒற்றையேரையுடைய உழவனைப் போல மிக வேகத்தை யடைந்தது. அதனால் நான் வருந்துகிறேன்.

ஓரேருழவனார்.

## 132

[தலைவி மறத்தற்கரிய இயல்புடையவளென்று தலைவன் கூறியது.]

மாமையையுடைய தலைவியானவள் தழுவுவதில் விரை வுடையவள். ஆசையைத் தரும் அழகையுடையவள். குவிந்த மிருதுவாகிய முலைகளையுடையவள். நீண்ட கூந் தலையுடையவள். பக்கத்தில் மேயச்சென்ற மிகுந்த சுரப்பையுடைய நல்ல பசுவினது நடுங்குந் தலையையுடைய கன்று; தாயைக்காண வேண்டுமென்னும் விருப்பத்தோ டிருந்தாற் போன்ற, ஆசையை வெளிப்படுத்தும் மெலிந்த பார்வையையுடையவள். அவளை நான் எப்படி மறந்து அமைவேன்?

சிறைக்குடியாந்தையார்.

## 133

[வரைவு நீடித்த விடத்துத் தலைவி சொல்லியது.]

தோழி! குறவன் தோட்டத்தில் விளைந்த பொன்னைப் போன்ற சிறிய தினையினது கதிரை, கிளி ஒடித்துண்ணுத லால் குறைந்ததாகிய தாளில்;பெருமழை யுண்டானமையின் இலை தழைத்தாற் போலத் தலைவர், எனது புதிய பெண்மை நலத்தை உண்டமையால் உண்டான வருத்தத்தோடு எனது வலியழிந்தும் உயிரோடிருக்கின்றேன்.

உறையூர்முதுகண்ணன்சாத்தன்.



## 134

[தலைவன் பிரிவை நான் ஆற்றேனாயினேன் என்று தலைவி தோழிக்குச் சாற்றியது.]

தோழி! நானொன்று சொல்லுவேன் கேட்பாயாக. குறிய கற்களினிடத்தே பருத்து வளர்ந்த உயர்ந்த அடியை யுடைய வேங்கை மரத்தின் பூவையுடைய அசைந்த கிளை கள், மலர் நீங்கித் தனிக்கும்படி தாக்கிக் கற்களை யலைத் தொலித்து விரைந்து விழும் அருவியானது; நிலத்திலே யூர்ந்து செல்லுகிற பாம்பைப்போல இழியும் இடம் பொருந்தி விளங்குகிற மலைநாட்டையுடைய தலைவனோடு சேர்ந்த நட்பு, நம்மொடு பிரிவில்லையானால் உறுதியாகச் சொல்லுகிறேன் நன்மையாகும். இதுவே எனது ஆசை.

கோவேங்கைப் பெருங்கதவன்.

## 135

[தலைவன் பிரிவனென எண்ணி வேறுபட்ட தலைவிக்குத் தோழி கூறியது.]

தோழி! தொழில்தான் ஆடவர்களுக்குயிராகும். மனையிலே உறைகின்ற ஒளிபொருந்திய நெற்றியை யுடைய மகளிருக்குக், கணவன்மாரே உயிராவரென்று நமக்கெடுத்துச் சொல்லியவரும் அத்தலைவரே. நீ யழுதலை யொழிவாயாக. அவர் செல்லுதலை ஒழிவர்.

பாலைபாடிய பெருங்கடுங்கோ.

## 136

[தலைவன் பாங்கனுக்குச் சொல்லியது.]

உலகினர் காமம் காமம் என்று காமத்தைக் குறை

கூறுவர். காமமானது வருத்தமும் நோயுமன்று. மிகு தலும் குறைதலும் இலது. யானை தழையை மென்று

குறுந்தொகை வசனம்

53

தின்று மதங்கொண்டாற் போலக், கண்டு மகிழ்வாரைப் பெற்றால் அது வெளிப்படும் பருவத்தையுடையது.

மிளைப்பெருங்கந்தன். 137

[இயற்கைப் புணர்ச்சிக்குப்பின் தலைவன் கூறியது.]

மிருதுத் தன்மை வாய்ந்த பெண்ணே! நினது நல்ல மனமானது வருந்தும்படி நின்னைப் பிரிந்து சென்று தங்குவேனாயின், நான் அங்ஙனம்

செல்வதற்குப் பொருந் திய வினையின்கண் ; என்னை நீங்கி இரவலர் வாராத நாட் கள் பலவாகுக.

பாலைபாடிய பெருங்கடுங்கோ.

## 138

[முதல் நாளிற் குறி பிழைத்தமையைத் தோழி புலப் படுத்தியது.]

எம் வீட்டின் பக்கத்ததாய எழிற் குன்றத்தின்
மேலுள்ள, மயிலின் அடியைப் போன்ற இலையையுடைய
கரிய பூங்கொத்தமைந்த நொச்சியின், அழகு மிகுந்த
மிருதுவான கொம்புகளுதிர்த்த நீலமணிபோன்ற மலரின்
ஓசையை மிகக் கேட்டுப், பெரிய ஊரிலுள்ளார் துயின்று
லும் நாங்கள் துயிலேமாயினேம்.

கொல்லன் அழிசி.

# 139

பரத்தையிற் பிரிந்து வந்த தலைமகற்குத் தோழி வாயின் மறுத்தது.]

ஐயனே! வீட்டினிடத்துறைகின்ற கோழியினது குறுகிய காலையுடைய பெட்டை, வேலியிலுள்ள காட்டுப் பூனை மாலைக் காலத்தில் வர, அதற்கஞ்சிப் புகுமிடத்தை யறியாது சேர்ந்தொருங்கே கூடும்பொருட்டுத் துன்பத்தை யுடைய குஞ்சுகளாகிய இனத்தை அழைத்துக் கூவினாற்



போலத், துன்பத்தையுடையதாகப் பரத்தையராற் கூறப்படும் பழிமொழியோடு எம்முடைய தெருவிற்கு வாராதொழிவாயாக. அங்ஙனம் வாராதிருப்பின் நீ வாழ்வாய்.

ஒக்கூர்மாசாத்தியார்.

## 140

[பொருள் வயிற் பிரிந்தவிடத்து ஆற்றுகின்றிலே யென்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.]

வளைந்த முதுகையுடைய முதிய ஆண் ஓந்தியானது, வழிச் செல்கின்ற மனிதர்கள் நிமித்தமாகக் கொள்ளும் படி தங்குகின்ற பாலை நிலத்தில் தலைவர் சென்றனர். அவர் பிரிந்த பிறகு திறனழிந்து நான் இங்கேயிருந்து பொறுத்துக்கொண்டுள்ள துன்பத்தை, இ ர ங் கு த லை யுடைய இவ்வூர் எங்ஙன மறிந்தது? (ஊர் என்றது தோழியை.)

அள்ளூர் நன்முல்லை.

## 141

[தலைவரை, இனிப்பகற் குறிக்கண் வரும்படி சொல் லென்று தலைவி தோழிக்குக் கூறியது.]

தோழி! " மலைப்பக்கத்தையுடைய நாட! கொல்லையி லுள்ள நீண்டகையையுடைய யானையினது கடும்பகை யால் வருந்திய, குறிய கையையுடைய கொல்லுதல்வல்ல பெரிய ஆண்;

புலியானது, பசுங் கண்ணையுடைய செந்நாய் அகப்படுகின்ற பருவத்தைப் பார்த்திருக்கும் அரிய இருள் பொருந்திய நள்ளிரவில் வருகின்றாய். அங்ஙனம் வரு
தலைத் தவிர்ப்பாயாக வெனவும்; வளைந்த அலகையுடைய சிறிய கிளிகளை, விளைந்த தினைகளைத் தின்னுமற் கடிதற் பொருட்டு நந்தாய் செல்வீராக என்றாள்” எனவும் தலைவன்பால் நீ ஏன் கூறுதல் கூடாது ?

மதுரைப் பெருங்கொல்லன்.



**142**

[இயற்கைப் புணர்ச்சி புணர்ந்து நீங்குந் தலைவன்
கூறியது.]

நள்ளிரவிற் படுத்துத் துயிலுதலையுடைய யானையைப்
போலப் பெருமூச்சு விட்டுக்கொண்டு, என்னுள்ளம் நான்
தலைவியைப் பிரிந்துவந்த பின்னரும் அவளிடத்திலேயே
இருக்கின்றது. சுனைப்பூவைப் பறித்து

மாலை தொடுத்துப்,
புனத்தில் வருங் கிளிகளை யோட்டுகின்ற மலரைப்
போன்ற கண்ணையுடைய பேதையாகிய தலைவி, இதனை
யறிந்தாளோ இல்லையோ?

கபிலர்.

## 143

[தலைவன் விரைவில் வந்து வரைந்து கொள்ளுவா
னென்று தோழி தலைவிக்குக் கூறியது.]

ஆராய்ந்தெடுக்கப்பெற்ற ஆபரணங்களை யணிந்த
பெண்ணே! பிரயோசனத்தையுடைய மலைநாட்டுக்குத்
தலைவன் நம்மைப்போல் மனமழிதல் பெரிதும் உடையன்.

நில்லாமையே இவ்வுலகத்தில் நிலைபெற்ற தாகலின் நல்ல கீர்த்தியை விரும்பிய ஒப்புரவு செய்வோன் பெற்ற பொருளைப்போல, நினது அழகொழுகும் சரீரம் பரவிய பசலை தங்குவதற்குரிமையுடையதன்று. ஆகையால் நீ வருத்தமுறுதே.

மதுரைக் கணக்காயன் மகன் நக்கீரன்.

## 144

[மகட் போக்கிய செவிலித் தாய் சொல்லியது.]

கழியினிடத்திலே மலர்ந்த நீலோற் பல மலர்களைப் பறித்தும், கடலினிடத்துள்ள வெள்ளிய தலையையுடைய அலையின்கண் விளையாடியும், பிரிதலில்லாத ஆயத்தார் தத்தமக்குரிய விளையாட்டைச் செய்ய, இவ்விடத்திற் றங்கு



தலுக்கும் உடன்படாதவளாகிச், செல்லுகின்ற மேகங்கள் தவழுகின்ற உச்சியையுடையதாய் வானளாவ உயாந்த விளக்கத்தையுடைய குறுக்கிடும் மலைகள் பொருந்திய நாட்டில்,பாலை நிலத்து வழியிலுள்ள பருக்கைக்கற்கள் தன் காலழகைச் சிதைக்கும்படி தலைவி சென்றாள்.

மதுரை ஆசிரியன் கோடங் கொற்றன்.

## 145

[தலைவி வரைவிடை யாற்றாது தோழிக்குச் சொல்லி யது.]

கடற்றுறையமைந்த இந்தச் சிறிய ஊர், அழகிய கடற்கரைச் சோலையையுடைய சேர்ப்பனது கொடுமையை நினைந்து, அமையாத துன்பத்தோடு வருந்தி நள்ளிரவில் தூங்காமல் தங்குவாரை ஏனென்று கேளாதது. தூங்குங் கண் பொருந்திய மக்களையுடையது. நீண்ட இராக் காலத்தையுடையது. ஆதலின் நாங் தங்கியிருத்தற் கேற்ற தன்று.

## 146

கொல்லனழிசி.

[தமர்வரைவு உடன்பட்டமையைத் தோழி தலைவிக் குணர்த்தியது.]

தோழி! ஒன்று சொல்லுவேன் கேட்பாயாக! நம்மைச் சார்ந்த கூட்டத்தார், தண்டு பிடித்த கையரும் வெள்ளிய

மயிரையுடைய தலைக்கண் : ஆடையையுடைய வருமாகிய நன்று நன்று என்னும் தலைவன் தமரோடு, இன்று நீங்கள் வந்தமையின் நல்ல நாளென்று முகமன் கூறுவர். ஆதலின் நம்மூரிலே பிரிந்தோரைச் சேர்த்து வைப்போரும் இருக்கின்றனர்.

## 147

வெள்ளி வீதியார்.

[தலைவன் தலைவியைப் பிரிந்த விடத்துக் கனாக்கண்டு சொல்லியது.]

## குறுந்தொகை வசனம்

57

வேனிற் காலத்தில் மலரும் பாதிரியினது வளைந்த மலரைப்போன்ற மயிரெழுந்து அழகொழுகும் மாமையையும், சிறந்த ஆபரணத்தையுமுடைய தலைவியைத் தந் தாயைப்போல இனிய துயிலினின்றும் எழுப்புகின்றாய்.

துணைவியரைப் பிரிந்தோர் நின்னை இகழார்.

கோப்பெருஞ்சோழன்.

## 148

[பருவங்கண்டு அழிந்த தலைமகளைத் தோழி, பருவம்
மறுத்துக் கூறிவற்புறுத்திய காலை தலைவி சொல்லியது.]

செல்வத்தையுடைய
சிறுபிள்ளைகளது சிறிய அடியின் கண் விளங்கிய, தவளையின் வாயைப் போன்ற வாயை
யுடைய பொன்னாற் செய்யப்பட்ட; கிண்கிணிக்காசை
யொத்த அரும்பை யீனும் கொன்றை மரம், குருந்த மரத்
தோடு சுழலும் மிகுந்த குளிர்ச்சியையுடைய பருவத்தை
யும் கார்காலமல்லவென்று நீ கூறுவாயாயின், இவ்விதம்
தோற்றுவது கனவோ என்று நான் கேட்கின்றேன் பதில்
கூறுவாயாக.

இளங்கிரந்தையார்.

149

[உடன் போக்குரைத்த தோழிக்குத் தலைவி கூறியது.]

தோழி! நாணம் நம்மோடு நீண்ட
காலமாக உட
னிருந்து வருந்தியது. இனி வெள்ளிய பூவையுடைய கரும்பின் உயர்ந்த மணலைக்கொண்ட சிறிய கரை, நல்ல நீர்
நெருங்கி யடித்தலால் அழிந்து
சிதறினாற் போலத், தாங்கும்
அளவு தாங்கிக் காமம் நெருக்க என்பால்
நில்லாதுபோய்
விடும். அது இரங்கத்தக்கது.

வெள்ளி வீதியார்.

150

[இரவுக்குறி நேர்ந்த தோழிக்குத் தலைவி
இயம்பியது.]

தோழியே! பரணின் மீதிருக்கும் குறவன்
கொளுத்
திய நறுமணமுள்ள
புகையுடைய கொள்ளியானது விண்

மீனைப்போல, இடந்தோறும் இடந்தோறும் பிரகாசிக்கும் ஓங்கிய மலை நாட்டையுடைய தலைவனது சந்தனம் பூசிக் காய்ந்த மார்பினை நினைந்தாற் காம நோய் பெருகும் அதனை யணைந்தால் அந்நோய் இல்லையாகும் இது என்ன ஆச்சரியம்!

மாடலூர்க்கிழார்.

## 151

[பொருள் தேடத் துணிந்த நெஞ்சை நோக்கித் தலைவன் கூறியது.]

ஆண் வங்கா நீங்கத்தனித்த செங்காலையுடைய பேடை, எழாலென்னும் பறவை தன் மீது நெருங்க வீழ்ந்ததாகக்; கணவனாகிய ஆண்பறவையைக் காணமல் குழலினது இசையைப் போன்ற குரல்களையுடையனவாய்க், குறிய பல ஒலிகளால் அழைக்கும் குன்றைப் பொருந்திய சிறிய வழிகள் கடத்தற்கரிய வென்றெண்ணமல், மறத்தற்கரிய காதலி இங்கே தங்க நான் செல்வேனென்று துணிவது இங்கே நமது இளமைப் பருவத்துக்கு முடிவாகும்.

தூங்கலோரி.

## 152

[ஆற்ற வில்லையென்று இடித்துரைத்த

தோழிக்குத் தலைவி சொல்லியது.]

ஆமையின் பார்ப்பைப் போன்ற காமம்; காதலர் நம்மைச் செயலறும்படி விட்டு விட்டால், தாயில்லாத முட்டை கிடந்து அழிவதைப் போல அழிவதையல்லது வேறென்ன பயனையுடையது? என்னை இடித்துரைப்போர் இதனைச் சிறிதும் அறிந்திலர்.

கிளிமங்கலங்கிழார்.

**153**

[தலைவன் வருதலைத் தடுத்தலென்ன காரணமென்ற தோழிக்குத் தலைவி கூறியது.]



யாய். நின்னால் வருத்தப்படும் மகளிர் துணைவரைப் பெற்றிலர். ஆதலின் அவர் இரங்கத்தக்கார். அங்ஙனமாக இங்ஙனம் நீ செய்தல் எதன் பொருட்டு?

ஔவையார்.

**159**

[தலைவியை இற்செறிக்கக் கருதியிருப்பதைத் தோழி தலைவனுக்குப் புலப்படுத்தியது.]

அறிவின்மையை உடைய இவ்வூர், தழையை யணிந்த அல்குலைத் தாங்கலாற்றாத நுட்பமான இடைக்குத் துன்புண்டாகும்படி அழகிய மிருதுவான மார்பிடம் நிறையப் பெருத்துப் பெருமையையும் தேமலையுமுடைய முலைகள் திண்ணத்தோடு மாறுபட்டன: அழகிய குண்டலத்தை யணிந்த தலைவி என்ன ஆவாளோ என்றெண்ணும் துன்பம் நிறைந்தமனத்தோடு ஏனென்று கேளாத கவலையையுடைய

மாக்களையுடையது.

வடமவண்ணக்கன் பேரிசாத்தன்.

## 160

[விரைவில் வரைவரென்றாற்றிய

தோழியை நோக்கித்

தலைவி கூறியது.]

தோழி! நெருப்பை யொத்த சிவந்த தலையை

உடைய

ஆண் அன்றில் இருமீனை யொத்த வளைந்த அலகையுடைய பெண் அன்றிலோடு, தடாமரத்தினது உயர்ந்த கிளையின் கண்ணுள்ள கூட்டிலிருந்து, ஒலிக்கின்ற மிக்க வீருளை யுடைய நள்ளிரவு பொருந்திய அதிகக் குளிரையுடைய கூதிர்க்காலத்திலும் தலைவர் வந்தாரில்லை. நங் தலைவர் என்னை மணந்து கொள்ளுவது இப்படித்தானே ?

மதுரை மருதன் இளநாகன்.

## 161

[தலைவன் சிறைப்புறத்தானாகத் தலைவி கூறியது.]



மிக விருந்துண்ணும்படி தலைவரது தேர் வருகிறதென்னும் உரை வந்திலது

உரோடகத்துக்காரத்தன்.

## 156

[இடித்துரைத்த பாங்கனுக்குத் தலைவன் கூறியது.]

பார்ப்பன மகனே! பார்ப்பன மகனே!! செம்பூவை

யுடைய புரசமரத்தினது நல்ல பட்டையைக் களைந்துவிட்டு அதன் தண்டோடு பிடித்த தாழ்கின்ற கரகத்தையும் விரத வுணவையுமுடைய பார்ப்பன மகனே!!! வேதத்தை யறிந்த நின் அறிவுரைகளுள்; பிரிந்தோரைச் சேரச் செய்யும் மருந்தும் இருக்கின்றதோ? இங்ஙனம் நீ சொல்லுதல் மயக்கத்தால் வந்ததாகும்.

பாண்டியன் ஏனாதி நெடுங்கண்ணன்.

## 157

[பூப் பெய்திய தலைமகள் உரைத்தது.]

கோழி, குக்கூ வென்று கூவிற்று. அதற்கு நேரே தோளைத் தோய்ந்த காதலரைப் பிரியச் செய்யும் வாளைப் போன்ற விடியற்காலம் வந்தது. எனது மாசற்ற நெஞ்சம

அச்சத்தை யடைந்தது.

அள்ளூர் நன்முல்லை.

## 158

[தலைவன் இரவுக்குறிக்கு வந்தபோது தலைவி தோழிக்குச் சொல்லுவாளாகச் சொல்லியது.]

உயர்ந்த மலையின் பக்கத்திலுள்ள பாம்புகள் இறக்கும்படி, இடிக்கின்ற மிக வேகத்தையுடைய இடியேற்றின் இடிக்கும் முழக்கத்தோடு சேர்ந்து காற்றோடு வந்த நிறைந்த நீராகிய கருப்பத்தையுடைய பெரிய மழையே! நின்பாற் பேரிரக்கம் இல்லையோ? பெரிய கீர்த்தியையுடைய இமயமலையையும் அசைக்கும் தன்மையினையுடை



யாய். நின்னால் வருத்தப்படும் மகளிர் துணைவரைப் பெற்றிலர். ஆதலின் அவர் இரங்கத்தக்கார். அங்ஙனமாக இங்ஙனம் நீ செய்தல் எதன் பொருட்டு?

ஔவையார். **159**

[தலைவியை இற்செறிக்கக் கருதியிருப்பதைத் தோழி தலைவனுக்குப் புலப்படுத்தியது.]

அறிவின்மையை உடைய இவ்வூர், தழையை

யணிந்த அல்குலைத் தாங்கலாற்ருத நுட்பமான இடைக்குத் துன் புண்டாகும்படி அழகிய மிருதுவான மார்பிடம் நிறையப்
பெருத்துப் பெருமையையும் தேமலையுமுடைய முலைகள் கிண்ணத்தோடு மாறுபட்டன: அழகிய குண்டலத்தை யணிந்த தலைவி என்ன ஆவாளோ
என்றெண்ணும் துன்பம்
நிறைந்தமனத்தோடு ஏனென்று கேளாத கவலையையுடைய மாக்களையுடையது.

வடமவண்ணக்கன் பேரிசாத்தன்.

## 160

[விரைவில் வரைவரென்ருற்றிய தோழியை நோக்கித் தலைவி கூறியது.]

தோழி! நெருப்பை யொத்த சிவந்த தலையை உடைய ஆண் அன்றில் இருமீனை யொத்த வளைந்த அலகையுடைய பெண் அன்றிலோடு, தடாமரத்தினது உயர்ந்த கிளையின்

கண்ணுள்ள கூட்டிலிருந்து, ஒலிக்கின்ற மிக்க வீருளை யுடைய நள்ளிரவு பொருந்திய அதிகக் குளிரையுடைய கூதிர்க்காலத்திலும் தலைவர் வந்தாரில்லை. நந் தலைவர்

என்னை மணந்து கொள்ளுவது இப்படித்தானோ?

மதுரை மருதன் இளநாகன்.

## 161

[தலைவன் சிறைப்புறத்தானாகத் தலைவி கூறியது.]



இராப்பொழுதும் மிக்க இருளையுடையதாயிற்று.
மழை பெய்தலும் பேய்களும் கண்ணை மூடி நடுங்கும்படி பொழிவதாயிற்று. இவைகளுக்கு மேலாகத் தாயும் புலிப் பல் தாலியை யணிந்த தன் மகனைத் தழுவி அன்னே! என்று என்னைக் கூப்பிடுவாள். அக்காலை தனது மலைச்
சந்தனம் வாசம் வீசும் மார்பையுடைய தலைவன் மழையில் நனைந்த யானையைப்போல வீட்டுப் புறத்தே வந்து நின்றான், அவன் நினைத்தது நிறைவேறவில்லை.

## 162

நக்கீரர்.

[வினைமுற்றிமீளுந் தலைமகன் முல்லைக் குரைப்பானு யுரைத்தது.]

முல்லையே ! வாழி. முல்லையே ! மேகத்தாற் புரக்கப் பெற்ற நீரையுடைய அகன்ற முல்லை நிலத்தின் கண், பலருந் தம்மில்லத்தில் புகும் ஒளியற்ற மாலைக்காலத்தில்; நீ நினது சிறிய வெள்ளிய அரும்புகளினால் புன்னகையைச் செய்கின்றாய். தனிமையா யிருப்போரிடத்தில் எள்ளி நகைப்பாய் போலக் காட்டுமிது நினக்குத் தகுமோ?

கருவூர்ப் பவுத்திரன்.

## 163

[தலைவி கடலை நோக்கி இரங்கிக் கூறியது.]

கடலே ! பூழி நாட்டாரது, சிறிய தலையையுடைய வெள்ளாட்டின் கூட்டம் பரவினாற்போன்ற மீனை யுண்ணுங் கொக்குகளையுடைய சோலை சூழ்ந்த பெரிய துறையினிடத்து, வெள்ளிய மலரையுடைய தாழையைத் திரைகளலைக்கின்ற நள்ளிரவிலும்

யினது ஒலி கேட்கும். நீ யாரால் வருத்தமடைந்தனையோ ?

அம்மூவன்.

குறுந்தொகை வசனம்

63

164

[காதற் பரத்தை தலைமகட்குப் பாங்காயினார் கேட்ப உரைத்தது.]

தோழியே! தலைவி தன் மடமையாற் புலக்கும் அத்தகைய தன்மையை நாந் தலைவன் திறத்துடையேமாயின்; திரண்ட கொம்பையுடைய வாளை மீனினது நிறைந்த மடப்பத்தையுடைய பெண்ணினது, கொத்தையுடைய தேமாவினது உதிர்ந்த இனிய பழத்தைக் கவ்வுதற் கிடமாகிய, மிகப் பழைய வேளிருக்குரிய குன்றூருக்குக் கிழக்கிலுள்ள குளிர்ச்சியையுடைய பெரிய கடல் எம்மை வருத்துவதாக.

மாஙகுடி
மருதன.

## 165

[குறை மறுக்கப்பட்ட தலைவன் தன் நெஞ்சிற் குரைத்தது].

ஏறுவதற்கரிய கரையில் நின்ற உப்பையேற்றியுள்ள வண்டி, பெரிய மழை பொழிந்ததனால் அழிந்ததுபோல; இவளது கரிய கூந்தலின் இயற்கை யழகைக் கண்டு, கள்ளுண்டு அறிவிழந்து மகிழ்ந்ததன் பிறகும், கள்ளை யுண்டாற்போல நீ பிரியத்தை யடைந்தாய்.

பரணர்.

## 166

[காப்பு மிகுதிக்கண் தோழி தலைமகட்குக் கூறியது.]

தண்ணிய கடலின் கண்ணே உண்டாகும் அலைகள், மீன்களைப் பெயர்த்தலினால் வெண்மையான சிறகுகளை யுடைய நாரையின் வரிசை பெயர்ந்து அயிரை மீனை யுண்ணுதற்கிடமாகிய மரந்தையூர்; தலைவனோடு இருக்குங்கால் மிக நன்மையையுடையது. தலைவனைப் பிரிந்துவைகின் வருத்தத்தைத் தருவதற்கு இடமாகின்றது.

கூடலூர்க்கிழார்.



## 167

[தலைவியுந் தலைவனும் இல்லறம் நடத்தும் மனைக்குச்
சென்று வந்த செவிலித்தாய் நற்றாய்க் குரைத்தது.]

இறுகிய தயிரைப் பிசைந்த காந்தள் மலரை யொத்த
மெல்லிய விரலைத் துடைத்துக் கொண்ட ஆடையைத் துவை
யாமலுடுத்துக்கொண்டு, குவளை மலரை யொத்தமை
யுண்ட கண்களில் தாளிப்பின் புகைகமழத், தானே
இண்டிச் சமைத்த இனிய புளிப்பையுடைய குழம்பைத் தன்
தலைவன் இனிதென் றுண்பதனால் ; ஒள்ளிய நெற்றியை

யுடைய தலைவியின் முகம் நுட்பமாக மகிழ்ந்தது.

கூடலூர்க்கிழார்.

## 168

[பொருள் வலிக்கும் நெஞ்சிற்குத்தலைவன் உரைத்தது.]

தலைவி நலல மாமை

நிறைத்தையுடைய சரீரத்தையுப் ;

மாரியில் மலரும் பிச்சியினது நீரொழுகும் கொழுவிய

அரும்புகளில், பெரிய பசிய பனங்குடையில் பலவற்றை

ஒன்ருக வைத்து மூடிப், பெருமழை பெய்கின்ற விடியற்

காலத்தே விரித்து விட்டாற் போன்ற நல்ல தண்மையையு

முடையவள். தண்ணீரில் விடும் தெப்பத்தைப் போன்ற

வளைந்த சந்தினை யுடைய பருத்த அவள் தோள்களைச் சேர்

தலும் பிரிதலும் இலம். பிரிவோமாயின் உயிர் வாழ்தல்

அதனினும் இலம்.

சிறைக்குடியாந்தையார்.

## 169

[தலைவி தலைவனொடு புலந்து கூறியது.]

ஐய! நாம் நும்மொடு சிரித்த மிகவெள்ளிய பற்கள், பாலை நிலத்திற் செல்லும் யானையினது மலையைக் குத்திய கொம்பைப்போல விரைவாக முறிவனவாக. எமதுயிர், பாணர் பச்சை மீன் வைத்த மண்டையைப்போல எமக்குப்



பெரிய வெறுப்பைத் தருவதாகி உம்மையும் பெறேமாய் அழிக.

வெள்ளி வீதியார்.

## 170

[வரைவிடை யாற்றாளெனக்கவன்ற தோழிக்குத் தலைவி கூறியது.]

அருவியால் தரப்பெற்றதும் விளையவேண்டிய காலத்தில் விளைந்ததுமான கொறுக்காந் தட்டையை, ஆழ்ந்த நீர் நிலையை நாடுகின்ற யானையானது கவளமாக வுண்ணும், மலை பொருந்திய நாட்டையுடைய தலைவனது நட்புக் கெடாமையை நான் நன்றாக அறிந்தேன். அதனை யறியாதோர் தமக்குத் தோன்றியவற்றைக் கூறுக.

கருவூர்க்கிழார்.

## 171

[அயலார் வரைவுமுயற்சி பயனில்லை யென்று தோழிக்குத் தலைவி கூறியது.]

தோழி! இனிமேற் காண்பாயாக. புதுவருவாயை யுடைய மிக்க புனலையும், அடைகரையையுமுடைய ஆழமான குளத்தின்கண் ணமைத்த மீன் வலையில், மிருகம் அகப்பட்டாற் போல அயலாருடைய வரைவு முயற்சி என்ன பயனைத் தரும்?

பூங்கணுத்திரையார்.

## 172

[தலைவர் என்னைப் பிரிந்து துன்புறுவாரென்று வருந்துகிறேனென்று தலைவி கூறியது.]

வலியையுடைய அழகிய சிறையையும், மென்மையாகப் பறத்தலையுமுடைய வெளவால்கள்; பழுத்த மரங்களை

னேத்துச் செல்லும் பிரிந்தார்க்குத் துன்பந்தரும் மாலைக் காலத்தில், யாந்தமியேமாகும்படி எம்மை யீங்கு வைத்துப் பிரிந்த தலைவர், தான் தனித்தவராகவும் இனிமையையுடை
E



யரோ? என் மனம் ஏழுரிலுள்ளார்க்குப் பொதுவாய வினையின் பொருட்டு, ஓரூரிற் செய்த உலையிற் செறித்த துருத்தியைப்போல எல்லையை யறியாமல் வருத்தத்தை யடையும்.

கச்சிப்பேட்டு நன்னாகையார்.

**173**

[குறை மறுக்கப்பட்ட தலைமகன் தோழிக்குரைத்தது.]

பொன்னையொத்த ஆவிரையின் புது மலரை நெருங்கக் கட்டியதும்,
பலவாகிய நூல்களையுடைய மாலைகளை யணிந்த பனைமடலாலுண்டாக்கப்பட்டதுமான குதிரை

மைய, அதிற் கட்டப்பட்ட

மணிகளொலிக்கும்படி யேறி, நாணத்தைவிட்டு மனத்தை யழிக்குங் காமநோய் மேன் மேலும் மிகுதியாக இன்னுளால் இக் காமநோய் உண் டாக்கப்பட்ட தென்று யான் கூற, அதனைக்கண்ட இவ் ஊரார் எல்லோருக்கும் முன் நின்று தலைவியினது பழியைக் கூறுவர்.

அத்தகைய பரிகாரத்தை யானறிந்திருத்தலால் இவ்விடம் விட்டுப் போகின்றேன்.

மதுரைக் காஞ்சிப் புலவன்.

## 174

[பிரிவுணர்த்திய தோழிக்குத் தலைவி சொல்லியது.]

பெய்தலையுடைய மழை பெய்யாது நீங்கிய தனிமை மிக்க பாலை நிலத்தில், கவைமுள்ளையுடைய கள்ளியினது காய் வெடிக்கும்பொழுதுண்டாகும் ஓசையானது, நெருங்

கிய மென்மையான சிறகுகளையுடைய ஆண் பெண்ணுகிய இரட்டைப் புருக்களை நீங்கச் செய்யும் அருவழிகள் கடத்

தற்கரிய வென்று நினையாராகி, நம்மைத் துறந்து

பொருளைத் தேடப் பிரிவாராயின் இவ்வுலகத்தில் நிச்சயமாகச் செல்வமே உறுதிப் பொருளாகும். அருள்தான் தன்னை யாரும் ஏற்றுக்கொள்வாரில்லாத பொருளாகும்.

வெண்பூதி குறுந்தொகை வசனம் 67

## 175

[பிரிவிடைக் கடுஞ்சொற் சொல்லி வற்புறுத்துந் தோழிக்குத் தலைவி சொல்லியது.]

தோழி! பருவத்தையுடைய தேனை விரும்பிப், பலவண்டுக் கூட்டங்கள் உலாவுதலையுடைய அலைகள் மோதிய செறிந்த மணலடைந்த கரையின்கண் உள்ள அலைத்துளியால் நனைந்த புன்னைமரத்தினது பெருங்கிளையினிடத்துக் கூடுகின்ற மலர்ந்த பூவையும் கரிய நீரையுமுடைய கடற்கரைத் தலைவன் பொருட்டு வருந்தேன். இவளே னிங்கிவ் விதமாயினளென்று பலரறியும்படி கூறுதல் முழுவது மொழிக. அவர்கள் கூறும் பழிச்சொல் என்ன துன்பத்தைச் செய்வதாகும்?

உலோச்சன்.

## 176

[தோழி, கிழத்தியைக் குறை நயப்பக் கூறியது.]

ஒருநாள் வந்தானல்லன். இரண்டுநாள் வந்தானல்லன், பல நாட்கள் வந்து பணிவாகிய சொற்களைப்பேசி எனது நல்ல நெஞ்சத்தை இளகச் செய்த பின்பு, மலையினிடத்து முதிர்ந்து வீழ்ந்த தேனிறாலைப்போலப் போயினவனும், நமக்குப் பற்றுக் கோடாகிய எந்தையுமாகிய தலைவன் எங்கே இருக்கின்றானோ? வேற்றுப் புலங்களையுடைய நல்ல நாட்டிற் பெய்த இடியையுடைய மழையின் நீர் கலங்கி வருவதுபோல என் நெஞ்சு கலங்கும்.

வருமுலையாரித்தி.

## 177

[தலைவன் மாலைக்காலத்தில் வருவானென்று தோழி தலைவிக்குக் கூறியது.]

தோழி! கடலானது ஓசையடங்க; கடற்கரைச் சோலை மயக்கத்தை யுடையதாக; துறையையும் நீரையுமுடைய கரிய கழி, பூக்கள் குவிந்ததனால் பொலிவழிந்தது



பொதுவிடத்திலுள்ள அழகிய பனைமரத்தினது

மடலின் கண்ணே சேர்ந்த வாழ்க்கையையுடைய அன்றிற் பறவை

யும் மெல்லக் கூவும். முன்பு நாம் தம்மைப் புலந்தாலும் ஆங்குப்பிரிதலை யஞ்சி நீங்கற்கரிய காம வின்பத்தை அலைத்தும் பெற்றவராகிய தலைவர் இன்று வருவர்.

உலோச்சன்.

## 178

[தலைவனுந் தலைவியும் வாழும் மனைக்குச் சென்ற தோழி, புணர்ச்சி விதும்பல் கண்டு வருந்திக் கூறியது.]

அயிரை மீனை மேய்தற்குப் பரந்த அழகிய குளிர்ந்த

பொய்கையினிடத்து, அதிக அழகையுடையனவாகிய

உட்டுளையோடு கூடிய திரண்ட தண்டையுடைய

ஆம்பலைப் பறிப்போர் நீர் விருப்பத்தை யடைந்தாற்போல, இவள் முலையிடத்துத் துயிலப் பெற்றும் நடுங்குதலை யொழிந்திலீர். யாம் தொழுது காண்கின்ற பிறையைப் போலத் தோன்றி, நுமக்கு அரியமாயிருந்தகளவுக் காலத்தில் மிக்க வருத்தத்தைப் பொறுத்தீர். அதன்பொருட்டு நான் வருந்துகிறேன்.

நெடும்பல்லியத்தை.

179

[பகல்வருவானை இரவுக்குறி நேர்ந்தாற்போலத் தோழி வரைவு கடாயது.]

ஐய ! கல்லென்கின்ற ஆரவாரத்தையுடைய காட்டின் கண் கடமாவை நீ யலைப்பப் பகற்பொழுதும் மங்கியது. நின்னுடன் வேட்டையாடிய நாய்களும் இளைத்தன. நீ இப்பொழுது போகற்க. உயர்ந்த மலைப்பக்கத்தில் இனிய தேனிறாலைக் கிழித்த கூட்டமாகிய பசிய மூங்கில்களின் குருத்தைத் தின்ற ஆழ்ந்த வாயையும், அறிவின்மையை யுமுடைய யானை தின்றதனாற், கூழையாகிய மூங்கிலைக்



கொண்ட உச்சியினிடையேயுள்ளதாகிய அது எமதூரா கும்.

குட்டுவன் கண்ணன்.

180

[தலைவனது பிரிவினால் வருந்திய தலைவியை
நோக்கித்
தோழி கூறியது.]
நினது அல்குலினிடத்துப் பொருந்திய அழகிய
தேமல்
வாடும்படி பிரிந்த தலைவர், பேயின்பற்களை
யொத்த பருத்த
நகங்களையும், பரந்த அடியினையுமுடைய பெரிய
யானைத்
திரளின் வரிசைத்தலைவன் வந்து கைக்கொள்ளின்
அழிந்து,
பாத்தியின் கண் வீழ்ந்த கரும்புகளின்
கணுக்களின்
இடையேயுள்ள பகுதியையொத்த
வருந்துதலையுடைய தனி
மூங்கில் உயர்ந்த பாலை நிலத்தைக் கடந்து,
வன்னெஞ்சின
ராகத் தாம்போன காட்டினிடத்துப் பொருளை
யடைந்
தாரோ இல்லையோ ?

கச்சிப்பேட்டு நன்னாகையார்.

[பரத்தையிற் பிரிந்த தலைவனைத் தோழி இயற்பழித்த விடத்துத், தலைவனைப் பழித்தல் வேண்டாமென்று தலைவி கூறியது.]

தோழி! பெரிய கொம்பையுடையதும் சமீபத்தில் கன்றைப் பெற்றதுமான பெண்ணெருமை, உழவனால் கட்டப்பட்ட கன்றை விட்டு அகலச் செல்லாமல், பக்கத்தி லுள்ள பசும் பயிர்களை மேய்வதற்கிடமாகிய ஊரை யுடைய தலைவனது திருமண வாழ்வுக்குரிய பலகடமைகளை மேற்கொண்ட பெரிய வயோதிகப் பெண்களாகிய நமக்கு, ஊடற் காலத்தினிடையே, தலைவ ரித்தகையோர் என்னும் துன்பத்தைத் தரும் இத்தகைய வார்த்தையால் என்ன பிர யோசனம் ?

கிளிமங்கலங் கிழார்.

## 182

[தோழியாற் குறை மறுக்கப்பட்ட தலைவன் மடலேறுவேன் என்று கூறியது.]

அழகு வழிந்து பிரகாசிக்கும் அசைந்த நடையையுடைய தலைவி நந்திறத்தில் மனமிணங்கினாள் இல்லை. நாம் விடுவதற்குப் பொருந்திய தூது, மேலான உச்சியைக் கொண்ட பனையின்கண் விளைதலையுடைய பெரிய மடலாற் செய்த குதிரைக்கு மணியணிந்த பெரிய மாலையை முறையோடணிந்து, நாம் வெண்மையான என்புமாலையைத் தரித்துக் கொண்டு பிறரிகழ அம் மடல்மாவின் மேல் தோன்றி ஒரு நாளிற்பெரிய நாணத்தை நீக்கிவிட்டுத் தெருவின்கண் செல்லவும் தருவதோ ?

மடல்பாடியமாதங்கீரன்.

## 183

[பருவ வரவின் கண் ஆற்ருளெனக்கவன்ற தோழிக்குத் தலைவி கூறியது.]

மழை பொழிவதற்கு முன் பொலிவழிந் திருந்த காயாவினது பூப் பொருந்திய பெரிய கிளை, மழைக்குப் பின் மெல்லிய மயிலினது கழுத்தைப் போலக் காணப்படும் காட்டிடத்தையுடைய புல்லிய நிலத்தின் கண் பிரிந்து சென்று; காட்டிடத்துள்ளனவாகிய கொன்றையின் அழகிய பருவ மலர்கள் நம்மைப்போல் பசக்கும் கார்ப்பருவத்தில், சிறிய தலையையுடைய பெண்மானிடத்து நின்றும் நீங்கிய நெறிந்த கொம்பையுடைய ஆண் மானையும் நம் தலைவர் காண்பரோ?

ஔவையார்.

184

[இடித்துரைத்த பாங்கனை நோக்கித் தலைவன் கூறியது.]



மயிற்பீலிக் கண்ணைப்போன்ற

மாட்சிமைப்பட்ட முடியையுடைய பாவைபோல் வாளாகிய ; நுண்ணிய வலையையுடைய பரதவர் மடமகள் கண் வலையினிடத்து, அங்குச் செல்வார் அகப்படுகின்ற கடற்கரைச் சோலையில் மாட்சிமைப்பட்ட தகுதியையுடைய எனது நெஞ்சம், இதற்

கிது சிறந்ததென்று ஆராயாது அக்கண் வலையினிடத்தே யகப்பட்டு ஆண்டுத் தங்கியது. அறிவான் மிக்க பெரியோர்க்குத்தான் கண்டதை மறைத்துப் பொய்ச் சாட்சி சொல்லும் இயல்பில்லை. ஆதலின் யாம் கூறும் இதனை உண்மையாகக் கொள்க. அச்சிற்றூரிடத்துச் செல்லுதலை யொழிமின்கள்.

ஆரியவரசன் யாழ்ப்பிரமதத்தன்.

## 185

[இரவுக்குறிக் காலத்து வேறுபடக் காரணமென்னை யென்ற தோழிக்குத் தலைவி சொல்லியது.]

தோழி ! பல வரிசைக் கீற்றுகளையுடைய அரவினது படமொடுங்கியதைப்போலக் குவிந்து, கீழ்காற்றால்

தொலைந்த ஒண்மையையுடைய செங்காந்தண்மலர், பாறையின்மேற் கவிந்து கிடக்கும் நாட்டையுடைய தலைவனுக்கு ; எனது நல்லமாமையையுடைய சரீரத்தினது மிக்க துயருடைய தன்மையை : நெற்றி பசலை பரந்து, தேமலொளி யிழந்து, நீண்ட மெல்லிய பருத்த தோள்கள் மெலிந்து, வளைகள் நெகிழப் பெற்று, இத்தன்மையளாதல் உம்மால் ஆகியதென விளங்கச்சொன்னால் என்ன குற்றமாகும் ?

மதுரை அறுவை வாணிகன்

இளவேட்டன்.

**186**

[பருவ வரவின்கண் ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குத் தலைவி கூறியது.]



தோழி ! என்னுடைய கண்கள், அதிக முழக்கத்தை யுடைய இடியேற்றோடு மேகம் மழைபெய்து கலந்த முல்லை நிலத்திலுள்ள முல்லையினது மெல்லிய கொடிகள்,பற்களைப் போல அரும்பும் நாட்டையுடைய தலைவன் பொருட்டுத்

துயிலைத் துறந்தன.

ஒக்கூர் மாசாத்தி.

## 187

[தலைவனை இயற்பழித்த தடுத்தது.]

தோழியைத் தலைவி

தோழி ! செம்மையான மலைப் பக்கத்தின்கண் தங்கு தலையுடைய வருடைமான்மறியினது குட்டி, தனது தாயின் மடியினின்றுஞ் சுரக்கின்ற தீம் பாலை நிறைய வுண்டு, பெரிய மலையினது நிழலில் துள்ளுதற்கிடமாகிய நாட்டையுடைய தலைவன் ; கல்லினும் வலியன். என் நெஞ்சம் அவன் வன்மையையுடையானென்று கருதாமல்

அவன் திறத்து மெலிவை யடையும்.

## 188

கபிலர்.

[பருவங் கண்டு அழிந்த கிழத்தி தோழிக்கு உரைத் தது.]

முல்லைக்கொடிகளில் அரும்புகள் முதிர்ந்தன. குளிர்ந்த காலத்தை யேற்ற அகன்ற முல்லை நிலங்கள், முல்லை மலர் களோடு அழகு முதிர்ந்தன. எனது மாட்சிமைப்பட்ட அழகைக் கெடுத்தலை நினைத்து மாலைக் காலம் வந்தது. எனது வெள்ளிய ஆபரணங்களை நெகிழச் செய்த தலைவர் இன்னும் வந்தாரில்லை.

மதுரை அளக்கர் ஞாழார் மகன் மள்ளன்.

## 189

[வினைசெய்ய வேண்டுமென்று சுமத்தப்பட்ட காலத்தில், தலைமகன் பாங்கற்கு உரைத்தது.]



இன்றைக்கே காரியத்தின் பொருட்டுப் போய், நாளை திரும்பி வருவேமாக. குன்றிலிருந்து இழியும் அருவியைப் போல வெள்ளிய தேர் விரைந்து செல்ல, இளம்பிறையை யொத்த அத்தேரினது ஒளி தங்கிய சக்கரம், விசும்பில் நின்றும் விழுகின்ற கொள்ளியைப்போலப், பசிய பயிர் களைத் துணிப்பக் காற்றைப் போல் இயலுதலையுடைய

வேகத்திஞல், மாலையில் தலைவி யிருக்குமிடத்தை யடைந்து சிலவாகிய வரிசையையுடைய வெள்ளிய வளைகளை யணிந்த அவள் து, அதிக மாட்சிமைப்பட்ட சரீரத்தைச் சேர்ந்து மகிழ்வோம்.

மதுரை ஈழத்துப் பூதன் றேவன்.

## 190

[பிரிவிடை யாற்ருளாகிய தலைவி தோழிக்குச் சொல்லியது.]

தோழி! நெறிப்பையுடைய கரிய கூந்தலோடு பெரிய தோளைத்தடவி இறுக வணிந்த வளைகள் நெகிழும்படி, தேடு கின்ற பொருளின் பொருட்டுப் பிரிந்து சென்ற தலைவர், புள்ளிகளையும் வரிசைக் கீற்றுகளையும் வெஞ்சினத்தையு முடைய பாம்புகளின் பசுந்தலைகள் துணியும்படி, வலியை யுடைய இடியேறு முழங்குகின்ற நள்ளிரவின் கண். பல பசுக்களுள்ள தொழுவத்தில் நல்ல ஆனேறு செல்லுந் தோறு மொலிக்கின்ற ஒற்றை மணியின் குரலையறிவாரோ?

பூதம்புல்லன்.

## 191

[பிரிவிடையாற்ருளெனக் கவன்ற தோழிக்குத் தலைவி யுரைத்தது.]

எனது தோழியே! இதனை என்னென்று கூறுவேன்? வலிய மரக்கிளையிலிருந்த பெருந் தொகுதியையுடைய பறவைக் கூட்டங்கள், தாந்துணைகளோடு சேர்ந்தமையால்



பிரிந்தோருடைய வருத்தத்தை நினையாதனவாய்த், தீங்குரலால் அழைக்கக்கேட்ட பின்பும்; நம்மைப்பிரிந்த அயலார் போன்ற தலைவர் இவ்விடத்துக்குத் திரும்பி வந்தால், மலர்களை மிகுதியாக அணியும் கூந்தலை அலங்கரித்தலை யொழிக. எம்மைத் தொடுதலையும் ஒழிக. என்று கூறுவேம். அதனை உங்குக் கெண்பாயாக.

.....................

## 192

[தலைவருடைய பிரிவை யான் எங்ஙனம் பொறுப்பே னென்று தலைவி கூறியது.]

நோயால் வருந்தி உறையுந் தோழி ! அவர் இங்கே மீண்டு வருவார் வருந்தற்க ; என்று நீ சொல்வதனுல்
இனி நான் அழாமலிருப்பேனே ? பிரகாசிக்கின்ற அழகிய
இறகுகளையுடைய கரியகுயில், தன் சரீரம் பொன்னினது உரைத்த பொடி விளங்குகின்ற உரைக்கல்லை ஒக்கும்படி, மரத்தின் கிளையினிடத்து நறும்பூந்தாதைக் கோதுகின்ற
இளவேனிற்காலத்திலும், தலைவர் வராமையால் அலங் கரிக்கப்பெருத கொத்தாகிய கூந்தலைத்
தடவுவேன்.

கச்சிப்பேட்டு நன்னுகையார்.

## 193

[களவுக் காலத்தில் ஆற்றியிருந்தமையைக் கடிநகர்ச் சென்ற தோழி தலைவிக்குக் கூற அதற்குத் தலைவி கூறியது.]

கள்ளைப் பெய்த நீலக்குப்பிகளைப் போன்ற சிறிய வாய் பொருந்திய சுனையின் கண் உள்ளனவாகிய பிளவு பட்ட வாயையுடைய தேரைகள், தட்டைப்பறையைப் போல ஒலிக்கும் நாட்டையுடைய தலைவன், களவுக் காலத் துப் பழைய திங்களில் நெடிய வெண்ணிலாவின்கண்

எனது தோளைத் தழுவினான். அதனால் இக்காலத்திலும்



அவன் சூடிவந்த முல்லையினது மொட்டறுமலரின் வாசனையை என் தோள்கள் வீசும்.

அரிசில்கிழார்.

## 194

[தலைவன் வருவதாகக் கூறிச் சென்ற பருவத்தின்கண் தலைவி ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குத் தலைவி கூறியது.]

தோழி! மேகம் எழுந்து மின்னுதலைச் செய்து சப்திக்கின்ற செயல் ஒன்றுதானா எனக்குத் துன்பந் தருவது? மேகவொலிக் கெதிராகக் கானகத்திலுள்ள மயில்கள் விரைவனவாகி ஆரவாரிக்கும். இங்ஙனம் ஏதுவில்லாமற் கலந்த இரண்டு பொருள்களாலும் என்பேதை நெஞ்சம் பெரிய கலக்கத்தையடையும். இம்மனத்தினது தன்மையை எத்தகையதென்று சொல்வது?

கோவதத்தன்.

[பிரிவிடைப்

**195**

பருவ வரவின்கண் கிழத்தி மெலிந்து கூறியது.]

தடவுதல் பொருந்தி யசைந்து வருகின்ற காற்றுச் சீரத்தின்கட்பாய்ந்து பரந்து தீண்ட அதனுல் அலங்கரிக்கப்பெற்ற பொம்மையைப்போன்ற எனது சரீரம் வேறுபாட்டையடைதலை யறியாத தலைவர், விரும்பிச்சென்ற காரியத்தை முடித்துக் கொள்வாராய்ச் சூரியன் வெம்மை தணிந்து அத்தகிரியையடைய துன்பத்தைச் சுமந்து எழுகின்ற வருத்தம் பொருந்திய மாலையில் எங்கேயிருக்கின்ருரோ ? ஐயோ! இம் மாலைக்காலம் துன்பத்தைத் தருவது. தலைவி வருந்துவாள் என்று நினையாதவராஞர்.

தேரதரன்.

196

[வாயில் வேண்டிப் புக்க தலைவனுக்குத் தோழி கூறியது.]

ஐய! என் தோழியாகிய தலைவி ; முன்பு வேம்பினது பசிய காயைத் தந்தாலும் இனிய பொலிவு பெற்ற வெல்லக் கட்டி என்று பாராட்டிக் கூறினீர் ; இப்பொழுது பாரியின் பறம்பு மலையிலுள்ள தைமாதத்திற் குளிர்ந்தனவாகிய குளிர்ச்சியையுடைய சுனையிலுள்ள தெளிந்த நீரைத் தந்தாலும், மிகக் கசக்கிறதென்று கூறினீர் ; நுமது அன்பின் பகுதி அத்தன்மையது.

மிளைக்கந்தன்.

197

[பருவ வரவின்கண் வற்புறுத்துந் தோழிக்குக் கிழத்தி
உரைத்தது.]
தோழி! நோதலுண்டாகும்படி, த ண் ணீ ரை க்
கொண்ட மின் முதலிய தொகுதியை யுடையனவாகிய கார்
காலத்தை யேற்றுக்கொண்ட கிளைத்த மழையையுடைய
ஊதைக் காற்றினது குளிர்ச்சியோடு மிக மயங்கிக் கலந்த,
கூதிர்க்காலம் என்னும் உருவத்தையுடைய எமன், காத
லரைப் பிரிந்திருக்கும் எ ன் னை க் கொல்லுதற்கு வரு
கின்றது யாது செய்வாம்?

கச்சிப்பேட்டு நன்னாகையார்.

## 198

[தோழி! குறியிடம் மாற்றிக் கூறியது.]

யாமரத்தை வெட்டிய மரங்களைச் சுட்ட வழியில்,

கரும்பைப்போன்ற அடியையுடையனவாகிய பசிய தாளை
யுடைய செந்தினையினது மடப்பிடியின் வளைந்த கையைப்
போன்றனவாகிப் பால் நிரம்பிக், கரியெடுக்குங் குறட்
டைப் போல வளைந்த நெருங்கிய குலையையுடைய பசிய

## குறுந்தொகை வசனம்

77 ●

கதிர்களில், தின்னும் பொருட்டு விழுகின்ற கிளிகளை ஓட்டும்பொருட்டுச் செல்வேம். ஈண்டுத் தாய் வருவள். கொல்லும் போர்க்குரிய வேற்படை விளங்குகின்ற பெரிய கையையுடைய மலையனது முள்ளூர்க் காட்டில் வளர்ந்த சந்தன வாசம் வீசும் மார்பினையுடையவனாகி, இங்கு வருதலை யொழிக. இது எமது விருப்பம்.



கபிலர்.

[தோழி இற்செறிப் பறிவுறுப்ப, நெஞ்சிற்குத் தலைவன் கூறியது.]

நெஞ்சே! திண்ணிய தேரையுடைய கைவண்மை வாய்ந்த ஓரியினது கானத்தைத் தீண்டி வீசுகின்ற காற்றைப்போல ; மணக்கின்ற நெறிப் பமைந்தமையைப் போன்ற தண்ணிய கூந்தலையுடைய மாமை நிறத்தை யுடையோளிடத்து; இற்றை நிலையைப் போன்று என்றும் உள்ள நட்பையுடைய இக்காம நோயானது, அழியுங் காலமொன்றில்லாமல் மறுமை யுலகத்தி லும் நிலை பேற்றையடையும். ஆதலின் தலைவியை இப் பிறப்பில் பெறுதல் முடியாதாயினும் மறுமையிற் பெறுதலாகிய பயனொன்றிருக்கின்றது.

பரணர்.

## 200

[தோழி பருவத்தை மறுத்துக் கூறிய விடத்துத் தலைவி கூறியது.]

தோழி! கார்ப் பருவத்துக்குப் பெய்தற்குரிய மழையை யுடைய மாலைக் காலத்தில் வரும் கரிய மேகங்கள், வித்தி வான் பார்ப்பாருக்கு இனிய ஒலியையுடைய இடியேற்றை யுடையனவாகி முழங்கும். முன்பு மழை பெய்த குன்றத் தின் கண், பூமணக்கின்ற தண்ணிய கலங்கலின் மேலே பரவிய மலர்களைச் சுமந்து வந்து புனலும் வீழும். கார்



காலத்திற்கு முன்னரே வருவேமென்று பாதுகாப்பைச் செய்தகன்ற தலைவர் இன்னும் வாராராயினர். நிச்சய மாக அவர் நம்மை மறந்துவிட்டார். நாந்தாமவரை மறவாதவர்களாக இருக்கின்றோம்.

**201**

ஔவையார்.

[தலைவனும் தலைவியும்
இல்லறம் நடத்தும் மனைக்குச்
சென்ற தோழி, வரைந்து கொள்ளும் வரை நன்கு ஆற்றி
யிருந்தாயென்று கூற அப்பொழுது தலைவி

கூறியது.]

கரிய மெல்லிய சிறகுகளையும் கூரிய நகங்களையு
முடைய வௌவால், பாலைக் கலந்தாற் போன்ற உருசியை
யுடைய தேமாங்கனியைத் தின்று, பிறகு நெல்லியினது
புளித்த காயை யுண்டு ; அயலிலுள்ளதும், முள்ளில்லாத
தும், அழகுடன் பருத்ததுமாகிய மூங்கிலின் கண்ணே
தூங்கும்படி, மூங்கி லுயர்ந்து வளர்ந்த சோலைகளை
யுடைய மலை பொருந்திய நாடன், வரைவுக் குரிய பொரு
ளோடு வருவானென்று நம் அயலகத்துக் கிழத்தி கூறி
னள்? அதனால் நான் ஆற்றியிருந்தேன். அங்ஙனம் கூறிய
அவள் சுவர்க்க பதவியை யடைவாளாக.

..................................

## 202

[தூதாக வந்த தோழியை நோக்கித் தலைவி வாயில்

மறுத்தது.]

என் நெஞ்சு வருந்தும் ; என் நெஞ்சு வருந்தும் ;

முல்லை நிலத்தில் நெருங்கி முளைத்த சிறிய இலைகளையுடைய நெருஞ்சியினது கண்ணுக்கினிய புது மலர், பிறகு துன்பத்தைத் தரும்

முள்ளைத் தந்தாற்போல, முன்பு நமக்கினியவைகளைச் செய்து நடந்த காதலர், இப்பொழுது இன்னாதவைகளைச் செய்து நடத்தலால் என் நெஞ்சு வருந்தும்.

அள்ளூர் நன்முல்லை.

குறுந்தொகை வசனம்

79

203

[வாயிலாகப் புக்க தோழிக்குத் தலைமகள் சொல்லியது.]

தோழி! நமது நல்லவர் ; வேற்று

நாட்டாருமல்லர்.

வேற்றூராரு மல்லர். கண்ணினாலே காணும்படி விரை

வில் வருதற்குரிய சமீபத்திலிருந்தும்; கடவுளை விரும்பி

யொழுகும் முனிவர்களைப் போல, என்னை நீங்கியொழுகு

கின்றார். அவர்பொருட்டு நான் முன்னொரு சமயத்தில்

வருந்துதலையுடையவளாயினேன். அஃது இப்பொழுது

இல்லை.

204

நெடும்பல்லியத்தன்.

[தலைமகனுக்குப் பாங்கன் உரைத்தது.]

பெரிய தோளையுடைய தலைவனே! காமம் காமம் என்று அறியார் இகழ்ந்து கூறுவர். அக்காமம் வருத்தமும் நோயும் அல்ல. பழங் கொல்லையாகிய மேட்டு நிலத்தில் தழைத்த முற்ருத இளம்புல்லை முதிய பசு நாவால் தடவி இன்புற்ருற் போல, நினைக்குங் காலத்துப் புதிதாகத் தோன்றுகிற வொரு இன்பமாகும்.

மிளைப்பெருங் கந்தன்.

## 205

[வரைவிடையாற்ருளெனக் கவன்ற தோழிக்குத் தலைவி யுரைத்தது.]

தோழி! அலைகள் கொண்டுவந்திட்ட மணலையுடைய கடற்கரைத் தலைவன், மின்னுதலைச் செய்வதும் கூட்டமாகியதும் பெய்தலையுடையதும் ஆகிய மேகம் மழை பெய்ய விண்ணின்கண் அசையும் அன்னப்பறவை பறப்பதிலுயர்ந்தாற்போல, பொற்படைகளாற் சிறந்த வெள்ளிய தேரிலேறிக், கடலினது கலங்குகிற நீர்த்துளிகள் தேரின்

சக்கரத்தை நனைக்க இப்பொழுது பிரிந்து சென்றான். பசலை இதை யெப்படி யறிந்தது? எனது வாசம் வீசுகின்ற அழகிய நெற்றியில் அது படரத் தொடங்கி விட்டது.

உலோச்சன்.

## 206

[பாங்கன் இடித்துரைத்தபோது தலைவன் உரைத்தது.]

அறிவுடையீர்! அமிழ்தத்தை யொத்த அழகிய இனிய சொற்களையுடைய பண்பு வாய்ந்தவளது குணமும் இத் தகைய துன்பத்தைச் செய்யுமாயின், காமத்தோடு ஒருங்கு வாழ்தல் அருமை. அதனை யணுகுதலை விடுமின்.

ஐயூர் முடவன்.

## 207

[தலைவன் செலவுரைத்த தோழியை நோக்கித் தலைவி சாற்றியது.]

தலைவியினிடத்திலே நம்முடைய செல்கையைச் சொல் லிச் செல்லுவோமாயின் செல்லுதலரி தாகுமென்று; பாலை நிலத்தின் கண்ணுள்ள ஓமைமரத்தின் அழகிய கிளை

யிலிருந்ததும் இனத்தை விட்டுப்பிரிந்து வந்ததுமான பருந்து, தனிமையைக் காட்டுதலைக்கொண்ட தெளிந்த ஓசை ; பாலை நிலவழியிற் செல்லும் மக்கட்கு உசாவுதற் றுணையாக அமைதற்கிடமாகியதும்,கல் மலையினது பக்கத்த தாகியதும் ஆகிய பழைய சிறிய வழியில் நந்தலைவர், தம் காலடிகள் சுவடு செய்யத் தாவிச் சென்றாரென்று கேட்ட நமது அன்பர்கள் பலராவர்.

உறையன்.

## 208

[வரைவிடை யாற்றல் வேண்டுமென்ற தோழிக்குத் தலைவி உரைத்தது.]



தோழி ! நான் தலைவனோடு பொருந்தாத இயல்பை யுடையவள் அல்லேன். பொருந்து மியல்பை யுடையவள் தான். ஆயினும் அயலார் வரைவொடு வருங்காரணத்தினால் மலையினிடத்துப்போர் செய்கின்ற களிறுகளால் மிதிக்கப்பட்ட நெரிந்த அடியையுடைய வேங்கைமரம், குறப்பெண்கள் தம்முடைய கூந்தலிலே அணிந்து கொள்

ளும் பொருட்டு மேலே யேறுமற் கீழே நின்றபடி மலரைக்

கொய்தற்கேதுவாம்படி, தாழ்ந்து மலரும் நாட்டையுடைய

தலைவனோடு பொருந்தேன்.

கபிலர்.

## 209

[பொருள் வயிற் பிரிந்து மீண்ட தலைமகன், தலைவியிடத்துத் தனக்குள்ள அன்பைப்பற்றிக் கூறியது.]

தோழி! அறத்தைச் செய்யும் நெல்லி மரத்தினது

அழகிய பசுங்காய்கள், வலியையுடைய புலிக்குட்டிகள் கொள்ளற்குரிய இடத்தில் உதிர்ந்துருளுகிற கடத்தற்கரிய மலைகளைக் கடந்து போயயாம்;

சென்றவிடத்திலுள்ள சிறு

காரியங்கள் பலவற்றைப்பற்றி நினைத்தே மல்லேம். வழி

யிடத்துள்ள காட்டினிடத்தில் தழைத்துக் கோணிய கிளை

களையுடைய வெட்சியின் முறுக்கவிழ்ந்த பலபேரரும்புகள்

கமழும், மையைப்போன்ற கரிய கூந்தலையுடைய தலைவியின்

நட்பையே நினைத்திருந்தேம்.

பாலைபாடிய பெருங்கடுங்கோ.

**210**

[பிரிவுக்காலையில் "தலைவியை நல்ல ஆறுதல் கூறி வைத்திருந்தாய்" என்ற தலைவனுக்குத் தோழி சொல்லியது.]

வலிய தேரையுடைய நள்ளியின் காட்டிலுள்ள இடை யர்கட் குரிய பல பசுக்கள் தந்த நெய்யோடு, தொண்டி வயல்களில் முழுதும் விளைந்த

F

வெண்ணெல்லரிசியால்



சமைத்த சோற்றை ஏழுகலங்களிலேந்தியளிப்பினும்; என் தோழியாகிய தலைவியின் பெருந்தோளை நெகிழ்த்த துன்பத்தை நீக்குதலுக்கு விருந்தினர் வரும்படி, கரைதலைச் செய்த காக்கைக்கு அப்பலி சிறிதேயாகும்.

காக்கைபாடினியார் நச்செள்ளையார்.

**211**

["இடைவழியிலுள்ள பாலை நிலத்தில் பிரிவால் வருந்துவனவற்றைக்கண்டு, நம்மை ஆற்றுர் கொல் என நினைந்து தலைவர் மீளினும் மீள்வரோ" என்ற தலைவிக் குத் தோழி கூறியது.]

தோழி! குறைந்து கோடையால் வெதும்பிய மரா மரத்தினது ஓங்கிய வெள்ளிய கிளையின்கண், வேனிலில் மலர்ந்த ஓர் வெள்ளிய பூங்கொத்தைத் தேனோடு ஊதி, ஒன்றையும் பெருது திரும்புகின்ற தும்பியென்னும் வண்டு களையுடைய பாலைநிலத்தைக் கடந்தோர், அழகிய சிலவாய கூந்தலையுடைய உனது அழகிய வளைகள் நெகிழும்படி, நம்விருப்பத்திற் கிணங்கி நம்பால் அருள் செய்யாராய் நம்மைப்பிரிந்து சென்றுர். அவர் பொருட்டு அஞ்சுதலை நீங்கினேம்.

காவன்முல்லைப் பூதனர்.

## 212

[தலைவன் குறையை முடிப்பதாக ஒப்புக்கொண்ட தோழி தலைவிக்குக் கூறியது.]

தலைவனேறிச் செல்லும்
கொடுஞ்சியையுடைய நெடுந்

தேர், தெளிந்த நீரையுடைய கடலினது அடைந்த கரைக்கண், தெளிந்த சப்தத்துடன் ஒலிக்கும் மணி ஒலிக்க, நாம் காணும்படி வந்து பின்னர் நாம் நாணும்படி செல்லும். காமம் இரங்கத்தக்கது. ஏனெனின்; நிச்சயமாக விரைவில் அழிவதாகும். அதன் பொருட்டு நான் வருந்துகிறேன்.

நெய்தற்கார்க்கியன்



## 213

[நம்மிடத்துள்ள விருப்பத்தினால் தலைவர் வினையை
நிறைவேற்றாமல் வந்து விடுவாரோ'' எனக் கவன்ற தலை
விக்குத் தோழி சொல்லியது.]

எனது தோழி! தலைவர் நின்பால் அதிக ஆசையை
யுடையவர். நம்முடன் துயிலும் இனிய துயிலை

வெறுத்

துச் சென்றவர். அவர் சென்ற வழியில்
விரைவுடன் ;

கிளைத்த கொம்பையுடைய தலையுள்ள ஆண்மான்
காலா

லுதைத்துப், பசிப் பிணியைத் தீர்த்துக்
கொள்ளும்

பொருட்டு வளைத்த மிகப் பெரிய மரப்பட்டையைக் குட்டி
யுண்டெஞ்சினுல் அந்த மிகுதியைத் தானுண்டு, மாசற்ற

மனத்தோடு துள்ளி நடக்கு மியல்பையுடைய
தன்மறிக்கு

நிழலாகி நின்று வெயில் தீர்க்கு மென்று
கூறுவார்கள்.

கச்சிப்பேட்டுக் காஞ்சிக்கொற்றன். **214**

[தலைவியின் வேறுபாடு கண்டு அவளது தமர் வெறி
யாட் டெடுத்த காலை தோழியறத்தொடு நிற்பாளாய்க்
கூறியது.]

மரங்களை

அழித்த குறவன் புனத்தையுழுது விதைத்த
விளங்குகிற கதிரையுடைய தினையைக் காப்பவளும், புறத்தில் தாழுகின்ற அழகிய சிலவாகிய கூந்தலையுடையவளும், மெலிந்த இயல்பையுடையவளும் ஆகிய தலைவியினது திருத்தமான ஆபரணத்தை யணிந்த அல்குலுக்குப், பெருந்தழையுடையைக் கொடுத்து அசோகின் பெருத்த அடிமரம் ஒழிந்து நிற்ப, அதை விட்டு விட்டுப் பக்கத்திலே நின்ற அலரி மாலையை முருகனுக்குச் சூட்டி வெறியெடுத்து ஆரவாரத்தை யடைந்து இவ்வூர் மயக்கமுற்றது.

கூடலூர்க்கிழார்.



## 215

[பிரிவிடைத்தோழி வற்புறுத்தியது.]

தோழி! துன்பமும் மெதுவாக நீங்கும்.
ஒளிவிடு
தலைச் செய்கின்ற சூரியன் பெரிய மலையினிடத்து மறைகின்றது. நீரற்றவறிய குளத்தைக் கிண்டிய இலங்குகின்ற மருப்பினையுடைய ஆண்யானைகள், சிறிய குண்டுக் கற்களுக்குப் பக்கத்தில் தாம் விரும்பும் பிடிகளைத் தழுவி, வளைந்த வரிகளையுடைய பெரிய புலியினது தாக்குதலில் நின்று காக்கும், நீண்ட மலைகட்குப்
பக்கத்திலுள்ள பாலை
நிலத்தைக்கடந்து சென்ற தலைவர் இன்று வருவர்.

மதுரை அளக்கர் ஞாழார் மகனார்
மள்ளனார்.

**216**

[பருவ வரவின் கண் ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குத் தலைவி யுரைத்தது.]

தோழி! அத்தலைவர் கெடுதியில்லாத உயர்ந்த செல்வத்தைக் கொணரும் பொருட்டுப், பசிய இலைகளையுடைய வாடாத வள்ளிக் கொடி படர்ந்த காட்டைக் கடந்து சென்றார். நான் தொகுதியாகப் பொருந்திய விளக்கத்தையுடைய வளைகள் நெகிழும்படி யேங்குதலையடைந்து, பெருமை பொருந்திய படுக்கையின்கண் வீழ்ந்து துன்பமிகுந்தேன். கரிய மேகமானது அத்தகைய துன்பத்தையுடையாள் இரங்கத்தக்காள் என்னாது, மேலும்மழையைப் பெய்யும் பொருட்டு, முழக்கஞ் செய்து எனது, இன்

னுயிரைக்கொள்ளை கொள்ளுதலை
விரும்பி மின்னுகின்றது.

கச்சிப்பேட்டுக் காஞ்சிக் கொற்றன்.

**217**

[உடன் போக்கை விரும்பத், தோழி தலைவிக்குக் கூறியது.]

குறுந்தொகை வசனம் 85

தினைப்புனக்கிளி கடியத் தாயனுப்பின்
பகற்குறிக்குப்
பொருந்தும். அஃதின்மையின் நீ இரவு
வருதலின், வழி
யின்கண் நேரும் இடையூற்றுக்கஞ்சுவேன்.
எமது துன்
பத்தைத்தரும் நோய்க்கு என்ன செய்வேம்?
என்று யான்
அவ்வாறு கூறிய அதற்கு, ஓங்கிய மலை
நாட்டையுடைய
தலைவன்; வேறொன்றை யெண்ணிப் பெருமூச்சு
விட்டான்.

காமநோய் மிக அழகியது. அவனது குறிப்பறிந்த நான் நீ நினைத்தவாறு செய்தல் மிகுந்த அறிவுடைமையும் பழிக்குக்காரணமும் ஆகும் என்றேன்.

தங்கால் முடக்கொல்லனார். **218**

[பிரிவிடை ஆற்றுளெனக் கவன்ற தோழிக்குத் தலைவி உரைத்தது.]

தோழி! நம்முயிர்க் குயிரைப் போன்றவ ராதலின் தம்மையின்றி யிமைப் பொழுதேனும் பிரிந்திருத்தலைப் பொருந்தாத நம்மை மறந்து விட்டுச், சென்ற அவ்விடத்தே தங்குதலில் வல்லமையுடைய தலைவர் திறத்தில்; பிளப்பையுங் குகைகளையுமுடைய மலைப்பக்கத்திலுள்ள வெற்றி பொருந்திய துர்க்கைக்குப் பலிக்கடன்களையும் செய்யோம். கையிற் காப்பு நூலைக்கட்டோம் நிமித்தத்தையும் பாரோம். நற்சொற் கேட்டற்குஞ் சென்று நில்லோம். நினைத்தலையுஞ் செய்யோம்.

கொற்றன். **219**

[தலைவன் வரைவதற்குத்தக்க சமயம் இதுவேயென்று, தலைவி தோழிக்குக் கூறுவாளாய்த் தலைவன் சிறைப்புறத் திருப்பக் கூறியது.]

தோழி! பசப்பு என் சரீரத்திலுள்ளது. காதல் தலைவருடைய அன்பில்லாத செல்லுதற்கரிய இடமாகிய



நெஞ்சத்திலுள்ளது. எனது அடக்கமும் வெகு தூரத்தில் நீங்கியது. எனதறிவு தலைவருள்ள இடத்திற்கே செல்வேம் எழுவாயாக வென்று நம்மாலாகாதவற்றைக் கூறி இங்கே தங்கியிருக்கும். எத்தன்மையிலுள்ளீரோ வென்று அன்பு கூர்ந்து வினவிக்குறை தீர்ப்பராயின், பருத்த அடியைக் கொண்ட தாழையையுடைய கடற்கரைத் தலைவருக்கு (வரைதல் செய்ய) இது தக்க சமய மாகும்.

வெள்ளூர்க்கிழார்மகனார்வெண்பூதியார்.

## 220

[பருவ வரவின்கண் தலைவி தோழிக்குக்

கூறியது.]

தோழி! பொருள் தேடப்பிரிந்த தலைவர், பழமழை யினுற்றழைத்த புனத்திலுள்ள புதிய வரகின் ஆண்மான் மேய்ந்தமையால் குறைதலையுடைய நுனியைக் கொண்ட கதிர் அரிந்த தாள் சேர்ந்த பக்கத்தில், பூத்த முல்லையினது காட்டுப்பூனை சிரித்தாற் போன்ற காட்சியையுடைய செவ் விப்பூவின், மெல்லிய கட்டவிழ்ந்த சிறிய அரும்புகள் மலர்ந்த நல்ல மலர்களையுடைய முல்லை நிலத்தில்! வண்டு கள் சூழ்ந்து திரிகின்ற மாலைக்காலத்திலும் வாராராயி னர் இதனைப் பார்ப்பாயாக.

ஒக்கூர் மாசாத்தி. **221**

[பிரிவிடைப் பருவ வரவின்கண் ஆற்றுமாறு வற்புறுத் துந் தோழிக்குத் தலைவி கூறியது.]

முல்லைகளும் மலர்ந்தன. பறியோலை கொ ண்ட கையினையுடைய இடையர், குட்டிகள்

பொருந்திய ஆட்டின் திரளோடு சென்று தங்கப், பாலைக்கொண்டு வந்து கொடுத்துவிட்டு உணவைப் பெற்றுக்கொண்டு செல்லும் ஆடுகளையுடைய இடையன், தன் தலையிலணிந்து



கொண்ட எல்லாம் அம்முல்லையின் சிறிய பருவ அரும்பு
களே யாகும். தலைவர் இன்னும் வாராராயினர்.

உறையூர் முதுகொற்றன்.

## 222

[தலைவன், தலைவி தோழி இருவரது மனவொரு
மையையுங் கண்டு தனக்குத் தானே சொல்லியது.]

பாட்சிமைப்பட்ட மாரிக் காலத்தில் மலரும் பிச்சி
யினது, நீரொழுகும் கொழுவிய அரும்பினது சிவந்த
புறத்தை யொத்த கொழுவிய கடையையுங் ; குளிர்ச்சியை
யுடைய கண்களையும் ; மழைத்துளி தன்னிடத்தே

பெய்யப்
பெற்ற தளிரைப் போன்ற மென்மையையுமுடைய
தலைவி ;
தெப்பத்தின் தலைப்பைத் தோழி
கைக்கொண்டால்
தானும் அதனைக் கைக்கொள்வாள். அவள்
தெப்பத்தின்
கடைப் பக்கத்தைப் பிடித்துக்கொண்டால்
தலைவியும்
தெப்பத்தின் கடைப் பக்கத்தைப்
பிடித்துக்கொள்வாள். தெப்பத்தை நழுவ
விட்டுவிட்டுத் தோழி நீரோடு சென்
றால் தலைவியும் அப்படியே போவாள் போலும்.

சிறைக்குடியாந்தையார்.

## 223

[தலைவன் வரை பொருட்குப் பிரிந்த
காலத்தில் வற்
புறுத்திய தோழிக்குத் தலைவி யுரைத்தது.]

பெரிய ஊரினர் மேற்கொண்ட மிகுந்த
சப்தத்தை
யுடைய விழாவிற்குச்,

செல்வோம் செல்வோம் என்று கூறி
ஞாய்: அன்று இவ்விடத்திற் புறப்படுகையில் நல்ல
வாய்ச் சொற்களாகிய நிமித்தங்கள் பலவாக விருந்தன.
தழலையுந் தட்டையையும் தழையையும் எனக்குக்
கொடுத்து இவை நினக்கு ஒத்தன என்று கூறிப், பின்பு
பொய்யுரைகளைப் புகன்று; எனது தாய் பாதுகாத்த
அழகிய பெண்மை நலத்தை என் தலைவன் கொள்ளை



கொண்டான். இப்பொழுது நாம் பெண்மை நலமிழந்த
இத்தன்மையையுடையே மாயினேம்.

மதுரைக் கடையத்தார் மகன் வெண்ணாகன்.

## 224

[பிரிவிடைத் தலைவி இறந்துபடுமெனக் கவன்ற
தோழி கேட்பத் தலைவி யுரைத்தது.]

கிணற்றின் கண்ணே வீழ்ந்த கபிலைப் பசு படுந்
துன்பத்தை, இராக்காலத்திற் கண்ட ஊமன் போல, என்
பொருட்டுத் தோழி படும் வருத்தத்தினால் துயர் பொறுக்க
முடியாதவளானேன். அத் துயரம் கவர்த்த வழிகளில்
யாமரங்களையுடைய துன்பத்தைக் கொண்ட நீண்ட வழி
களில், எம்மைப் பிரிந்து சென்ற தலைவரது கொடுமையை
நினைத்துத் தூங்காதிருக்கும் துன்பத்தைக் காட்டிலும்
மிகுந்த துன்பத்தை யுண்டாக்குகின்றது.

கூவன் மைந்தர்.

## 225

[வரைவிடை வைத்துப் பிரியுந் தலைவனுக்குத் தோழி

சொல்லியது.]

கன்று தன்னுடைய பாலுள்ள முலையைக் குடித்து
நிற்ப, முற்றத்திலுள்ள தினைப்பயிரைப் பெண்யானை
யுண்ணுதற்கிடமாகிய பெரிய மலைகளையுடைய நாடனே!
தான் வருத்தப்பட்ட காலத்திற் பிறராற் பெற்று
மகிழ்ந்த உதவியை; அரசுக் கட்டிலாகிய சிறப்பைப் பெற்று
மறந்துவிட்ட மன்னனைப்போல; நாங்கள் செய்த
நன்றியை நீ மறந்து பொருந்தாயாகி, அதனை நினைந்து
வரைந்து கொள்வாயாயின், இத்தலைவியினுடைய மெல்
லிய சிறப்பையுடைய ஆரவாரிக்கும் மயிற் பீலி
போன்ற தழைத்த மெல்லிய கூந்தல் நினக்கே உரிய
வாம்.

கபிலர்.

## 226

[வரைவிடை யாற்ருளெனக் கவன்ற தோழிக்குத் தலைவி யுரைத்தது.]

தோழி! இரவு தோறும் விளங்கிய அலைகளால் மோதப்பட்ட தாழையினது வெள்ளியபூ, நாரையைப் போல மலர்தலைச் செய்வதற்கிடமாகிய பெரிய துறைகளை யுடைய விரிந்த நீர்ப் பரப்பைக்கொண்ட சேர்ப்பனேடு நகைத்து மகிழ்வதற்குமுன்பு, தாமரைப்பூவை யொத்த கண்களும், மூங்கிலைப்போல வெற்றியையுடைய அழகைப் பெற்ற தோள்களும், பிறை யென்று சொல்லும்படி புத்தியை மயங்கச் செய்யும் நெற்றியும், மிகவும் நல்லன வாக இருந்தன.

இப்பொழுது அவை போய்விட்டன.

மதுரை எழுத்தாளன் சேந்தம் பூதன்

## 227

[அல்ல குறிப்பட்ட தலைவன் சிறைப்புறமாகத், தோழி தலைவிக்குக் கூறியது.]

தேரினையுடைய தலைவன் மீண்டு போய்விட்ட
கடற்
கரைச்சோலையாகிய ஈங்குப், பூணைவனைந்தாற்
போன்ற பொன்னுலாகிய விளிம்பையுடைய
சக்கரத்தின் வாளைப்
போன்ற வாய் துணித்தலினால் வளவிய இதழ்கள் ஒடிபட்ட குறையாகிய நெய்தற் பூக்களுமிருக்கின்றன.

ஓதஞானி.

## 228

[வரைவுக்கு முன் நன்கு ஆற்றியிருந்தாய் என்ற தோழியை நோக்கித் தலைவி கூறியது.]

நம்மைத் துறந்து சென்று மிகத்
தூரத்திலுள்ள
நாட்டிலிருப்பவராயினும், நெஞ்சிற்கு மிகச்
சமீபத்தி

லுள்ளாரது குளிர்ந்த கடலையுடைய நாட்டினிடத்து
விழுது தாழ்ந்த தாழையினது முதிர்ந்த கொழுவிய



அரும்பு, நாரைகள் சிறையைக் கோதுகின்ற இடத்தில் விரிந்து மடல்கள் மலருகின்ற கடற்கரைச் சோலையிற் பொருந்திய சிற்றூரின் முற்றத்தில் அலைகள் வந்து மீண்டு செல்லும். (அலைகளின் தொடர்பால் ஆற்றியிருந்தேன்.)

செய்திவள்ளுவன் பெருஞ்சாத்தான்.

## 229

[உடன் போக்குக் காலத்தில் இடைச் சுரத்திற் கண்டார் தம்முள்ளே இயம்பியது.]

இவன் இவளது கூந்தலைப் பிடித்திழுக்கவும், இவள் இவனது தலைமயிரைப் பிடித்திழுப்பாளாய் ஓடவும்,

காதலேயுடைய செவிலித்தாயர் இடைமறித்துத் தடுக்கவும்

நீங்காமல், பகைமையையுடைய சண்டையை முன்பு

பொருந்துவார்கள். இப்பொழுது மலரைப் பிணைத்த

இரட்டை மாலையைப் போன்ற இவர்கள் ; மணம் புரிந்து

மகிழும் இயல்பையுண்டாக்கிஞயாதலின் ஊழ்வினேயே

நீ நிச்சயமாக நன்மையை யுடையாய்.

மோதாசனுர்.

## 230

[வலிதாகக் கூறிக் குறைநயப் பித்தது].

தோழி ! ஒன்று கூறுவேன் கேட்பாயாக.

தலேவன்,

வலியையுடைய சுருவானது வழங்குகின்ற நீரையுடைய

வழியில் சில நாட்களாக வந்துகொண்டிருந்தவன் இப்

பொழுது அத்தகைய வருதலே யறியாஞயிஞன். அங்ஙனம்

வாராதிருத்தலைத் தாளுகவே துணியமாட்டான். நான்
என் அறிவின்மையால் பெரிய உரிமையைப் பொருந்தி,
அவன் நொந்துவரா திருக்கும்படியாகச் செய்த செய
லொன்றை யுடையேனே ?

அறிவுடைநம்பி



## 231

[வாயிலாகப்புக்க தோழிக்குத் தலைமகள் சொல்லி யது.]

தலைவர் நம்மோடு ஒரூரிலே வாழ்ந்தாலும் நாம் வசிக் குந் தெருவில் வரார். வந்தாராயினும் பொருந்தும்படி தழுவிக் கொள்ளமாட்டார். நாணத்தை யழித்து நல் லறிவை இழக்கச் செய்யுங் காமமானது தூரத்திற் போய்க் கெடும்படி, அயலாருடைய சுடு காட்டைப்போல நம்மைக் கண்டு வேறொன்றும் செய்யாமற் செல்லுவார்.

பாலைபாடிய பெருங்கடுங்கோ.

232

["தலைவர் நம்மை நினைக்கவில்லைபோலும்" என்று வருந்திய தலைவியை நோக்கித் தோழி கூறியது.]

தோழி! மரலாகிய உணவைத்தின்ற பெரிய பிடரியை யுடைய ஆண்மான், உரலைப்போன்ற காலையுடைய யானை ஒடித்துண்டு குறையச் செய்த, யாமரத்தின் புள்ளிகளை
யுடைய நிழலில் தூங்குகின்ற மிகப்பெரிய சோலைகளை
யுடைய மலைகளைக்கடந்து நம்மைப்பிரிந்து சென்ற தலைவர், நம்மை நினைக்கமாட்டாரோ? நினைத்தும் வினைமுற்றி மீள்வதற்கு முடியாமையின் வாராராயினரோ?

ஊண்பித்தை.

233

[தலைவியை மணம் புரியாமல் வினைமேற் பிரிந்து சென்ற தலைவன் மீண்டு வருகையில், தேர்ப்பாகனுக்குத்
தலைவியின் ஊரைக் காட்டியது.]

பெரியோர்களுக்கு நீரோடு தானம் பண்ணி எஞ்சிய பொருளையும், யாருக்குந் தடை செய்தலை யறியாத சொன் றியையுமுடைய, வரிசைப்பட்ட திரட்சியான குறிய வளை
களை யணிந்த தலைவியினுடைய தந்தைக்குரிய ஊரானது.



கவலைக் கிழங்கைத் தோண்டியதனால் உண்டான அகன்ற வாயையுடைய சிறிய குழி, கொன்றையினது ஒளி பொருந் திய மலரால் பரவப் பெற்றுச், செல்வருக்குரிய பொன்னை யிட்டு வைக்கும் பேழையினது மூடியைத்திறந்து வைத்தாற் போன்ற காட்சியையுடைய காரெதிர் கொண்ட முல்லை நிலத்தின் கண்ணுள்ளது.

பேயன்.

## 234

[பருவ வரவின்கண் தோழிக்குத் தலைவி பகர்ந்தது.]

அறிவு திரிந்தோர்; சூரியன் மறைந்துசென்ற வானம் சிவப்பு நிறத்தையடைய அதனால் துன்பம் மிகுந்து ஒளி மழுங்கிய பொழுதில் முல்லைப்பூ மலருகின்ற மாலைக்காலம் என்று கூறுவர். துணைவரைப் பிரிந்தவர்கட்கு, நெடு நகரில் உச்சிக்கொண்டையையுடைய கோழி கூவுகின்ற பெரிய இராப்பொழுது விடிகின்ற விடியற் காலமும் மாலைக்காலமாகும். பகற்காலமும் மாலைக்காலமாகும்.

மிளைப்பெருங் கந்தன்.

## 235

[வரையாது பிரிந்து வருவான் வாடைக்குரைப்பானாய்ப் பாகற் குரைத்தது.]

வாடைக்காற்றே! நெல்லிக்காயை மரையின் கூட்டம் உண்ணுகின்ற முற்றத்தையுடையதும், புல்லால் வேயப் பட்ட குடிசைகளையுடையதும் ஆகிய நல்ல தலைவியினது

ஊர், பாம்பின் தூங்குகின்ற உரியை ஒக்கும் தூய

வெள்ளிய அருவியையுடைய மலையின் உச்சியிலே பொருந்

தியது. அங்குள்ள தலைவியை நீ பாதுகாப்பாயாக.

மாயெண்டன்.

## 236

[வரைவிடை வைத்துப் பிரியுந் தலைவன், இவள் வருந் தாது பாதுகாப்பாயாக என்று தோழிக்குக் கூறத் தோழி நகையாடி யுரைத்தது.]



குன்றத்தை யொத்துக் குவிதலையுடைய மணலமைந்த கரையினிடத்து வளர்ந்து நின்ற புன்னை மரத்தினது, நிலத் தைத் தோய்ந்த தாழ்ந்த கிளையில் புதிய நாரை தங்கியிருக் குங் குளிர்ந்த கடற்கரையையுடைய தலைவ! இவளை நீ கை விட்டாயென விடுக்குங் காலம் வருவதாக! அதற்கு நீ உடம்படுவாயாயின், நீ உண்ட எனது பெண்மை நலத் தைத் தந்து செல்வாயாக.

நரிவெரூஉத்தலைவர்.

## 237

[பொருள்முற்றி மீளுந் தலைவன் தேர்ப்பாகனுக்கு உரைத்தது.]

பயப்படுவதை யறியாமல் நாம் விரும்புந் தலைவியைச் சேரும்பொருட்டு எனது மனம் நம்மைப் பிரிந்து சென்றது. ஆயினுங் குறைபாடாகவுள்ள கையாற்றழுவுதல் நெகிழுமாயின், நெஞ்சு தழுவியதனாற் பயன் யாது? எங்களிருவருக்கும் இடையிலுள்ள இடங்கள் மிகுந்த தூரத்தை யுடையன. தழுவுதலுக் கிடையேயுள்ள தடையாகிய கொலைத் தொழில் செய்யும் புலியானது, பெரிய கடலின் அலையைப்போல ஆரவாரஞ் செய்து வலமாக வெழுந் துலாவுகின்ற சோலைகள் எத்தனை யென்று யெண்ணுவேன்?

அள்ளூர் நன்முல்லை. **238**

[பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனுக்குத் தோழி பகர்ந்தது.]

தலைவ! பசிய அவலை இடித்த கரிய வயிரம் பொருந்திய உலக்கையை, அழகிய கதிர் தங்கிய நெற்பயிரையுடைய கழனியினது வரப்பாகிய அணையிலே படுக்க வைத்து, ஒள்ளிய வளைகளை யணிந்த பெண்கள் வண்டலைச் செய்யுந் தொண்டியைப் போன்ற எனது பெண்மை



நலத்தைத் தந்துவிட்டு உனது சபதத்தைப் பெற்றுக்

கொண்டு செல்வாயாக.

குன்றியன்.

## 239

[தலைவன் சிறைப்புறமாக வந்திருக்குங் காலையில் தலைவி, தோழிக்குக் கூறுவாளாய் வரைவு கடாயது.]

தோழி! வெடிப்பையுங் குகைகளையுமுடைய பக்க மலை முழுதும் மணம் வீசும், அசைகின்ற கொத்துக்களி லுள்ள காந்தட் பூவின் நல்ல தாதை ஊதுகிற தும்பி யென்னும் வண்டு, பாம்பு உமிழுகிற மணியைப்போலக் காணப்படுகிற இடத்தையுடையதும், மூங்கில் வேலியாக வுடையதுமாகிய மலைகளையுடைய தலைவன் பொருட்டு, என் தொடிகள் நெகிழ்ந்தன. தோள்கள் மெலிந்தன. இனி விடுவதற்கு வெட்கமுள்ளதோ? அது முன்னரே தொலைந்தது.

ஆசிரியன் பெருங்கண்ணன்.

## 240

[வரைவிடை யாற்றுளெனக் கவன்ற தோழிக்குத்

தலைவி கூறியது.]

தோழி! குளிர்ச்சியையுடைய புதலின்கண் படர்ந்த பசிய கொடியையுடைய அவரையினது, கிளி மூக்கை யொப்பாகவுடைய வொளியை வெளிப்படுத்தும் பல மலர் கள், காட்டுப் பூனையின் பல்லைப் போன்ற உருவத்தை யுடைய முல்லை மலர்களோடு நெருங்கும்படி, வாடை வீசுங் காலம் வந்ததற்குப் பிறகும் நோய் என்னை வருத்தும் படி, தலைவரது மணிகளுண்டாகும் உயர்ந்த குன்றம் கடலில் மூழ்குகின்ற கப்பலைப் போலக் காணப்பட்டு மாலைக் காலத்தில் மறையும். இதனை நீ காண்பாயாக.

கொல்லன் அழிசி.

241

[பிரிவிடை யாற்ருளெனக்
கவன்ற தோழிக்குத்
தலைவி யுரைத்தது.]

தோழி! நாம் காமநோயைப் பொறுத்து ஆற்றியிருப்
பவும்; கன்றுகளை வழியிற் செலுத்திய புல்லிய தலையை
யுடைய சிறுவர்கள், பொது இடத்திலுள்ள வேங்கைமரம்
மலரும் பருவத்தைப் பார்த்து அம்மரத்தின்மேல் ஏருமலே
செய்த இன்பத்தைத் தரும் ஆரவாரம், ஆகாயத்தை யளா
விய மலைக் குகையின் கண்ணே எதிரொலி யுண்டாக்கும்
மலைகளையுடைய நாட்டுக்குத் தலைவனைக் கண்ட

எமது
கண்களானவை, தமக்கு என்பாலுள்ள
அன்புடைமையின்
தலைவர் பிரிந்தமையைக் கருதி அழுதன.

கபிலர்.

**242**

[கற்புக் காலத்தில் கடிநகருக்குச் சென்ற செவிலித் தாய் மீண்டு வந்து நற்றாய்க்குச் சொல்லியது.]

தலைவி, காட்டுக் கோழியினது கவர்த்த
குரலையுடைய
சேவலினது ஒளி தங்கிய புள்ளிகளமைந்த
கழுத்தில்
குளிர்ந்த நீர்த்துளி துளிக்கும்படி புதலின் கண்
நீரொழு
கும், பூ மணம் வீசுகின்ற முல்லை நிலத்தின்
கண்ணமைந்த
ஊரிலுள்ளாள். தலைவனது
தேர் வேந்தனாலேவப்பெற்ற
தொழிலை மேற்கொண்டு வேறு ஊருக்குச்
சென்றாலும்
தங்கிப் பின் வருதலையறியாது. (இருவரும்
பிரியாமல்
வாழுகிறார்கள்.)

குழற்றத்தன், **243**

[தலைவன் பிரிந்த காலத்தில் தலைவி வருந்தியது கண்டு "நீ ஆற்றியிருத்தல் வேண்டும்" என்று வற்புறுத்திய தோழியை நோக்கித் தலைவி கூறியது.]

தோழி! மானின் குளம்பைப் போன்ற பிளவமைந்த இலைகளையுடைய அடும்பினது, குதிரைக் கழுத்திலிடும்



மாலையிலுள்ள மணியைப்போன்ற ஒள்ளிய பூவை யலர்த்தி, ஒள்ளிய வளைகளை யணிந்த பெண்கள் வண்டலாட்டைச் செய்தறகிடமாகிய பறவைகளொலிக்கும் பெரிய கடற்கரைத் தலைவனை இனி நினையேன். ஆகையால் எனது கண்கள் தூங்குக.

**244**

[தலைவன் இரவுக்குறி வந்தொழுகுகின்ற காலத்தில்
காவல் மிகுதியால் தலைவியைக் காணப்பெறாமையின்,
அதன் காரணத்தைத் தோழி கூறி வரைவு கடாயது].

தலைவ! ஊரிலுள்ள பலருந் துயிலுகின்ற நள்ளிர
வின்கண் வலிமையையுடைய யானையைப் போல வந்து,
இராக்காலத்திலே கதவைத் திறக்க முயன்றதனால் உண்
டான ஓசையை யாம் கேளேம் அல்லேம் கேட்டேம்.
உச்சிக் கொண்டை சிதையத் தோகை மெலிய நல்ல மயில்
வலைக் கண்ணே அகப்பட்டாற் போல, நாங்கள் வருந்துந்
தோறும் மறம் மிக்க தாய் எம்மைத் தழுவிக் கொள்வாள்.

(அதனுல் யாங்கள் உன்னிடத்திற்கு வரமுடியவில்லே.)

கண்ணன்.

## 245

[வரைவிடை யாற்ருளெனக் கவன்ற தோழிக்குத் தலேவி கூறியது.]

வாளினது வாயைப்போல விளிம்பையுடைய கொழு
விய மடல்மைந்த தாழை, வரிசையாகவுள்ள வேல்களே
நாட்டிய வேலிபோற் காணப்படும் மெல்லிய கடற்கரையை
யுடைய தலேவன் கொடுமையானது; பலருமறியும்படி
பரந்து வெளிப்பட்டால்; வெளிப்படுதல் அழகிய கடற்
கரைச் சோலேயிலே விளேயாடும் மகளிர் கூட்டத்தினர்
ஆய்ந்து புகழ்ந்த எனது பெண்மை நலத்தை, நான் இழந்
ததைக் காட்டிலும் மிகத் துன்பத்தைத் தருவதாகும்.

மாலேமாறன்.

## 246

[இரவுக் குறிவந்த தலைவன் சிறைப்புறத்திலிருப்பத் தலைவி தோழியை நோக்கிக் கூறுவாளாய்ச் சொல்லியது.]

பெரிய கடற்கரையின் கண் உள்ளதாகிய சிறு வெண்மையையுடைய காக்கை, யானையினது காதைப்போன்ற பசிய இலையைக் கசக்கிக் குளிர்ந்த கழியினது நீரைத்துழாவுகின்ற நள்ளிரவில், தனியாக ஓர் தேர் வந்து போயதென்று பக்கத்தார் பகர்வர். அதுமுதல் தாய் என்னைத் துன்புறுத்துகின்றாள். பின்னல் தொங்கவிடப்பட்ட கூந்தலையுடைய மின்னுகின்ற ஆபரணத்தைத் தரித்த மகளிருள், இளமையுடையோரும் அறியாமையுடையோரும் இருக்கின்றனர். அவர் வருத்துதலில்லாத தாய்மாரோடு நல்வினையையுடையவர்.

கபிலர்.

## 247

[தலைவன் விரைவில் வரைந்து

கொள்வானென்று

தலைவியிடம் தோழி கூறியது.]

தோழி ! வேங்கை மரத்தினது கெடாத மெல்லிய கிளைகளிலிருந்து மலர்களுதிர, அவ்விடத்தில் யானையானது பொருந்திய துயிலைச் செய்வதனால் மூச்சுக் காற்றின் ஒலியுண்டாகும் நாட்டையுடைய தலைவனது, மார்பையுரிமையாகப் பெற்ற குற்றமற்ற நேயமானது மிக அழகுடையது. ஈங்கு அணிமைக்காலத்தே உண்டாகும் திறமையுடையோர் செய்யுங் காரியம் ; அறத்தொடு கூடியதாகும். உறவினரையுடைய மக்களுக்கு இவை பற்றுக்கோடுமாகுமென்று அவ்விதமறிந்தேன்.

சேந்தம்பூதன்.

**248**

[வரைவு நீட்டித்தவழி ஆற்றாளாகிய தலைவியைத் தோழி ஆற்றுவித்தது.]

G



தோழி ! கடற்கரைச் சோலையினிடத்துள்ள ஆடுகின்ற அடியிடம் புதையும்படி மேல் காற்றுக் கொண்டு வந்து போட்ட அடும்பங்கொடி படர்ந்த மணற் குவியல் பரவ, நெடிய பனைமரங்கள் குறியனவாகுங்

கடற்கரையை

யுடைய தலைவனை, வெறியெடுத்து நந்தாய் தெரிந்து கொண்டாள். ஆதலின் வரைவுக்குரிய நாள் விரைவில் வருவதாகும். அவன் மார்பைச் சேர்கவென்று வரை யறுத்த நாள் சமீபமாக வந்தும் ஆற்ருமை யுண்டாகின்றது என்ன காரணம்? உலோச்சன்.

249

[வரைவிடை

வைத்துப் பிரியின் ஆற்றுவாயோ என்ற

தோழிக்குத் தலைவி கூறியது.]

தோழி! கூட்டமாகவுள்ள மயில்கள் ஆரவாரித் தலைச் செய்கின்ற மரங்கள் பொருந்திய காட்டினிடத்தில், வெண்முகத்தையுடைய கருங்குரங்கு

குட்டிகளோடு குளி

ரால் நடுங்கும்படி, பொருந்திய மழை

பொழிந்த மலைச்

சாரலையுடைய தலைவரது நாட்டிலுள்ள

குன்றத்தைப்

பார்த்தேன். அதனுல் எனது நெற்றி பழைய தன்மையை யுடையதாயிற்று. பார்ப்பாயாக.

கபிலர்,

250

[தலைமகன் பாகனுக் குரைத்தது.]

தேர்ப்பாகனே! பருக்கைக்கல் பொருந்திய பள்ளத்திலே தங்கிய நீரை யுண்டு, நல்ல ஆண்மான் பெண்மானோடு வழியினிடத்திலே துள்ளி விளையாடுகின்ற மாலை நேரம் வருவதற்கு முன்னே; ஆழ்ந்த நீரிற் போர் செய்கின்ற இரண்டு மீன்களை யொத்த மையுண்ட கண்களையும், ஆராய்ந்த இனிய சொல்லையுமுடைய தலைவி துன்பத்தால் வருந்துதலினின்றும் நீங்கக், காற்றைப்போல் விரைந்து செல்லும் இயல்பையுடைய குதிரையைச் செலுத்துவாயாக.

நாமலார்மகன் இளங்கண்ணன்





## 251

[தலைவன் வருவதாகக் கூறிச் சென்ற
கார்காலம் வந்த பொழுது தலைவி
வருந்தத், தோழி "இது கார்கால மன்று"
என்று கூறி ஆற்றுவித்தது.]

தோழி! சென்ற மாரிக்காலத்திற் பெய்யாது எஞ்சியிருந்த பழைய நீரைப், புதுநீர் கொள்ளும் பொருட்டுச் சொரிகின்ற விருப்பு வெறுப்பற்ற தன்மையையுடைய

மேகத்தினது ஒலிக்கின்ற ஓசையைக்கேட்டு, மயில்களின் பெரிய கூட்டங்கள் பருவமழை பெய்த தென்று தப்பாக நினைத்து, அம்மழைக்கு எதிரே ஆடுதலையும் செய்தன.

பிடவும் பூத்தன. இவைகள் அறியாமையையுடையன, இது கார்கால மன்று. நீ நின் துன்பத்தை நீக்குவாயாக.

## 252

இடைக்காடன்.

[பரத்தையிற் பிரிந்துவந்த தலைவனை ஏற்றுக்கொண்ட தலைவியை நோக்கித் தோழி "நீ சிறிதும் பேதமில்லாமல் தலைவனை ஏற்றுக்கொண்டதூ என்னை ?" என்று கேட்க அதற்குத் தலைவி கூறியது.]

தோழி! நெடிய திரண்ட தோள்வளையை நெகிழச் செய்த கொடியவனுகிய மலைபொருந்திய நாட்டையுடைய தலைவன், பரத்தையர் வீட்டில் நின்றும் வரும்பொழுது இனிய முகம் மாறுபடாமல் கடவுள் தன்மை பொருந்திய கற்பினல் அவனை எதிர்கொண் டுபசரித்து, நீ நிச்சய மாக அறிவில்லாதவளாயினய்" என வினவி வருத்தத்தை அடையாதே, அறிவுடையோர் தம்மைப் புகழ்வதற்கு முன் னரும் நாணுவர். அத்தகையோரைக் காணுமிடத்தில் பழிச்சொல்லைக் கூறின் எங்ஙனம் பொறுப்பர்?

கிடங்கிற் குலபதி நக்கண்ணன்.

[பிரிவிடை வருந்திய தலைவியைத் தோழி ஆற்றுவித்தது.]

100 குறுந்தொகை வசனம்

தோழி! ஒலிக்கின்ற மூங்கில்கள் உயர்ந்து வளர்ந்த
ஓங்கிய மலைப் பக்கத்தில் புலி தன் உணவைப் புகுத்தி
வைத்திருந்த புலால் நாற்றம் வீசும் கற்குகையினிடத்து,
வழிச்செல்லும் மனிதர்கள் தங்கி இருக்குஞ் சிகரங்க
ளோங்கிய விளக்கத்தை உடைய மலைகளைத் தாண்டிச் சென்ற தலைவர், நின் துன்பத்தை அறியாதவராவர். அறி யின் சிறப்பமைந்த பொருள் நீங்குவதாயினும் நெகிழ்ந்த நூலாற் கட்டப்பட்ட மாலைகள் பொருந்திய படுக்கையி னிடத்தே தங்கி, வருந்திப் பேரழகு நீங்கிய நினது இன் னுட்டுயர் கெடும்படி பிறகும் தாமதியாமல் வருவார்.

. . ....

பூங்கணுத்திரையார். 

## 254

[பருவங் கண்டு வற்புறுத்துந் தோழிக்குத் தலைவி சொல்லியது.]

தோழி! இலையில்லாத அழகிய கிளையினிடத்துக் கூட்டமாகிய வண்டுகள் ஆரவாரிக்கும்படி, முலையைப் போன்ற அழகிய அரும்புகள் மலர்ந்த கோங்கின் முதற் பூக்கும் மலர்கள் தோன்றின. முயற்சியால் தேடுகின்ற பொருளை நாடிச் சென்ற தலைவர் வந்தாரென அறிவித் தற்கு வருந் தூதுகள் வாராவாயின. பிரிந்து சென்ற தலைவர் தூங்குதற்கினிய இராக்காலத்தில் கூடத் தூங்குதலை மறந்தனர். தாம் பழகுகின்ற நல்ல எனது கூந்தலாகிய படுக்கையையும் நினைத்தலைச் செய்யமாட்டார்.

பாரகாபரன்.

## 255

[வினை முற்று இடை நின்று மீள்வரெனக் கவன்ற தலைவியைத் தோழி அங்ஙனம் மீளாரெனக் கூறி யாற்று வித்தது.]

தோழி! தம்முடைய கடமையை யிறுத்தற்பொருட்டு;
இடந்தோறும் விருப்பத்தையுடைய பொருட் பிணிப்பினாற்



சென்றவரும், நாம்
விரும்புதலையுடையவருமாய தலைவர் ;
நம்மை நீங்கிப் போன வழியில் குற்றமற்ற வயிரத்தை
யுடையனவாகிய அரிய வழியில் நின்ற யாமரங்களின்
பொரிந்துள்ள திரண்ட அடியை உருவும்படி குத்தி ;
வலிமை பொருந்திய பெரிய கையினால் எடுத்து வருந்திய
நடையையும்
வரிசையின்,
சிறிய கண்களையுமுடைய பெரிய யானை
பொருந்திய பசியைத் தீர்க்கும் பெரிய
கொம்பையுடைய ஆண் யானையைக் கண்டார்.

கடுகுபெருந் தேவன். 256

[பொருளின் பொருட்டுப் பிரிய வெண்ணிய தலைவன், அதனைத் தலைவிக்குணர்த்த அவள் அழுதாள். அதனைக் கண்ட தலைவன் செலவு தவிர்ந்து கூறியது.]

அழகிய குண்டலத்தைத் தரித்தோய்! நீலமணி யொழுகினாற்போன்ற கரிய கொடியாகிய அறுகினது பிணி யவிழ்ந்த மெல்லிய தண்டைப், பெண்மானோடும் வயிறு நிரம்பத் தின்றமானேறுனது துள்ளுகின்ற காடானது பின்னாகும்படி சென்று, வினை நலம் பெற்று வருகின்றேம்; அது வரையும் நின்னால் தாங்குதல் கூடுமோ? என்று நான் சொல்வதற்கு முன்னரே, தலைவியின் கண்கள் தன் இயல்பில் நில்லாமற் கலங்கி, நீரால் நிறையப் பெற்று அழுதலை யுடைமை நீங்காதனவாகி எமது தேரின் செலவைத் தடை செய்தன.

257

[வரை வுணர்த்திய தோழிக்குத் தலைவி கூறியது.]

தோழி! நமது காமப்பகை, வேரும் அடியுங் கிளையும் ஒரு வரிசையாகத் தொடுத்து வைத்தனபோலத் தொங்கித்

தொடர்ந்து, கீழே தாழ்ந்தாற் போன்ற தணிந்த குலைக ளமைந்த பலாமரத்தினையுடைய ஆரவாரம் பொருந்திய



மலைக்குத் தலைவன், இங்கே வருந்தோறும்
அதுவும் வரும்.
அவன் அகன்றாலும் தான் போகாததாகி
நம்மோடு மாறு
படும்.

உறையூர்ச் சிறுகந்தன்.

## 258

[தோழி தலைவனுக்கு வாயில் மறுத்தது.]

தலைவ! பலர் நீராடுகின்ற காவிரியின் பெரிய துறையினிடத்து வளர்ந்த, மருத மரத்தோடு கட்டிய ஏந்துகின்ற கொம்பமைந்த யானைகளையுடைய சேந்த னுடைய தந்தையும், கள்ளாகிய உணவையும்,
அழகிய
விலங்குக் கூட்டத்தை வேட்டையாடுந்
தொழிலையும்.

பகைவருக்கு நரகத்துன்பத்தைப் போன்ற துன்பத்தைத்

தரும் ஒள்ளிய வாளையுமுடைய, இளைய வீரர்களது தலைவ

னாகிய அழிசியினது, ஆர்க்காடென்னும் நகரத்தைப் போன்ற இவளது குற்றமற்ற நல்ல அழகு தொலைதலைக் கண்டபின், எமது சேரிக்கண் வருதலை விடுவாயாக. நினது மாலையைத் தருதலையு மொழிவாயாக. இவைகளாற் பழி மொழி யுண்டாகின்றது.

பரணர்.

## 259

[காப்பு மிகுதிக்கண் ஆற்றுளாகிய தோழி, அறத்தொடு நின்று அவனே பரிகரிப்பனென்று நினைத்ததனைத் தலைமகளும் விரும்பக் கூறியது.]

மேகங்கள் சேர்ந்து எழுந்த மழையையுடைய மலையினிடத்துள்ள அருவிக்குச் சமீபத்திற் பொருந்திய குளிர்ந்த நல்ல காந்தளினரும்புகள் மலர்ந்து, அதிகமாக மணம் வீசுதலையொத்த நறிய நெற்றியையும், பல இதழ்களையுடைய தாமரைப்பூப் போன்ற குளிர்ச்சி வாய்ந்த கண்ணையும் பெற்ற மாமை நிறம் பொருந்தியோய்! நீ என் பிழையைப் பொறுப்பையாயினும், பொறுமற் கொல்வையாயினும்

நின் பெருமையை நீயே அளந்து அறிவாய். மெய்
வார்த்தை
களைப் போலப் பொய் வார்த்தைகளைக் கூறல்
என்ன
நன்மையைத் தரும்? நின் திறத்தில் தலைவன்
மனம் மிக
நன்மையையுடையது.

பரணா.

## 260

[ஆற்றுளாக விருந்த தலைவிக்குத்;
தலைவன் வரவிற்கு
நிமித்தமாயின கண்டு தோழி சொல்லியது.]

தோழி! நாரைகளும் கரியவானத்தின்கண்
உயரப்
பறக்கும். புதவிலுள்ள போதுகளும் வரிகளையுடைய
வண்டுகள் ஊதுவதனால் வாய் நெகிழ்ந்தன. அழித்த சங்
காற் செய்த வளையால் பொலிவு பெற்ற தோள்களும்
தளர்ச்சி நீங்கி வளையோடு பொருந்தும்.

பகைவரது பூமி

யைக் கொண்டு நுகருந் தலைமை பொருந்திய யானையையும், வளப்பம் பொருந்திய தேரையுமுடைய தொண்டைமான் கட்குரிய சுரபுன்னைகள் நெருங்கிய மலைப்பக்கத்தில், கன்றில்லாத ஒற்றைப் பசுவைத் தடுத்த புல்லிய அடியையுடைய ஓமை மரங்கள் பொருந்திய பாலை நிலங்களைக் கடந்து சென்ற தலைவர் வருவர்.

கல்லாடனார்.

## 261

[இரவுக்குறிக்கண் தலைவன் சிறைப்புறமாகத், தோழிக்குச் சொல்லுவாளாய்த் தலைவி சொல்லியது.]

தோழி! நாழிகைக் கணக்குப் பார்ப்பவர், இரவில் நாழிகைக் கணக்கை ஆராய்கின்ற வகையைப்போல ஆராய்ந்து, நெஞ்சு புண்ணடைந்த காரணத்தால்; பழைய மழை பொழிந்ததாகப்பதனழிந்து உதிர்ந்த உள்ளீடில்லாத ஊமைக்காய் பொருந்திய எட்பயிரையுடைய சிறிய மழை பெய்யுங் கார்ப் பருவத்தின் கடைநாளில்; சேற்றின்கண் நிற்றலை வெறுத்த சிவந்த கண்ணையுடைய எருமை, நள்ளிர

வில் ஐயென்றொலிக்கும் அச்சம் பொருந்திய சமயத்திலும் என்னுடைய கண்கள் தூங்காவாயின.

கழார்க்கீரன்எயிற்றி.

## 262

[தலைவி தலைவனுடன் போவதற்குச் சம்மதித்த தோழி, அதனைத் தலைவிக் குணர்த்தியது.]

ஊரிலே அலரெழத், தெருவிலுள்ளார் ஒலியுண்டாகும்படி ஆரவாரிக்க, அடங்காமல் நம்மை வருத்துகின்ற அறிவினைப்பில்லாத தாய் தன் வீட்டில் தானொருத்தியே இருப்பாளாக. நான் தூரத்திலுள்ள நாட்டின்கண் விண்ணைத் தொடும்படியுயர்ந்த குறுக்கிட்ட மலையின் அடிவாரத்திலுள்ள கரும்பு நடுகின்ற பாத்தியைப்போன்ற, பெரிய ஆண் யானையினது அடிச்சுவட்டின்கண் தங்கிய நீரை, அத்தலைவனோடு, நெல்லிக்காயைத்தின்ற முள்ளைப் போலக் கூரிய பற்கள் விளங்கும்படி நீ யுண்ணுதலை நினைந்தேன்.

பாலைபாடிய பெருங்கடுங்கோ.

## 263

[தாய் வெறியாட்டெடுக்க நினைத்திருப்பதைத் தோழி தலைவிக்குக் கூறுவாளாய்ச், சிறைப்புறத்தானாகிய தலைவனுக் குணர்த்தியது.]

தோழி! பெரிய மலையினிடத்து மேகம் விளையாடும் நாட்டையுடைய தலைவனிடத்துத் தவறில்லாதவர்களாகிய நாம் இக்களவொழுக்கத்திற் பொருந்த; ஆட்டின் கழுத்தை யறுத்துத் தினைகலக்கப்பட்ட பிரப்பை வைத்துச், செல்லு கின்ற ஆற்றுத் துருத்தியிலே: பலவகையான வாத்தியக் கருவிகள் ஒலிப்பத் தாம் வெளிப்படுவதை யன்றி நம் முடைய காமநோய்க்கு மருந்தாக மாட்டா. வேறாகிய தெய்வங்கள் பலவற்றை யொன்றாக வாழ்த்தி, இவள்



பேயாற் கொள்ளப்பட்டாள் என்று
சொல்லப்படுவது
நோதலுக்குரியதாகும்.

பெருஞ் சாத்தன்.

## 261

ஆற்றாளெனக் கவன்ற தோழிக்கு, ஆற்றுவலென்பது படத்தலைமகள் சாற்றியது.

சப்தத்தையுடைய மழை பொருந்திய

காட்டாற்றின்

தாழ்ந்த கரையினிடத்திலே, தழைத்த

நெடிய தோகை

யசைய நடந்து ஆடுகின்ற மயில்கள் கூவுகின்ற நாட்டை யுடைய தலைவன்; நம்மோடு விரும்பியுண்டாக்கிய நட்பானது, பசலையை யடைந்தாலும் பசலையொடு பொருந் தாது.

கபிலர்.

**265**

[வரை பொருட்குத் தலைவன் பிரிய, வரையாது பிரிந் தானென வருந்திய தலைவிக்குத் தோழி

கூறியது.]

தோழி! காந்தளினது அழகிய கொழுவிய அரும்பைக் காத்து நில்லாமல் வண்டுகள்; அவை மூடிய இதழ்களைத் திறக்கும் பொழுதில், முன்பு தாமறிந்த நடுநிலைமையை யுடைய பெரியோரைக் கண்ட, உபசார மறிந்த மக்களைப் போல இடங்கொடுத்து; இதழ்கள் பிணிப்பவிழ்ந்த உயர்ச்சியையுடைய மலைகள் வாய்ந்த தலைவன், நினது நிலையை நான் தனக்குச் சொன்னேனாக மேலும் இக் கள வொழுக்கம் நீட்டித்து நிகழாதவாறு வெட்கத்தை யடைந்தான். அவன் மிக நல்ல நெஞ்சத்தையுடையவன்.

கருவூர் கதப்பிள்ளை.

## 266

[வரையாது பிரிந்த விடத்துத் தோழிக்குத் தலைவி உரைத்தது.]



நம்மைத்துறந்து செல்லுதலில் வல்லவராகிய தலைவர், பறவையிடமாக விடுந்தூது மொழி மூலமாக நமக்கொன்றுரையா ராயினும், தமக்குப் பொருந்திய துன்பத்தையுடைய இராக்காலங்களில் இனிய துணையாக விருந்த,

மனைத்தோட்டத்திலுள்ள வேங்கை மரத்திற்குந் தூது மொழி யுரைத்தலை மறந்தனரோ?

நக்கீரர்.

## 267

[முன்னோரைப் போலப் பொருள் தேடத்துணிந்த தலைவன், பிறகு வாழ்நாட் சிறுமையையும் இளமையினது அருமையையுமெண்ணிச் செலவு தவிர்ந்தது.]

நாள்தோறும் முறையாக அடைதலாகிய மரபை

யுடைய கூற்றுவனது அளியற்ற கொலைத்தொழிலை நன்றாக அறிந்தோர், பெரிய இடத்தையுடைய பூமியின்கண் ஈண்டிய பயனையுடைய பெரிய செல்வம் ஒருங்கே வருவதாயினும், கரும்பின் அடிப்பகுதியில் வெட்டிய துண்டத்தையுண்டாற்போன்ற சுவையையுடைய வெள்ளிய பற்களினிடத்தே ஊறிய குற்றந் தீர்ந்த இனிய நீரையும், வளைவாகப்பொருந்திய குறியவளையையுமுடைய இளைய தலைவி நீங்கி யிருப்பப், பொருள் முயற்சியின் பொருட்டுத்தாம் மாத்திரம் பிரிந்து செல்லார்.

காலெறி கடிகையார்.

## 268

[தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குத் தோழி சொல்லியது.]

தோழி! பாம்புகளின் படத்தையுடைய பெரிய தலையைத் துணிக்கும் இடியொடு கூடிய நள்ளிரவு என்று எண்ணாராகி; இங்கு வந்து நெடிய மெல்லிய மூங்கிலைப் போன்ற நினது தோள்களை அடைந்த தலைவர்பால், செல்லுகின்றீரோ என்று சொல்லுதற்கும் வல்லமை இல்லேமா



யினேம், விரைவிலே மீண்டு வருவீரோ? என்று கேட்டலை யுஞ் செய்யேம். யாமவ்வாறு கேட்டலை யெவ்விதம் செய் வாம்?

கருவூர்ச்சேரமான் சாத்தன்.

## 269

[தலைவன் சிறைப்புறத்தானாகத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.]

என் தகப்பனும் வலியையுடைய சுறுமீன் எறிந்ததனு லுண்டான புண் ஆறி, நீல நிறம்பொருந்திய பெரிய கடலி னிடத்தில் மீன் வேட்டையாடுதலுக்குச் சென்றனன். என் தாயும் உப்பை விற்று வெள்ளிய நெல்லை வாங்கிவரும் பொருட்டு உப்பு விளைகின்ற அளத்திற்குச் சென்றனள். ஆகையால் குளிர்ச்சியையுடைய பெரிய பரப்பாகிய கடற் கரையையுடைய தலைவனுக்கு; இனிவரின் தலைவி அள வளாவுதற்கு எளியள் என்னுந் தூது மொழியைத், தூர வழியைக் கடந்துபோய்; வேகமாகச் செல்லும் வருத்தத் தைப் பாராமல் கூறி, உசாத் துணையாவாரைப் பெற்றால் மிக நல்லதாகும். இது எனது விருப்பம்.

கல்லாடனார்.

## 270

[வினைமுற்றிப் புகுந்த தலைவன் தலைவியொடு உடனிருந்து கூறியது.]

நாம் செய்வினை முடித்த செம்மை பொருந்திய மனத்

தோடு, தலைவியுடன் விரும்பிப் பொருந்தினேமாகிச், சூடிய குவளையினது குறிய காம்பையுடைய அலர்ந்த செவ்வி வாய்ந்த மலர் மணக்கின்ற நல்ல மெல்லிய கூந்தலாகிய மெல்லிய அணையின் கண்ணே இருந்தேம். பெரிய மேகமே! இனிமேல் தங்கிய இருள் கெடும்படி மின்னுதலைச் செய்து; குளிர்ச்சியாக வீழுகின்ற நீர்த்துளிகளை இனிமை யுண்டாகும்படி சிதறி, முறைமையினால் குறுந்தடியால் அடிக்கப்



பெறும் முரசைப்போல முழங்கிப் பலமுறை இடித்து மழையைப் பொழிந்து வாழ்வாயாக.

பாண்டியன் பன்னாடு தந்தான்.

## 271

[தலைமகனுக்கு வாயில் நேர்ந்து புகுந்த தோழிக்குத் தலைமகள் சொல்லியது.]

அருவியைப் போன்ற பெரிய நீர்த்துளிகளைச் சிதறி, ஆறு வெள்ளத்தைக் கொண்டு சப்திக்கும் நாட்டையுடைய தலைவனைத் தெளிந்து, அவனோடு சேர்ந்து மகிழ்ந்தது ஒரு நாளேயாகும். அங்ஙனம் சேர்ந்தது ; மிகப் பல நாட்கள் தோளொடு மயங்கி அழகைக் கொள்ளை கொள்ளும் பண்புடைய நோயாக ஆகின்றது.

அழிசி நச்சாத்தனார்.

## 272

[தன்னை யிடித்துரைத்த பாங்கனை நோக்கித் தலைவன் தலைவி பெறுதற்கரியளென்று கூறியது.]

பெருமை பொருந்திய வில்லையுடையராகவும், சீழ்க்கை ஒலியையுடையராகவும், கற்களை வீசி யெழும்பிய அகன்ற இடத்தையுடைய காட்டிடத்துத், தன் இனத்தினின்றும் பிரிந்த துன்பத்தையும் மடமையையும் உடைய பெண்மான் நேரே யிருப்பத், தன் தமையன்மார் சிலைத்தல் மாட்சிமைப்பட்ட மிகுந்த வேகத்தையுடைய ஆண்மானினது மருமத்திலே யழுந்தச் செய்து ; இரத்தத்தொடு பிடுங்கிய சிவந்த திரண்ட அம்பு ஒன்றையொன்று மாறுபட்டாற்போன்றமை யுண்ட கண்களையும், வாசனை வீசுகின்ற கரிய கூந்தலையுமுடைய தலைவியினுடைய தோள்களைத் தழுவுதலுங் கிடைக்குமோ ?

ஒரு சிறைப் பெரியன்.

273

[தலைவன் பிரிவானென வெண்ணிக் கவன்ற தலை மகளைத் தோழி வற்புறுத்தியது.]

இராக்காலத்தில் தாதையுடைய அரும்புகள் விளங் கப் பெரிய காட்டில் தடவி வருகின்றதும் அசைகின்றது மாகிய காற்றைப் போலக், குளிர்ந்தனவாகிய நல்ல மணம் வீசுகின்ற ஒள்ளிய நெற்றியையுடையோய்! தலைவன் பிரிவானென்று நீ வருந்தினையாயின் யான் தெரிந்ததைக் கூறுவேன் கேட்பாயாக! பெரிய தேனடை தங்கியிருக்கும் மலைப் பக்கத்தில், அத்தேனடையை யடையும்படி பழைய கண்ணேணியின்மேல் அறியாது ஏறிய அறிவிலா தானைப் போல, இந்த உலகமானது ஏமாந்தது. நாமுயிரோடிருப் பத் தலைவன் நின்னைப் பிரிந்து செல்லான், இ

தணைத்

தெளிவாயாக !

சிறைக்குடி யாந்தையார்.

## 274

[பொருள் வலித்த நெஞ்சிற்குத் தலைவன் சொல்லியது.]

பொன்னாலும் மணியாலுமியற்றப்பெற்ற ஆபரணங்களை யணிந்த அல்குலையுடைய தலைவியினது; அழகிய முலைகளையுடைய மார்பை நினைத்துக்கொண்டே சென்றால், புருவினது முதுகை யொத்த புல்லிய அடியையுடைய உகாய் மரத்தினது மணியைப்போன்ற செறிந்த பழங்கள் உதிர ; விடுகின்ற அம்பை வில்லோடு பிடித்து மரக்கிளைகளின் மேலேறி வழியிலே வருவாரைப் பார்க்கும் அஞ்சாமையையுடைய வழி பறிப்பவராகிய கள்வர், நீரை விரும்புகின்ற ஆசையால் மரப்பட்டையை மென்று ; அந் நீர் வேட்கையைத் தணிக்குந் துன்பத்தையுடைய காடுகளும் இனியவாம்.

உருத்திரன்.



## 275

[பருவ வரவின்கண் வரவு நிமித்தந் தோன்றத் தோழி தலைமகட்கு உரைத்தது.]

தோழி! ஆண்டு ஒலிப்பனவாகவுள்ளவை,

மாலையில்

ஊரை வந்து சேருங் காளையையுடைய பசுவினத்திலுள்ள புல்லைத் தின்ற நல்ல பசுக்கள் கழுத்திற் பூண்டிருக்கின்ற மணியோசையோ? செய்வினையை முடித்த நிறைந்த உள்ளத்தோடு வல்வில்லிளையர் தன் பக்கத்திற் போற்றிவர; ஈரமாகிய மணலையுடைய காட்டு வழியிலே வரும் தேரினது மணியோசையோ? முல்லைக்கொடி படர்ந்த கல்லின் மேலேறிக் காண்போம் வருவாயாக.!

ஒக்கூர்மாசாத்தி.

## 276

[குறை மருமல் தோழிக்குத் தலைவன் கூறியது.]

மூங்கிலைப் போன்ற தோள்களையுடைய

இளைய

தலைவியினது பாவையைப் பண்ணி யீந்தும், அதற்காகப் பஞ்சாய்க்கோரை வளர்ந்த பள்ளமாகிய நீர்நிலையைச் சுற்றியுந் திரிந்ததன்றி; இவளது தோற்றம் செய்தெழுந்த அழகிய நகிலில் அழகுபெற நான் எழுதிய தொய்யிலை இவளைக்காத்து நிற்போர் அறிதலையுஞ் செய்யார். நீதியையுடைய அரசனது செங்கோற் சபைக்கண் நான் தலைமகளைக் கேட்டால் இஃது என்னுவது? அழுங்கலையுடைய இவ்வூர், நிச்சயமாகவே பெரிதும் அறிவின்மையை

யுடையதாக விருக்கிறது. இது இரங்கத்தக்கது

கூழிக்கொற்றன்.

## 277

[தலைவன் குறித்துச் சென்ற பருவம் வருங்காலம் யாதென்று தோழி அறிவரைக்கண்டு வினயது.]

மின்னலை யொத்த இடையையுடைய தலைவி நடுங்கும் படியான இறுதியில் மழையையுடைய வாடைக்காலம் எப்



போது வருவதென்பாயோ ? அப்போது எம்முடைய தலைவர் வருவர். நீ குற்றமற்ற தெருவினிடத்தே நாயில்லாத அகன்ற வாயிலில், செந்நெற் சோற்றுருண்டையும் மிக வெண்மையான நெய்யும் ஆகிய, ஓரில்லத்திலிடும் பிச்சையை வயிறு நிரம்பச் சாப்பிட்டு, அச்சிரக் காலத்திற் குரிய விரும்பத்தக்க வெப்பத்தையுடைய நீரை,

வைக்குஞ்

செப்பில் பெறுவாயாக.

ஓரிற்பிச்சையார்.

## 278

[பிரிவிடை வற்புறுத்துந் தோழிக்குத்

தலைவி

யுரைத்து.]

தோழி! ஆண் குரங்கு இனிய பழங்களை மரத்தின் மேலிருந்து உதிர்க்கக், கீழேயிருந்து விரும்பியவற்றைத் தின்னுகிற குட்டிகளையுடைய பெண் குரங்குகள் உள்ள மலையைக் கடந்து சென்ற தலைவர், மிக்க காற்றுக் கோதிய அழகிய தளிரையுடைய மாமரத்தினது தளிரைக் கண்டாற் போன்ற, மிருதுவாகிய சிறிய அடியையுடைய சிறிய பசிய எமது விளையாட்டுப் பாவையையும் எம்மையும் நினையார், அவர் கொடுமையையுடையவர்.

பேரிசாத்தன்.

## 279

[தலைவன் பிரிந்துள்ள காலத்தில் ஆற்றல் வேண்டுமென்று தோழி வற்புறுத்தியபொழுது தலைவி கூறியது.]

மழையானது கழுவுதலை மறந்த கரிய பெரியதுறுகல், புழுதி படிந்த யானையைப்போல விளங்கித்தோன்றுகின்ற; பல பெரிய குன்றங்களைக் கடந்து சென்று திருந்திய சந்துகளையுடைய மூங்கிலைப்போன்ற என் தோள்களை நினையாதோர்; மாறுபட்ட கொம்பையும், இருளைப்போன்ற நிறத்தினையுமுடைய, எருமையினது வளருகிற கழுத்திற் கட்டப்பட்ட பிளந்த வாயையுந் தெளிந்த ஓசையையுமுடைய மணியானது, புலம்புகின்ற நள்ளிரவில் அவ் வெருமை

கள் நடக்குந்தோறும் இசைக்கின்ற இக்காலம், அவர் வரு
வதற்குரிய பருவமாக விருப்பவும் வாராராயினுர்.

மதுரை மருதன் இளநாகனுர்.

## 280

[இடித்துரைத்த பாங்கனை நோக்கித் தலைவன் கூறியது.]

நண்பரே! நீர் வாழ்வீராக. நான் சொல்வதைக் கேளும். எப்பொழுதும் என்னுடைய நெஞ்சத்தைத் தன்னிடத்திலே அகப்படுத்திக்கொண்ட, அழகிய சிலவாகிய கூந்தலையும் பெரிய தோளையுமுடைய குறு மகளது சிறிய மெல்லிய மேனியை, ஒரு நாள் ஐம்புலனும் பொருந்தப் புணருவேனுயின், நான் அதன்பின் அரை நாள் வாழ்க்கை

யையும் விரும்பேன்.

நக்கீரர்.

## 281

[பிரிவிடை வேறுபட்டாளைக் கண்டு தோழி வற்புறுத்திய காலை தலைவி யுரைத்தது.]

செம்மையான ஆபரணங்களையுடையாய்! நமது தலைவர் வெள்ளிய மணலின் கண்ணே நெருங்கிய பசிய அடியையுங், கருக்கையும், திரட்சியையுமுடைய பனையினது உச்சியிலுள்ள வெள்ளிய குருத்தோலையுடன் வைத்துக்கட்டிய பாலை நிலத்திலுள்ள வேப்பமரத்தினது நெருக்கத்தை யுடைய வெள்ளிய மலரைச், சுழித்தல் பொருந்திய மயிரை யுடைய தலைவி விளங்கும்படி அணிந்து கொண்டு, மலைகளோடு சேர்ந்த காட்டைக் கடந்து சென்றனரோ?

குடவாயிற் கீரத்தன்.

## 282

[வினைவயிற் பிரிந்த விடத்துத் தோழி தலைவிக்குரைத்தது.]

நம்மைப்பிரிந்து சென்ற தலைவர், செம்மண்ணையுடைய மேட்டின்மேற் செழித்த பருவம் வாய்த்த வரகினது, காற்றினால் ஒலிக்கும் நாற்றினது காரிருளை யொத்த ஓரிலையை, நாட் காலத்தே வந்த மான் குட்டி கவ்வித்தின்னலென்னுங் கடனைத்தீர்த்துக் கொள்ளுதற்கிடமாகிய, கார்காலத்தை யேற்றுக்கொண்ட குளிர்ந்த கொல்லையைக் காண்பாராயின்; நீர் விளங்குகின்ற மலைப்பக்கத்தில் ஒருபடியாக மலர்ந்த வெண்கூதாளத்தின் உள்துளையையுடைய அழகிய

புது மலர்கள், காம்பிற் கழன்று உதிர்வதைப்போல நினது

கைவளைகள், சோர்ந்து வீழ்வன அல்லவென்று எண்ணு

வாரோ?

நாகம் போத்தன்.

## 283

[தலைவன் பொருளீட்டச் சென்றிருந்த காலையில், தலைவி யாற்றுளெனக் கவன்ற தோழிக்குத் தலைவி சொல்லியது.]

தோழி! முன்னோரால் தேடி வைக்கப்பெற்ற பொருளைச் செலவழிப்போர் செல்வரென உலகத்தாராற் சொல்லப்பட மாட்டார்கள். தாந்தேடிய பொருளில்லாரது வாழ்க்கை இரத்தலைக் காட்டிலும் இழிவுடையது,

என்று கூறிய வன்மையை நாங் தெளியும்படி யெடுத்துக் கூறி, எப்பொழுதுங் கூற்றுவனைப்போன்ற கொலைவேல் மறச்சாதியார் வழியினிடத்தே தங்கி, வழிப்போவாரைக் கொன்றதனல் உண்டான புலாலைப்பருந்துகள் எதிர்பார்த்துத் தங்கியிருக்கின்ற, நெடிய பழைய இடத்தையுடையனவாகிய நீரில்லாத பாலை நிலத்து வழிகளிலே தலைவர் சென்ருர். அவர் வாழ்வாராக.

பாலைபாடிய பெருங்கடுங்கோ.

## 284

[வரைவிடைத்தோழி, தலைவிக்குச் சொல்லியது.]

H



போர் செய்த யானையினது புள்ளியமைந்த
முகத்தை
யொப்பப், பொது இடத்திலுள்ள துறுகல்லின்
மேலே
ஒள்ளிய செங்காந்தள்மலர் பல ஒன்ருக
மலருகின்ற
நாட்டையுடைய தலைவன் ;
அறமுடையவனுயினும் அது
இல்லாதவனுயினும், மலையினிடத்திலே

தாழ்ந்துவீழுகின்ற
தூய வெள்ளிய அருவியானது,
அச்சத்தைத்தரும் இலை
யால் வேய்ந்த குடிசையினருகில் இறங்கி ஓடும்
; நமக்குத்
துன்பந் தருவதாயுள்ள இச்
சிற்றூரினிடத்துள்ளார்,
தலைவன் அவ்வாறிருத்தல் பற்றி
நம்மைப் பழிப்பார்களோ?
அவர்கள் தமக்கென்று
ஓரறிவும் இல்லாதவர்களோ ?

மிளைவேள் தித்தன்.

## 285

[பருவங்கண்டு வேறுபட்ட விடத்துத் தோழி யிடித்துரைக்க அப்போது தலைவி சாற்றியது.]

தோழி! இனிய ஆண்புறு பலமுறை
புல்லியபுறத்தை
யுடைய பெண்புறுவை அழைத்து, ஒரு கண நேரத்தில்

எத்தகைய துன்பமுடையதாக ஆகின்றது. ஞெமை மரத்தின் உச்சியில், இறந்தோரது தசையை விரும்பி ஒற்றைப் பருந்து இருக்கின்ற, ஆகாயமளவு முயர்ந்து விளங்குகின்ற மலையைக் கடந்து சென்ற தலைவர், நாள்தோறும் விடியற் காலம் நீங்கிப் பகல் வரவும் பகற்காலத்தில் வந்திலர். எல்லாப்பகலின் எல்லையாகிய இரவிலும் திரும்பி வந்து தோன்றார். எங்கே இருக்கின்றாரோ? இங்கே மீண்டு வருவேனென்று அவர் கூறிய பருவம் இதுவே.

பூதத்தேவன்.

## 286

[இரந்து பின்னின்ற தலைவன் குறைமறுமற் கூறியது.]

முள்ளைப்போன்ற பற்களையும், அமிழ்தம் ஊறுகின்ற அழகிய சிவந்த வாயையும்; கமழுகின்ற அகிற்புகையும், சந்தனப்புகையும், வாசனை வீசுகின்ற கருமணல்

போன்ற கரிய கூந்தலையும் ; பெரிய அமர்த்த குளிர்ச்சியை
யுடைய கண்களையும் உடைய; தலைவியின் புன்னகை யோடு செருக்கின பார்வையை நினைத்துப் பார்ப்பேன் போல்வேன்.

எயிற்றியனார்.

## 287

[தலைவர் விரைவில் வருவரென்று தலைவிக்குத் தோழி கூறியது.]

தோழி! கேட்பாயாக. பன்னிரண்டு மாதம் நிறைந்த
கருப்பத்தைத் தாங்கித் தளர்ந்து, நடக்க மாட்டாத நிலை யோடு பச்சைப் புளிச்சுவையில் விருப்பத்தைக்கொண்ட
முதற்சூலையுடைய பெண்களைப் போல; நீரை முகந்து கொண்டு ஆகாயத்தில் சஞ்சரிக்க முடியாமல் அந்நீர்ப் பொறையைத் தாங்கிக் கொண்டு; செழிய பல மலைகளை நோக்கிப் பேரொலியையுடைய மேகங்கள் எழுகின்ற கார்ப்பருவத்தை, இப்பொழுது கண்டபின்புந் தலைவர் வராமலிருப்பாரோ?

கச்சிப்பேட்டு நன்னாகையார்

## 288

[தலைவன் அன்பில்லாதவனென்று தோழி சொல்லிக் கொண்டிருக்க, அப்பொழுது தலைவனது வரவுணர்ந்த தலைவி தோழிக்குக் கூறியது.]

மிளகுக் கொடிவளர்கின்ற மலைப்பக்கமாகிய அவ்விடத்தே, தளிரை யுண்ணுகின்ற குரங்குகள் ஒன்றுகத் திரண்டிருக்கின்ற பெரியமலைகள் பொருந்திய நாட்டையுடைய தலைவன் பிரிந்தனனாயினும்; நம்மிடத்தில் இனிய பண்பினன். உறவுடையாரால் செய்யப்படுந் துன்பத்தைக் காட்டிலும் இனிதெனப்படும் புத்தேளிருலகம் இனிமையையுடையதோ?

கபிலர்.



## 289

[காலங்கண்டு வேறுபட்டாளெனக் கவன்ற தோழிக்குத் தலைவி கூறியது.]

தோழி! வளருகிற பிறையைப்போல மேன்மேலும் பெருக்கத்தை யடைந்து, தோட்சந்தில் அணிந்த வளையை நெகிழச் செய்த துன்பத்தைத் தரும் காமநோயினால் தளிரைக் கசக்கினாற் போன்ற தன்மையை யுடையேமாகி மெலிந்து, தலைவர் பக்கத்தின்மையின் துன்புறுவதல்லா மலும் இம்மழையும் மயங்கிப் பெய்தது. அங்ஙனம் பெய்த மழை பெய்வதற்கு முன்னரே; இந்தக் கலக்கம் பொருந் திய ஊரிலுள்ளார் அவருக்காக இரங்கும் நம்மைக் காட்டி லும் அதிகமாக நம்மிடத்திரங்குவர்.

பெருங் கண்ணன்.

## 290

[வற்புறுத்துந் தோழிக்குத் தலைமகள் நெஞ்சழிந்து

சொல்லியது.]

காமத்தைத் தாங்குவாயாக என்று சொல்லுவோர், அக் காமத்தின் தன்மையை அறியமாட்டார்களா? அல்லது அறிந்தும் அதனைத் தாங்கும் அவ்வளவு வலிமை பொருந்தியவர்களா? நாம் எமது காதலரைக் காணே மாலை; நெருங்கிய துன்பம் மிக்க நெஞ்சத்தோடு, மிகுந்த வெள்ளத்தில் பாறையில் மோதுஞ் சிறிய நுரையைப்போல மெல்ல மெல்ல இல்லையாவேம்.

கல்பொரு சிறுநுரையார்.

## 291

[தலைவன் பாங்கனுக் குரைத்தது.]

மரங்களைச் சுட்ட கொல்லையில் செழித்த தினையி னிடத்தே, வீழுகிற கிளிகளை யோட்டுகின்ற தலைவியின் கையின்கண் உள்ள குளிரென்னுங் கருவியானது; இசை





யொடு பொருந்தி இனிய தாளத்தையுடையது; அக் குளிரின் இசையைத் தலைவியின் பாட்டென்று கருதிக் கிளிகள், தாம் படிந்த தினையினின்றும் எழுதலைச் செய்யா. அதற்குப் புலந்து அழுத அவளுடைய கண்கள்; மலைச் சாரலிலுள்ள ஆழமாகிய நீரையுடைய பசிய சுனையி னிடத்தே மலர்ந்த, குவளையினது வண்டுகள் பயிலுகின்ற பல இதழ்கள் கலந்து குளிர்ந்த மழைத் துளியை யேற்றுக் கொண்ட மலர்களைப் போன்றன.

கபிலர்.

## 292

[தலைவன் இரவுக்குறிக்கண் வந்து சிறைப்புறத்தானாக அதனையறிந்த தோழி தலைவிக்குக் கூறுவாளாகச் சொல்

வியது.]

சிரித்த முகத்தையுடைய விருந்தினனாகித் தலைவன் ஒரு நாள் வந்தானாக; பகைவர் மாறுபடும் போர்க்களத்தின் கண் உள்ள ஊரினரைப் போல நினது தாய் பல நாளும் தூங்குதலற்றவளானாள். நீராடச் சென்ற ஒளி பொருந்திய நெற்றியையுடைய பெண்; அந்நீர் கொணர்ந்த பசுங்காயைத் தின்ற குற்றத்திற்காக, எண்பத்தொரு ஆண் யானைகளோடு அவளது நிறையை யுடைய பொன்னாற் செய்த பாவையைக் கொடுப்பவும் வாங்கானாகி, அப் பெண்ணைக் கொலை செய்த நன்னனைப்போல நீங்காத நரகத்தின்கண் அவள் சென்று துன்புறுவாளாக.

பரணர்.

## 293

[பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனுக்கு வாயிலாகப் புக்க தோழிக்குத் தலைவியுரைத்தது.]

கள்ளைக் குடிக்கும் விருப்பத்தையுடையவர்களது பயணம், உள்ளூரின் கண்ணுள்ள பாளையினால் ஈனப்பட்ட நாரையுடைய குறிய காய்களைக் கொண்ட உயர்ந்த கரிய

பனையினது நுங்கைக் கைக்கொண்டு மீள் தற்கிடமாகிய; ஆதி அருமனுக் குரிய மூதூரைப்போன்ற நீரில் வளர்ந்த வெள்ளாம்பலினது அழகிய மாறுபட்ட முழு நெறியை யுடைய தழையுடை; தேமலையுடைய தொடையின் கண் முறையே மாறி மாறி யசைய, செவ்விய பொன்னுபரணங் களைத் தரித்த பரத்தை, அவ்விடத்திலே தலைவனைக் காணும் பொருட்டு வருவாள். நான் இரங்கத்தக்கேன்.

கள்ளிலாத்திரையன்.

## 294

[பகற் குறிக்கண் தலைமகன் சிறைப்புறமாக வந்த விடத்துத் தோழி, தலைவியை இற்செறிப்பரென்றியம் பியது.]

கடலினிடத்தே ஒருங்கே நீர் விளையாட்டுப் புரிந்தும்,

கடற்கரைச் சோலையினிடத்தே தங்கியும், மாலையையுடைய மகளிர் கூட்டத்தோடு குரவைக் கூத்தாடியும், அயலா ரைப் போல விரைவாக வந்துந் தழுவிச் செல்வானுயின

மையின் அலருண்டாயிற்று. தேமல் படர்ந்து விரிந்தகன்ற அல்குலினது திருத்தமான ஆபரணங்களசைதலையுடைய பக்கத்தின்கண் கட்டிய, பசிய தளிராற் செய்த தழையைக் காட்டினும் மிகச் சமீபத்திலிருந்து போகாநுகி. அதனுல் தாய் நம்மை இற்செறித்துக் காவல் செய்தலைத் தானே உண்டாக்கினுன்.

அஞ்சியாந்தை.

**295**

[வாயில் வேண்டிச் சென்ற தலைவனுக்குத் தோழி

யுரைத்தது.]

உடையாக உடுத்துக்கொண்டும், மாலையாகத் தொடுத்தணிந்தும், ஆபரணங்களாக அணிந்தும் கூந்தலின்கண்ணே செருகியும், தழையலங்காரத்தினுலே பொலிவுபெற்ற பரத்தையரோடு நெருங்கி; நீ நீர்விழாவிற்குரிய



அலங்காரங்களோடு வாரா நின்முய், இவ்வூரினிடத்துள்ளார் ஒரு பசுவினுல் வரும் ஊதியத்தைக் கொண்டு.

உண்ணும் உணவையுடைய செல்வச்
சிறப்பில்லாத இவ்
வாழ்க்கை; பெரிய நலத்தையுடைய இளைய
தலைவி இவனுக்கு வாழ்க்கைத் துணையாக
வந்தபின் சிறப்பை
யுடைய தாயிற்றென்று கூறுவர்.

தூங்கலோரி.

## 296

[தலைவனைக் காணும் பொழுதை, விடக்காணுப் பொழுது அதிகமாதலான் ஆற்ருளாய தலைமகள், தலைவன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லியது.]

தோழி! ஒன்று சொல்லுவேன் கேட்பாயாக புன்னையினது விளங்குகின்ற கிளையினிடத்திருந்த அழகிய சிறையையுடைய நாரை, பொருந்திய கழியினிடத்துள்ள சிறு மீனுணவை வெறுத்ததாயின், வயலிலுள்ள கள் மணம் கமழுகிற நெய்தற் பூவை நெற்கதிரோடு விரும்புகிற குளிர்ந்த அழகிய துறைவனைக் கண்டால்; அவன் முன்னே நின்று தொடியையுடையாளின்னதன்மையளாம்படி பிரிந்து செல்லுதல் உமக்குத் தகுமோ? என்று துணிந்து கடுமையான சொற்களைப் பேசி இடித்துரைத் தலைப் பாதுகாப்பாயாக.

பெரும் பாக்கன்.

## 297

[தோழி வரைவு மலிந்தது.]

மேல் விளிம்பை யுருவிய கொடுஞ் சிலையையுடைய வேடுவரது ; கூர்மை தங்கிய நீண்ட அம்பினது வெற்றி வாய்ந்த பகையினின்றுந் தம்மைப் பாதுகாவாராகி, எதிரே நின்று இறந்து விட்ட வழிப்போவார்மீது தழையை யிட்டு வைத்த குவியல்கள், ஊரைப்போலக் காணப்படுகிற மலைகளோங்கி யுயர்ந்த அகன்ற இடத்தில்



நல்ல வார்த்தைகளைக் கூறித் தலைவனோடு கூடிப்போதல் செய்யத்தக்க காரியமென்று ; தலைவர் உணர்வதற்கு முன்பு நிச்சயமாக நானுணர்ந்தேன்.

காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக் கண்ணன்.

## 298

[தலைவிக்குத் தோழி குறைமறுமற் கூறியது.]

தோழி ! நமது தெருவைச் சேரமெல்ல வந்து வந்து ; அருமையாக வாயைத் திறந்து இனியவைகளைக்

கூறி, நாள்தோறும் தான் நினைத்த தொன்று கைகூடா மையின் நிறம் மாறுபட்டுத் தங்குகின்ற ; அத்தலைவனது துன்பப் பார்வையை நினைத்துப் பார்ப்பாயாக. அவன் நீண்ட நேரம் இவ்விதம் என் பின் நிற்றல்,

இனிய கடுமை

மிக்க கள்ளியுடைய அகுதைக்குப் பின் நின்ற, வெள்ளிய முனையையுடைய சிறு கோலைக் கொண்ட அகவல் மகளிரையும், மடப்பந்தங்கிய பிடியாகிய பரிசிலை யொப்ப வேறொன்றைக் கூறக் கருதிய தாயிற்று.

பரணர்.

## 299

[சிறைப்புறமாகத் தோழிக்குத் தலைவி செப்பியது.]

தோழி! பழைமையை யுடைய கடலின் அலை அளவளாவுகின்ற, புட்களொலிக்குங் கடற்கரைச் சோலையிலுள்ள பூங் கொத்துக்கள் மலர்ந்த புன்னையினது மேட்டு நிழலில்; புணர்குறியைப் பெற்ற காலையில் எம் கண்கள் தலைவனைப் பார்த்தன. எம் செவி அவன் சொல் கேட்டன. எனது

பரந்த மெல்லிய தோள் அவனென்னைச் சேர்ந்தால்

மாண்புமிக்க அழகை யடைந்து, பிறகு பிரியின்

சோர்வை யடைவன இது என்ன விந்தை?

**300**

[இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த தலைவன் பிரிவச்சமும் வன்புறையுங் கூறியது.]

## குறுந்தொகை வசனம்

*121*

குவளை மணம் வீசுகின்ற தொகுதியாகிய கரிய கூந்
தலையும், ஆம்பல் மணத்தை வீசுந் தேன் பொதிந்த சிவந்த
வாயையும், ஆழமாகிய நீரில் வளர்ந்த தாமரை மலர்த்
தாதைப் போன்ற நுண்ணிய பல தேமற் புள்ளிகளையு
முடைய மாமை நிறமுடையோய்! நீ நான் பிரிவேனென்று
நினைத்துப் பயப்படாதே என்ற எனது சொல்லைக் கேட்டுப் பயப்படாதே. நான் நினது நேயத்தினைக் குறிய காலை
யுடைய அன்னப் பறவைகள், குவிந்த மணலின் கண்ணே

தங்கியிருக்கும் கடலாற் சூழப்பெற்ற நில வட்டத்தைப்
பெறினும் விட்டு விடுதலை நினையேன்.

சிறைக்குடியாந்தையார்.

## 301

[வரைவிடை வைத்துப் பிரியின் ஆற்றுவாயோ என்ற தோழிக்குத் தலைவி சொல்லியது.]

தோழி! மத்தளத்தைப்போன்ற அடிமரத்தையுடையது பனை. அதன் கொழுவிய ஓலையின் கண்ணே செய்த சிறிய சுள்ளிகளால் ஆகிய கூட்டிலுள்ள கரிய காலையுடைய அன்றிலினது விருப்பத்தையுடைய முதற் சூலினாலுண்டான வருத்தத்தையுடைய பெண்பறவை, ஆண் பறவையைக் கூப்பிடும் நள்ளிரவில் தனது சக்கரத்தாற் பொது விடத்தைப் பிளந்து கொண்டுவரும் கூட்டமான மணிகளையுடைய தலைவனது நெடிய தேர் வாராவிட்டாலும், வருவது போலக் காதினிடத்துக் கேட்குஞ் சப்தத்தினால் என்னுடைய கண்கள் உறக்கத்தைத் துறந்தன.

குன்றியன்.

## 302

[வரைவிடைக் கவன்ற தோழிக்குத் தலைவி கூறியது.]

தோழி! அருந்துய ருழத்தலைப் பொறேம். அதன் மேல் இறந்து படுதலை மிகவும் அஞ்சுகின்றேம். அந்தோ இன்னும் நல்ல மலை நாட்டையுடைய தலைவன், இருவரும்

பிரியா நண்பினரென்று பிறர் கூறும் பழிமொழிக்கு
அஞ்சினளோ? ஊரிலுள்ளார் பலர் ஒருங்கே துயிலுகின்ற
இரவிலும் என் நெஞ்சத்து வருதலன்றி நேரே வருதலை
யறியான். இங்ஙன மிருத்தலுயர்வுடையதோ? நீ கூறு
வாயாக.

மாங்குடிக்கிழார்.

## 303

[இற் செறிக்க நினைந்தமையைத் தோழி தலைவற்
குரைத்து வரைவு கடாயது.]

மீனின் பொருட்டுக் கழியின் நீரை யாராய்ந்து தங்
கிய கரிய காலையுடைய வெள்ளிய நாரைகள், அடை

கரைத் தாழையினிடத்துக் கூடிப், பெரிய க
டலில்
கரையை மோதி உடைகின்ற அலையின் ஒலியினால்
தூங்கு
கின்ற துறையை யுடைய தலைவ! என்னோடு ஒளி
தங்கிய
பூங்கொத்துகளையுடைய புன்னை மரத்தினது
அழகிய புள்
ளியையுடைய நிழலில், அழகிய கோடுகளையுடைய
நண்டு
களை யலைத்து விளையாடிய போதே என்
தோழியாகிய
தலைவி மிக நெகிழ்ந்த வளைகளையுடையவளாகி அதிக
மாகப் பசந்தாள்.

அம்மூவன்.

304

[வரைவிடை யாற்றாளெனக் கவன்ற
தலைவி யுரைத்தது.]

தோழிக்குத்

கொலைத் தொழிலிற் சிறந்த கூரிய முகத்தையுடைய

தூய எறி உளியைத் தன் முகத்திலமையும்படி பொருத்தப் பெற்ற, காய்ந்த மூங்கிலின் வலிய காம்பைத் தாங்குதற் கரிய நீரையுடைய வழியின்கண் எறிந்து கைக்கொள்ளும் வேகத்தையுடைய வலைந்த மீன் படகையுடைய பரதவர், கொம்பையுடைய சுறா மீனை யெறிய நெடிய கரையி னிடத்தே யிருந்த குறிய கால்களையுடைய அன்னப்பறவை யின் வெள்ளிய கூட்டம் இரிந்தோடும் மலர்கள் நெருங்கிய



சோலையையுந் தாழையையும் அழகிய குளிர்ந்த நீரையு முடைய கடற் கரைத் தலைவனோடு, நிச்சயமாகப் பகையைத் தருகின்ற ஒரு நட்பைச் செய்தேம்.

கணக்காயன் தத்தன்.

[அறத்தொடு நிற்றல் வேண்டுமெனத் தலைவி தோழிக்குக் கூறியது.]

தலைவனைக் கண்ட கண்கள் தரக் காமமாகிய ஒள்ளிய நெருப்பு என்னை யடைந்தது. அந்நோய் என்பொடு பொருந்த நலியினும் தலைவர் பால் விரும்பிப் போய்ச் சேர்தற்கு நாம் அரியவர்களாயினேம். தலைவர் நாமிருக்குமிடத்திற்கு வந்து துன்பத்தை நீக்கிஞரில்லை. இந்நிலையில் யானுற்ற காமநோய் பிறர் செலுத்திவிடார். இடையிலே சென்று பிரித்து எவரும் நீக்காராகக் குப்பைக் கோழிகளின் தனிச் சண்டையைப் போலத் தானே தொலைந்தாலல்லாமல் இதனை நீக்குவாரில்லை,

குப்பைக்கோழியார்.

## 306

[காப்பு மிகுதியில் தலைவி நெஞ்சிற் குரைத்தது.]

எனது மனமே! மெல்லிய இனிய விரும்பத் தக்க இச் சொற்களை மொழியேம் என்று உனக்குச் சொன்ஞலும், அழகிய மாமரத்தினது தாதமைந்த பூவினிடத்து வண்டு பல ஒருங்கே வீழுஞ் சோலையமைந்த குளிர்ந்த கடற் கரையையுடைய தலைவனைக் கண்டபின், நீ நான் கூறியவைகளை மறந்து விடுகின்ருயோ?

அம்மூவன்.

## 307

[பிரிவிடைக் கடுஞ்சொற் சொல்லிய தோழிக்குத் தலைவி யுரைத்தது.]



பிறை, வளையை யுடைத்தாற் போன்றதாகிக் கன்னியர் பலர் தொழும்படி செம்மை வாய்ந்த ஆகாயத்தின்கண் விரைவாகக் காணப்பட்டு இன்னும் பிறந்தது. ஆண் யானை, தனது வருந்திய நடையையுடைய மடப் பிடியின் வருத்தத்தைப் பொருமல், உயர்ந்த நிலையையுடைய யாமரம் அழியும்படி கொம்பாற் குத்தி வெள்ளிய நாரைக் கொண்டு வறுங்கையைச் சுவைத்து அண்ணாந்து தன் பிடியின் வருத்தத்தைப் போக்க முடியாமையை யெண்ணி வருந்துதலையுடைய நெஞ்சோடு பிளிறுகின்ற அரிய வழியையுடைய நீண்ட இடத்து, நாம் அழப் பிரிந்து சென்ற தலைவர் அன்றோ நம்மை மறந்தனரோ ?

கடம்பனூர்ச்சாண்டிலியன்.

## 308

[வரைவிடைக் கிழத்தியை வன்சொற் சொல்லி வற்

புறத்தியது.]

சோலையிலுள்ள வாழையினது சுருண்ட குருத்து, வருந்தும்படி அணங்குடைய அரியமத்தகத்தைத் தடவுதலினால் வலிகெட்டுக் கலங்கிய துயரத்தையும் மயக்கத்தையுமுடைய ஆண் யானை, வருந்திய மூச்சையும் மடப்பத்தையுமுடைய பெண் யானை, வருந்துந் தன் முதுகைத் தடவ, நீர் வழிந்தோடும் மலைப்பக்கத்தில் அரிதாகத் தூங்குகின்ற பெரிய மலைநாட்டையுடைய தலைவனது நட்பானது, மெய்யுறு புணர்ச்சியைத் தருகின்ற காரியத்திலே தங்கியது.

பெருந்தோட்குறுஞ்சாத்தன்.

## 309

[பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனுக்குத் தோழி வாயில் நேர்ந்தது.]

தலைவ! நீ எமக்கு இன்னாதனவாய பலவற்றைச் செய்யினும் நின்னை யில்லாமலிருத்தற்கு வல்லமை யின்மையின்



யாங், தொழில் புரியும் உழவர் தமது காரியத்தைச் செய்

வாராகி, வண்டுண்ண மலர்ந்த வாசம் கீழே படும்படி நீண்ட வரப்பிலே வாடப் போட்டாலும் மீட்டும் நீக்கிய வயலிற் பூக்கும், நின்னூர் நெய்தலைப் போன்ற பண்பை
யுடையே மாயினேம்.

உறையூர்ச்சல்லியன்குமரன்.

## 310

[யாரேனு மென்னிலையைத் தலைவனுக் குரைப்பாரா யின் நன்றுமென்று தலைவி தோழிக்குரைத்தது.]

தோழி! பறவைகளும் ஒலித்தன. பூவுங்குவிந்தன. கடற்கரைச் சோலையுந் தனிமையை மிகவுடைத்தாயிற்று. ஆகாயமும் நம்மைப்போன்ற மயக்கத்தை யுடையதாகிப் பகல் கழியப் பொலிவழிந்தது. இந்த என் நிலைமையைக் குளிர்ந்த மணங் கமழும் மலரையுடைய ஞாழல்கள் வளர்ந்த குளிர்ந்த அழகிய துறைவர்க்குச்

சென்று
சொல்லுவாரைப் பெற்றால் நான் இனிமேலும் உயிரோ டிருப்பேன்.

பெருங்கண்ணன்.

311

[அலரஞ்சிய தலைவி தலைவன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லியது.]

தோழி ! பெருங்கடலினது புலால் நாற்றம் வீசும் அகன்ற துறையினிடத்துப் பாகன் தடுக்கவும் நில்லாமற் சென்ற கல்லென்னும் ஒலியோடு விரைந்து செல்லும் தலைவன் தேரை நான் கண்டேனோ இல்லையோ ? நள்ளிரவில் ; உயர்ச்சியை யுடைய வெள்ளிய மணலினிடத்துத் தாழ்ந்து வளர்ந்த புன்னை மரத்தினது, மகரந்தப் பொடி சேர்ந்த மலர்களைப் பறிக்கும் மகளிர் கூட்டமெல்லாம் ஒருங்கே கண்டது. இங்ஙனமாகப் பழிமொழி எங்ஙனம் ஒழிவதாகும் ?

சேந்தன்கீரன்.



312

[இரவுக்குறி வந்து நீங்குகின்ற தலைமகன் தன் நெஞ்

சிற்குக் கூறுகிறது.]

நந்தலைவி இருவகை யொழுக்கத்தை அறிந்த கள்ளத் தன்மையையுடையாள். எங்ஙனமெனில் செறிந்த இருளை யுடைய இரவில் மாறுபாட்டைக் கொண்ட வலிமையை யுடைய சிவந்த வேலைக் கொண்ட மலையனது முள்ளூர் நறுமணத்தைப் போன்ற நறுமணம் வீசும்படிவந்து நம்மோடு பொருந்தியவளாயினாள். விடியற்காலத்தில் நான் தனது கூந்தலி லணிந்த பலவிதமான மலர்களை உதிர்த்து விட்டுச், சாந்தையிட்டுக் கோதிய நல்ல கூந்தலில் எண்ணெயைத் தடவிப் பொருந்தாத முகத்தையுடையவளாகித் தன் சுற்றத்தாரோடு ஒத்தவளாயினாள்.

கபிலர்.

## 313

[இரவுக்குறிவந்த தலைவன் சிறைப்புறமாக இருப்பத் தோழி இயற்பழித்த விடத்துத் தலைவி கூறியது.]

பெருங்கடற்கரைக் கண்ணுள்ள சிறு வெண்காக்கையானது, வெள்ளமாகிய நீரையுடைய கரிய கழியிடத்து மீனாகிய இரையைத்தேடி யுண்டு, பூமணம் வீசுஞ் சோலையிடத்துத் தங்குந் துறையையுடைய தலைவனோடு நம்மைக் கட்டினேம். கட்டப்பட்ட நட்பு நன்றாகப் பொருந்தியது. அது பிறரால் பிரித்தற்கரியதாகி யமைந்தது.

...............

[பிரிவிடை வேறுபட்ட கிழத்தி வற்புறுத்துந் தோழிக்குப் பருவங்காட்டி அழிந்து கூறியது.]

தோழி! துன்பத்தைச் செய்யும் இடங்களையுடைய பாலைநிலத்தைக் கடந்து சென்றவர் நெடுந்தூர முயர்ந்த ஆகாயத்தின்கண் நீர் மிக்க நிறைந்த கருப்பத்தையுடைய





குளிர்ந்த முழக்கம் பொருந்திய மேகம் ஒள்ளிய மின்னலின் ஒளிவிட்டு விளங்க மழைபெய்திருண்ட தனிமையைக் கொண்ட மாலைக்காலத்திலும், வளருகிற மின்னுதல் மிக்க இளையமுலைகள் அழுந்தும்படி தழுவுதற்குவாரார்.

பெருஞ்சாத்தன்.

315

[வரைவிடை யாற்றுவாயோ என்ற

தோழிக்குத் தலைவி கூறியது.]

தோழி! உதிக்கின்ற சந்திரன் கடலினிடத்தே காணப் பட்டாற் போல ஒழுகுகிற வெள்ளிய அருவியையுடைய உயர்ந்த மலைநாடன் சூரியனைப் போன்றவன். எனது பெரிய மூங்கிலைப்போன்ற தோள்கள் நெருஞ்சிப் பூக்களைப் போன்றன.

மதுரைவேளாதத்தன்.

## 316

[வரைவிடை வேறுபடுகின்ரு யென்ற தோழிக்குத் தலைவி கூறியது.]

தோழி! கெடாமல் வலியையுடைய கடவால் அலைக் கப்பட்ட மணல் விராவிய அடைகரையினிடத்து, விளை யாட்டுப் பெண்கள் ஒரு தன்மையாக அலைக்கப் பொருந்திய நண்டினது வருத்தம் மிக்க விரைந்த செலவை, ஓங்கி வரு கின்ற அலையானது தடுக்குந் துறையையுடைய தலைவன் சொல்வேறு பாடுடையனவாயின. அழகிய வளை நெகிழ்ந்து போகவும், வருத்தத்தினை உடலின் கண்ணே நிலைக்கச் செய்யவும் துன்பம் மிக்க எனது வருத்தத்தைத் தாய் அறிவாளாயின் யான் இனிமேலும் உயிரோடிருப்பேனோ?

தும்பிசேர்கீரன்.

## 317

[பிரிவுக்காலத்தில் தலைவியைத் தோழி, தலைவன் குறித்துச் சென்றபடி வருவானென்று வற்புறுத்திக் கூறியது.]

128 குறுந்தொகை வசனம்

விரும்புகிற மடப்பத்தையுடைய மரையானினது கருமையையும் நரையையுமுடைய நல்ல ஆண், உருசியான புளிப்பையுடைய நெல்லிக்காயைத் தின்று, பக்கத்திலுள்ள தாய தேன் பொருந்திய அழகிய மலர்கள் கெடும்படி வெப்பந் தங்கிய மூச்சை விட்டு, வானளாவ உயர்ந்த மலையினிடத்துள்ள பசிய சுனைநீரைக் குடிக்கும் நாட்டையுடைய தலைவன் ; மிகுதியாக வடதிசையினின்றும் வரும் வாடைக் காற்றுக்கு அழிந்த மேகந் தெற்கு நோக்கிச் செல்லும் குளிர்ந்த பனிக்காலத்தில் நம்மை விட்டுப் பிரிந்திருப்பனோ? (இருக்கமாட்டான்)

மதுரைக்கண்டரத்தன்.

## 318

[தலைவன் கேட்கக்கூடிய சமீபத்திலிருக்கத்

தோழிக்

குத் தலைவி கூறியது.]

எறிகின்ற சுறுமீன்கள் மிகுந்து விளங்குகிற கடற் பரப்பினிடத்துள்ள நல்ல ஞாழல் மலரோடு புன்னைப் பூவுங் கலந்து வெறியாட்ட யருகின்ற களத்தைப் போறக் காணப்படுந் துறையையுடைய தலைவன் என்னை மணத் தலை மனத்திற் கருதாழுயினும் அல்லது கருதினும், மற்ற வர் வரைவொன்று நேருமென்பதை யெண்ணுத அவனுக்கு நான் கூறுவேனே? இளைத்த இந்த மூங்கிலை யொத்த அழகிய மெல்லிய தோள்களைச் சேர்ந்த வந்நாளில் நம் மிடத்துத் தவறுதலைச் செய்யமாட்டேனென்று சபதத் தைச் செய்த கள்வனும், அச்சபதத்தை நிறைவேற்றக் கடமையுள்ளவனும் நமக்கோர் தெப்பம் போன்றிருப்பவ னும் அத்தலைவனே யாவான்.

அம்மூவன்.

## 319

[பருவ வரவின்கண் வேறுபட்ட தலைவியை நோக்கித் தோழி, நீ ஆற்றல் வேண்டுமென்ற காலையில் நான் எங்ங னம் ஆற்றுவேனென்று தலைவி கூறியது.]



தோழி! மானின் ஏறுகள்,

அறியாமையையுடைய

பெண் மான்களைத் தழுவி மயக்கம்

மிகுந்து காட்டினிடத்
துப் பொருந்திய புல்லில் மறைந்
தொடுங்கவும்; கையை
யுடைய நல்ல ஆண்யானைகள் பிடிகளோடு
பொருந்தி,
மேகத்தைத் தரித்த இடத்தையுடைய
மலையிடத்தை யடை
யும்படியும் மாரிக் காலத்துப் பெரிய மழை
மாலைக் காலத்
திலே வந்தது. பொன்னை
யொத்து விளங்கும் எனது சரீரத்
தின் நல்ல அழகைச் சிதைத்த தலைவர் இன்னும்
வாரரா
ர். நமதினிய உயிர்நிலை என்னாகும்?

தாயங்கண்ணன்.

## 320

[அலரஞ்சி யாற்றுளாய தலைவி, தலைவன்
கேட்கத்
தக்க அண்மையிலிருக்கும்போது தோழிக்குக்
கூறியது.]

பெரிய கடலினிடத்தே வலைஞர் பிடித்த மீனின் வற்றல், அரிய கழியினிடத்தே அவர் பிடித்த இறா மீனின் காய்ந்த வற்றலோடு, நிலா நிறத்தைப் போன்ற வெள்ளிய மணல், புலால் நாறும்படி மணல்மேடுதோறும்

ஒருங்கே

பரவுகின்ற துறையையுடைய தலைவனோடு;

ஒரு நாளே

னும் மகிழ்ந்து விளையாடிய பாவமில்லேம்.

அங்ஙனமாக

வும் போதரும்பு மலர்ந்த அழகிய

பூங்கொத்துகள் பொருந்

திய வண்டுகளொலிக்கின்ற கிளைகள் பொருந்திய புன்னை மரங்களையுடைய இவ்வூரார்; தங்கொடுமையாய் வீணே பழிமொழிகளைக் கூறுவர்.

தும்பிசேர்கீரன்.

## 321

[அயலார் வரையவரின் நான் அறத்தொடு நிற்பேன் என்று தலைவிக்குத் தோழி கூறியது.]

எனது தாயைப் போன்றவளே! இளமை பொருந்திய பெண்ணே! நினது மார்பைத் தழுவும் இனிய தலைவன், மலையிற்றோன்றிய செஞ் சந்தனத்தையும் முத்துமாலையை

I

யும் அணிந்த மார்பையுடையவனுகியும், சுனையில் மலர்ந்த வண்டுகள் பொருந்திய குவளைமாலையுடையவனுகியும் நம்

வீட்டிற்கு நடு இரவில் வந்து மீள்வான்.

அச்சமயத்திற்

பொதுவிடத்திலுள்ள மரையாவானது நீங்க அதன் ஆணைக்கொன்று சிவந்த கண்ணையுடைய பெரிய புலி முழங்கும். ஆகையால் களவொழுக்கத்தை மறைக்குங் காலம் இதுவல்ல. நமது இரகசியத்தை வெளியிடுவேன். இதனை நீ விரும்புவாயாக.

..................

## 322

[தலைமகன் வரவுணர்ந்து தோழிக்குத் தலைவி இயற்படமொழிந்தது.]

தோழி! அமர்த்த கண்களையுடைய காட்டுப் பசுவினது அழகிய கன்று, வேடுவர் எழுப்புவதனுல் அஞ்சித் தன் கூட்டத்தினின்றும் பிரிந்து காட்டினிடத்துப் பொருந்திய சிறிய ஊரிலே யகப்பட்டு இளையோர் பாதுகாக்கப் பொருந்தி அவ்விடத்தை நயந்து மனையுறை வாழ்க்கையில் வன்மை பெற்றதைப் போலக், கலந்து பழகுதலைக் காட்டி

லும் இனியவுமுளவோ? ஆதலின் நாமும் முடிந்தபடி நடந்து தலைவனிருக்குமிடத்திற்குச் செல்வோம்.

ஐயூர் முடவன்.

## 323

[வினைமுடித்த தலைவன் பாகனை நோக்கிக் கூறியது.]

பாட்டுப் பாடுவோர் படுமலைப் பாலை என்னும் பண்ணை வாசித்த இசையினது, வானத்தெழும் நல்ல உச்ச ஒலியை ஒப்ப ஒலியுண்டாக, மழை பெய்த புலத்தின்கண் பூத்த முல்லையினது பசிய முகையினது மணம் வீசும் நல்ல நுதலையுடைய, தலைவியினது இரண்டு தோள்களிலே தூங்கிக் கழிகின்ற நாட்கள்தான் இவ்வுலகத்தில் வாழும் நாட்களாகும். மற்றை நாட்களெல்லாம் என்ன பயனை



யுடையன? அவை பயனற்ற நாட்களாகும். (ஆதலின் விரைவில் தேரைச் செலுத்துவாயாக.)

. பதடிவைகலார.

324

[நீ இரவில் வருதல் நல்லதல்லவென்று தோழி தலைவனுக்குச் சொல்லியது.]

தலைவனே! நீ மிகுந்த பிரியமுடைமையின், வளைந்த
காலையுடைய முதலையினது கொலைத் தொழிலில் வல்ல
ஆண், வழியில் பிறர் செல்வதைத் தடுக்கும் கானலை
யுடைய பெரிய கடற்றுறைக்கண்
கூட்டமாய் மிகுந்துள்ள
மீன்களைக் கொண்ட
பெரிய உப்பங்கழியை நீந்திக் கடந்து
வருகின்றாய். தலைவி தன் அறியாமையால் வருந்துவாள்.
நான் என் நெஞ்சத்துள்ளே இரட்டைப் பிள்ளைகள்
நஞ்சுண்டால் இருவர் பொருட்டும் ஒரு தாய் வருந்துவதைப்போல் நீ வருதலை யஞ்சுகின்றேன்.

கவைமகன். 325

[பிரிவிடையாற்ருளெனக் கவன்ற தோழிக்குத் தலைவி
கூறியது.]

தோழி! செல்கிறேம் செல்கிறேம் என்று தலைவர் பன்முறை பகர்ந்தமையின், முன் பலமுறை கூறிய பொய்ச் செலவாக நினைத்து என் பக்கத்தில் நின்றும் நிலை பெற்று நீங்கிப்போகவென்றேன். ஐயோ! நமக்குப் பற்றுக் கோடாக வுள்ள தலைவன் இப்பொழுது எவ்விடத்திலிருக் கின்ருனே? எனது முலைகளின் நடுவிடம் அவன் பிரிவால் வருந்திய கண்ணீரால் நிறைந்து கரிய கால்களையுடைய வெள்ளிய நாரை உணவுமேயும் பெரிய குளம் போலா யிற்று.

நன்ஞகையார்.



## 326

[தலைவன் சிறிது நேரம் பிரியினும் எனக்குப் பெரிய துன்பம் உண்டாகிறது என்று தலைவி கூறியது.]

தோழி! பிணைத்த மாலையை யணிந்த மூங்கிலைப் போலப் பெருத்த தோளினையுடையவராகிய கடலில் நீராடும் பெண்கள்; கானலிலே செய்த மணற் சிற்றில்

னிடத்துத் தலைவனோடு எனக்குண்டாகிய கேண்மை, அத்தலைவன் ஒருநாள் பிரிந்தாலும் பலநாள் தொடருந் துன்பத்தையுடையதாக விருக்கின்றது.

........,.........

## 327

[தலைவி தலைவன் கொடுமையை அவன் கேட்ப ஆற்றை நோக்கிக் கூறியது.]

தீமையையுடைய ஆறே! நாம் செல்லும்
வீட்டினிடத்
துள்ள அறியாமையையுடைய தலைவி
இத்தனைப்போன்ற
மென்மையையுஞ் சாயலையுமுடையாள். இரங்கத்தக்காள்
என்று எண்ணாது, மலைப்பக்கம் அழகழியும்படி ஆண்டு
வளர்ந்த வாழைமரத்தைப் பெயர்த்துக்
கொண்டு வந்தாய்,
ஆகையால் கருணை செய்தால் வாழ்கின்ற வறிஞர்பால் ;
நன்மையில்லாதவர்களாதல் நன்றெனவுணர்ந்த மலை
நாட்டையுடைய தலைவனைக் காட்டிலும் நின் நிலை
மிகவும்

கொடியது.

அம்மூவன்.

## 328

[வரைவிடைப் பிரிவுக்காலத்தில் ஊரலரை யஞ்சற் கவென்று தோழி கூறியது.]

சிறிய பூவையுடைய ஞாழல் மரத்தின் வேரிற்றிரண் டியவளையினிடத்துள்ள நண்டினது சிறுவீடழியும்படி, அலைகள் குறுந்தடியாலடிக்கப்பெறுகிற முரசைப் போல மோதி முழங்கும் கடற்கரையையுடைய தலைவன் அன்பு

குறுந்தொகை வசனம்

133

செய்த நாள் மிகச் சிலவே. பழியோ விற்படையைக் கொண்ட சேனையையுடைய விச்சியர்களது தலைவன் ;
வேந்தரொடு போர் செய்த காலத்தில் பாணரது புலிப்
பார்வையை யொத்த நிலையினுற் காணப்பட்ட ஆரவாரம் மிக்க குறும்பூரினிடத்துள்ளார் செய்த முழக்கத்தினும் பெரிதாயிற்று.

பரணா.

## 329

[பிரிவிடை மெலிந்த தலைவி, தன்னை யாற்றுந் தோழிக்கு ஆற்றுவலென்பதுபடச் சாற்றியது.]

காட்டிலே வளர்ந்த இருப்பை மரத்தினது வேனிற் காலத்து வெள்ளிய மலர்கள், காற்றால் மோதப்படுகிற
உயர்ந்த கிளையினிடத்து நின்றும்
உதிர்க்கப்படுதலினால்
காம்பினின்றுங் கழன்று யானைகள் செல்லும்
சிறுவழி
மறையும்படி பரக்கின்றதும், விளங்கிய மலைகளையுடைய துங் கடத்தற்கரியதுமாய் அரிய பாலை நிலத்தைத் தாண் டிச் சென்ற தலைவரை நினைந்து, பொருந்திய இருளை யுடைய நள்ளிரவில் தூங்குவதரிதாகித், தெளிந்த நீரி
னிடத்துள்ள அழகிய
பூவை யொக்கும்படி விளங்குவதும், நன்கு மலர்ந்த குளிர்ச்சியையுடையதுமாய கண்ணிற்கு
நீர்த்துளிகள் எளிதிலே உண்டாவன.

ஓதலாந்தையார்.

**330**

[பிரிவிடை வேறுபட்ட தலைவி தோழிக்குச் சொல்லி

யது.]

தோழி! நல்ல தன்மையையுடைய வண்ணாத்தி கஞ்சியிலே தோய்த்தெடுத்து முதன்முறை துவைத்தலைத் துவைத்துவிட்டுக், குளிர்ந்த நீரிலே போட்ட நீரிற் பிரியாத பருத்த ஆடையின் முறுக்கை யொக்கும் பெரிய இலையை யுடைய பகன்றையின் கட்டவிழ்ந்த வெள்ளிய மலர், இனிய கடிய கள்ளைப்போல நல்ல வாசனையில்லாமல



நாறுகின்ற துன்பை யளிக்கும் அந்திப் பொழுதும், தனிமையும் அத்தலைவர் சென்ற நாட்டிலே யில்லையோ?

கழார்க்கீரனெயிற்றியன். **331**

[செலவுக் குறிப்பறிந்து வேறுபட்ட தலைவிக்குத் தோழி சொல்லியது.]

தோழி! நல்ல வடுவையும் பசிய அடியையுமுடைய மாமரத்தினது அழகிய தளிரைப்போன்ற நல்ல மாமை நிறம், பசலையையடைய நம்மைப் பார்க்கினும் சிறந்ததாகத் தலைவர்க்குத் தோற்றுகிற அரும்பொருளைத்

தேடு

வதற்கு, நெடிய மூங்கிலுலர்ந்த நீரற்ற கடிய இடத்தில் ;

வழியிற்போகும் பிரயாணிகள் தொலையும்படி எதிராக

நின்று வளைந்த வில்லையுடைய வேடுவர் கொள்ளையடிக்

கும் இடத்தையுடையதும், தறுகண்மையையுடைய யானைகள் பொருந்தியதுமாகிய காட்டைக் கடந்து செல்லுவாரோ ?

வாடாப் பிரபந்தன்.

## 332

[வரையாது வந்தொழுகுங் காலத்தில் ஒரு நாள் தலைவன் சிறைப்புறத்தில் நிற்பத் தலைவிக்குத் தோழி கூறியது.]

தோழி! வாசம் வீசும் மூச்சையுடைய மடப்பிடியைத் தழுவிப், பெரிய கையையுடைய யானை குன்றத்திடத்துள்ள சிற்றூரின்கண் இறங்கிச் செல்லும் மன்றங்கள்

பொருந்திய மலையையுடைய தலைவனுக்கு ; வாடை வந்த சிலவாகிய பெய்தலையுடைய நாளின் கடையாமத்தில், வருத்தத்திலே நீந்தும் நின்னுடைய பொறுத்தற்கரிய துன்பம் நீங்கும் வண்ணம் நீ விரும்பிக் கூறத்தக்கன வற்றைக் கூறினால் என்ன ?

மதுரை மருதங்கிழார் மகன் இளம்போத்தன்



## 333

[அறத்தொடு நிற்பேனென்று தலைவிக்குத் தோழி கூறியது.]

தோழி! குறும்படையாகிய அம்பையும் வளைந்த வில்லையுமுடைய வேடனது புனத்தை யுண்டதனாற் கடியப்பெற்ற பசிய கண்களையுடைய யானை, நல்ல தழையுடையை யணிந்த மகளிர் ஓட்டுகின்ற கிளிகளோடு குறிய

பொற்றைக் கல்லினிடத்துச் செல்ல மேலே பார்க்குங்
குன்றத்தையுடைய தலைவன், வினை நிறைவேருமற் குறை
யாக நிற்றலினுல் உண்டாகிய வருத்தம் நீங்கும்படி,
நம்முடைய இரகசியத்தை வெளிப்படுத்திஞல் என்ன
குற்றமாகும்? (நான் அறத்தொடு நிற்பேன்.)

உழுந் தினைப்புலவன்.

## 334

[வரைவிடை வைத்துப்பிரியின் நீ ஆற்றுவாயோ?
என்று கேட்ட தோழியை நோக்கித் தலைவி கூறியது.]

தோழி! சிறிய வெண்மையையுடைய காக்கையினது
செவ்விய வாயையுடைய பெரியதோடு, வீசுகின்ற அலை

களின் நீர்த்துளிகள் தம் ஈரமாகிய புறத்தை நனைப்ப, அக் குளிரை வெறுத்துத் தங்குதற்கிடமாகிய பல பூக்கள் பொருந்திய, சோலையையுடைய விரிந்த நீர் வாய்ந்த கடற் கரையையுடைய தலைவன் பிரிந்தால், நாமிழக்கும் பொருள் நமது இனிய உயிரை யல்லாமல் வேறொன்றுமில்லை.

இளம்பூதனார்.

## 335

[இற்செறிக்கப்படுதலை யுணர்த்திய தோழி அவளடை தற்கரியள் என்று கூறியது.]



நீண்ட அம்பையும், வலியவில்லையும உடைய வேட்டு
வருடைய தங்கையாகிய பெரிய தோளையுடைய தலைவி

இருக்கின்ற ஊர், நிரைத்த வளையையுடைய முன்கையை யும் நேரான ஆபரணங்களையுமுடைய பெண்கள்,
கரிய மலையிலுள்ள அகன்ற பாறையினிடத்தில் செந்
தினையைப் பரப்பிச் சுனையின்கண் பாய்கின்ற சோர்வை
யுடைய சமயத்தைப் பார்த்து, மரக்கிளையினின்றும்
இறங்கிப் பசிய கண்ணையுடைய பெண் குரங்குகள், அத்
தினையைக் குட்டிகளோடு கவரும் மலையினிடத்தே
பொருந்தியது.

இருந்தையூர்க் கொற்றன் புலவன்.

## 336

[தலைவன் இரவுக்குறியை விரும்பத் தோழி அதனை
மறுத்து வரைவு கடாயது.]

தேன் பரவுகின்ற துறையை உடைய தலைவனே! பகை
வருக்கு மகிழ்ச்சி உண்டாகவும் எமக்குத் துன்பம் உண்டா

கவும் அறிவுடை யோர் இங்கே வருவரோ? நீ பிரிந்த தலைவி சிறிய நாவையுடைய ஒளி பொருந்திய மணிகள் விளரிப் பண்ணைப் போலச் சப்திக்க, விரைந்து செல்லும்
குதிரை பூட்டிய உயர்ந்த தேரினது சக்கரம் மேலே ஏறிச்
சென்றமையால், நலிவை அடைந்த கரிய கழியினிடத்துள்ள நெய்தற் பூவைப்போல வருத்தத்தை அடைந்தாள்; அவள் இரங்கத்தக்காள்.

குன்றியன்.

## 337

[இரந்து பின்னின்ற தலைவனை நோக்கித் தோழி தலைவியின் இளமைத் தன்மையைக் கூறியபொழுது, தலைவன் அவளது பருவத்தைக் கூறி வற்புறுத்தியது.]



முலைகள் அரும்பின. தலையிற் கிளைத்த மிருதுவான மயிர்க் கொத்துக்கள் கீழே வீழ்ந்தன. நெருங்கிய வரிசை யான வெள்ளிய பல்லும் முதன் முறை விழுந்து முழுவதும் முளைத்து நிரம்பி விட்டன. தேமலுஞ் சில காணப்படு கின்றன.

என்னை வருத்துவதற்கு அவள் அறிவாள்.
அவளிதனை அறிந்திலள்.
மிகப்பெரிய செல்வத்தை உடை .யாரது ஒப்பற்ற மடப்பத்தை உடைய தலைவியானவள் எந்தத் தன்மையை உடையவளாவளோ?

பொதுக்கயத்துக்கீரந்தை.

## 338

[பிரிவிடைத் தோழி வற்புறுத்தியது.]

மூங்கிலைப்போன்ற தோள்களையும் விளங்கிய வீட்

டின் கண்ணே அடங்கிய கற்பையும் உடைய நல்ல நிறம்

பொருந்திய தலைவி! பெரிய வெற்றியை உடைய தலைவனது

தேர்; துன்பம் நீங்கும் வண்ணம் முறுக்கின கொம்பையுடைய இரலையாகிய நல்ல தலைமையையுடைய ஆண்மான், மென்மையையும் மடப்பத்தையும் உடைய பெண் மானோடு தாம் தங்குதற்குரிய நிழலினிடத்திலே தங்கிப், பூக்கள் நெருங்கி அகன்ற பிணக்கத்தை உடைய புதரினிடத்திலே தூங்கிப், பொழுது போனபிறகு செழிய பயற்றம் பயிரைக் கடித்துத் தின்னும் துன்பத்தைத் தரும் மாலைக்காலத்தினையும், பின் பனிக்கடை நாளையும் குளிர்ந்த பனியையும்

உடைய அச்சிரக் காலத்திலே வந்தது.

பெருங்குன்றூர்க் கிழார்.

339

[வரைவிடை வேறுபட்ட கிழத்தியைத் தோழி "களவுக் காலத்தில் அவ்வொழுக்கம் உனக்கு இனிமையாக இருந்தது. இப்பொழுது வருந்துதல் என்ன?" என்று சொல்லி இடித்துரைத்தது.]



தோழி! வாசனையை உடைய அகிலினது விளங்கிச் செறிந்த புனத்தின்கண் எழுந்த நல்ல புகையானது, நீர்த் துளிகளற்ற வெள்ளிய மேகத்தைப் போலச் சென்று மலைச் சாரலில் உள்ள குறவர்களுடைய ஊரில் இறங்கும் நாட்டையுடைய தலைவன், பலவித மலர்கள் கலந்த மாலையை அணிந்த நினது நல்ல மார்பைச் சேருதல், கரிய இதழை உடைய குவளை மலரைப்போன்ற

மையுண்ட கண்கள் அழும்படி பசலை
உண்டாவதற்கு முன்பு மிக இனிமையாக இருந்தது.

பேயார்.

## 340

[இரவுக்குறி உணர்த்திய தோழிக்குத் தலைவி மறுத்தது.]

தோழி! அவர் இருந்த எனது மனம்,
காமமானது
மிகுந்ததாயின் தலைவரை நினைத்துச் சென்றும், நாம் அவர்க்காகப் புலம்பினோமாயின் நம்முடன் இருப்பதாகியும், ஒருபாற் படாதாகிக் கடற்கரைப் பரப்பிலே நின்ற பூவையுடைய தாழை, கழிபெயர்கின்ற இடத்தில் தளர்ந்து
வெள்ளம் பெயரும்பொழுது தானும் பெயர்ந்தது
போலத்
தானும் வருந்துதலைச் செய்யும்.

## 341

அம்மூவன்.

[பருவ வரவின்கண் வேறுபடுமெனக் கவன்ற தோழிக்குத் தலைவி யுரைத்தது.]

தோழி! பல பூக்கள்தோன்றிய பசுமையான அரும்பு களை உடைய குராமரம் நெற் பொரியைப் போன்ற பூக்களை உடைய புன்கமரத்தோடு சோலையின்கண் அழகைச் செய்து, இளைகண்ணுக்கினிதாகிய இந்தக் காலத்திலுந் தலைவர் நம்மை விரும்பிப் பாதுகாவாராயினும், பெரியோர்கள் நெஞ்சத்திலே நினைத்த மேற்கோள் செலுத்தப் படுவது அன்று என்று எண்ணி, முன்னர் வலிக்காத என்



நெஞ்சம் பின்னர் வலித்தமையால் எனது தறுகண்மை பொருந்திய உயிரோடு வாழுவேனாயினேன்.

மிளைகிழான்நல்வேட்டன்.

## 342

[தலைவி இற்செறிக்கப்பட்டதை அறிந்த தலைவன் பின்னும் களவொழுக்கத்தை விரும்பத் தோழி நெருக்கிச் சொல்லி வரைவு கடாயது.]

ஆண் குரங்கு தன் கையாற் றோண்டிய
வாசனை வீசு
இன்ற சுளைகளையுடைய பெரிய
பலாப்பழத்தைப், பாது
காத்தலை மறந்த வேடன்; பின்னர் மணத்தை
உடைய
மரங்கள் தோறும் குரங்குகள்
அகப்படுதற்குரிய வலை
களைக் கட்டிவைக்கும் மலையையுடைய
நாடனே! பசிய
சுனையினிடத்தில் மலர்ந்த குவளை மலர்களை
இடையிலே
சேர்த்துக் கட்டிய, குளிர்ந்த தழையாடையை அணிந்த தலைவி, இங்கே வருத்தத்தை அடைய உன்னை விரும்பிய வர்களது துன்பத்தைப் போக்கும்
நல்வினைப் பயனை எய்
தாத பண்பினை யுடையாயெனின் அவ்வியல்பு
நினக்குத்
தகுமோ?

காவிரிப்பூம் பட்டினத்துக் கந்தரத்தனார்

## 343

[தோழி தலைவியை உடன் போக்கு நயப்பக் கூறியது.]

தோழி! மிகுந்த வலிமையுடைய பெரிய புலியினது

பிளந்த வாயைப் பெற்ற ஆணானது, நனைந்த கன்னத்தை யுந் தலைமையையுமுடைய யானையின் அழகிய முகத்தின் கண்ணே பாய்ந்ததாகி அந்த யானையின் வெள்ளிய கொம் பைத் தனது இரத்தத்தால் சிவந்த நிறத்தைக் கொள்ளச் செய்து, பிளப்பையுடைய கன்முழையின்கண் மேல்காற்று வீழச்செய்த கரிய அடியையுடைய வேங்கை மரத்தின் வாடிய பூவையுடைய கிளையைப்போல, இறந்து கிடக்கும்



உயர்ந்த மலை நாட்டையுடைய தலைவனோடு போகும்
இடத்தை நீ எண்ணுவாயாக.
அங்ஙனமெண்ணின் வாழ்
வாய்.

ஈழத்துப் பூதன் றேவன்.

## 344

[பிரிவிடை வற்புறுத்துந் தோழிக்குத் தலைவி
கூறியது.]

தோழி! குளிர்ச்சி உண்டாகும்படி வீசுகின்ற துளி
களாகிய பனியையுடைய கடுமையாகிய மாதத்தில், புலத்தி

னுள்ள பயிரை அருந்திய தலைமை எருதோடு நிலத்தைத்
தொடும் அலை தாடியையுடையனவாகிய பெருத்த முலைக்
காம்பைக்கொண்ட மடியையுடைய பசுக்கள், பாலை ஒழுக
விட்டுத் தங்கன்றுகளை நினைந்து நிரையை நீங்கி ஊரி
னிடத்தே திரும்பி வருகின்ற துன்பத்தைத் தரும் மாலைக்
காலத்தில், அரிதிற் பெறுகின்ற பொருள் மேற்சென்ற
நெஞ்சப் பிணிப்பைப் போக்கப் பிரிந்து சென்று உறை
கின்ற காதலர் மீண்டு வரக்காணும் பெண்கள் நிச்சயமாகத்
தவஞ் செய்தவரேயாவர்.

குறுங்குடி மருதன்.

## 345

[பகல் வந்து ஒழுகுவானைத் தோழி இரவில் வருகவென்றது.]

தாழை யமைந்த விளங்கிய அலைகளையுடைய வளைந்த கழியானது இழுமென ஒலிக்கும். அவ்விடத்துள்ள பெரிய கடலை வேலியாகவுடைய எமது சிறிய நல்ல ஊரின்கண், இழையணியப்பட்டு ஓடுகின்ற கொடுஞ்சியையுடைய நுமது

உயர்ந்த தேரை, மலைபோலுயர்ந்த நெடியமணல மேட்டிலே நிறுத்திவிட்டு, இங்கிருந்து இளைப்பாறித் தழையையணிந்த தாழ்ந்த அல்குலையுடைய இத்தலைவியின் தனிமைத் துயரம் நீங்கும்படி தங்குவீராயின் அது பிழையாகுமோ?

அண்டர் மகன் குறுவழுதி.



## 346

[தோழி தலைவியை இரவுக்குறி நயக்கும்படி கூறியது.]

தோழி! இளம்பிடியை விரும்பிய
மூங்கில் முளையைப் போன்ற கொம்பையுடைய
இளையகளிறு, குன்றிடத்தைப் பொருந்தி ஆண்டுள்ள
குறவர்கள் ஆரவாரம் செய்ததனால்,
மன்றத்தைப் பிளந்து செல்லும்
நாட்டையுடைய தலைவன், பகலில் வந்து குவளைப்
பூமாலையை நினக்குக் கொடுத்தும் தினைப்புனக்
கொல்லையில் வீழ்கின்ற கிளிகளை நம்மோடு
ஓட்டியும், மாலைப்பொழுதில் நல்ல
மனத்தினிடத்தில் ஒன்றை விரும்பி அதனைச்
சொல்லவும் துணியாமல் குறை

பாட்டை யடைந்தான்.

வாயிலிளங் கண்ணன்.

## 347

[பொருள் வலிக்கும் நெஞ்சிற்குத் தலைவன் சொல்லிச் செலவழுங்கியது.]

நீர் நிறைந்த சுனை பின்பு வற்றுதலினால் வறுமை யடைந்த பாலை நிலத்தில் வளர்ந்த, இளவாகை மரத்தின் கொம்பின்கண் ணுள்ள நல்ல மலர், மடமையையுடைய கரிய மயிலினது உச்சிக்கொண்டையைப் போலக் காணப் பெறுகின்ற நீண்ட காட்டு வழியில், இத்தலைவியும் நம்மோடு வந்து, பொருந்தும் முயக்கத்தைச் செய்வாளெனின் பொருள் தேடுதற்குத் துணிந்த நின் துணிவும் மிக நன்மையையுடையதே யாகும்.

காவிரிப்பூம் பட்டினத்துச் சேந்தங் கண்ணன்.

## 348

[செலவுக் குறிப்பறிந்து வேறுபட்ட தலைவியை நோக்கித் தோழி சொல்லியது.]

சிறப்புத்தங்கிய ஆபரணங்களை யணிந்தோய்! நம் தலைவர் நம்மை விட்டுத் தாம் மாத்திரம் பிரிந்து செல்வா

ராயின், காட்டினிடத்து மேய் புலத்தைத்
தேடிச் செல்
லும் யானைக் கோட்டிடத்தே முறிந்து தங்கிய சிறிய மலர்
களையுடைய முல்லைக் கொடியின் கொம்பைப்போல, இமை
யழியும்படி ஊறுகின்ற கண்ணீர்த்துளி பரவி;
மதர்த்த
அழகையுடைய அணிகலன்களை தன்னி
டத்தே
பொருந்தி அழகு வாய்ந்த நின் கொங்கைகளை
நனைத்தலை
யுங் காணுரோ?

மாவளத்தன.

## 349

[பரத்தையிடத்திலிருந்து பிரிந்து
வந்த தலைவன் கேட்
கும் அண்மையனுகத்
தோழிக்குத் தலைவி கூறியது.]

தோழி! அடும்பின் கொடியிடத்தே மலர்ந்த அழகிய

பூவைச் சிதைத்து, மீனை யருந்துகிற பெரிய தாளையுடைய நாரை தங்கியிருக்கிற மணல்மேடு பொருந்திய குளிர்ந்த துறை வாய்ந்த தலைவனை வளைத்து, நமது பெண்மை நலத்தைப் பெறுவோமென்று கூறினாய்; அப்படியே பெறுவோம். ஆயினும் துன்பத்திற் கஞ்சி, விரும்பி யிரந்தவற்றைக் கொடுத்துப்; பிறகு கொடுத்த அவற்றைத் தருக என்று சொல்லுதலைக் காட்டிலும் நமதினிய உயிரை இழத்தல் துன்பத்தையுடையதோ? (கொடுத்ததை மீண்டுங் கேட்போர் கொடுநர கதனில் வீழ்வர்.)

சாத்தன்.

**350**

[தலைவன் பிரிந்த பின் வேறுபட்ட தலைவியை நோக்கி

"முன்னர் உடம்பட்டு இப்பொழுது வருந்துதல் தக்கதன்று" என்று தோழி கூறியது.]

தோழி! ஒன்று கூறுவேன் கேட்பாயாக. வழியின் பக்கத்திலிருந்த பெரிய தொகுதியாகிய அழகிய சிறகுகளையும் நெடிய கால்களையும் உடைய கணந்துட் பறவைகள், மக்களுண்மையைப் புலப்படுத்தி வழிப்போகும் பிரயாணி

களது படையை இடத்தினின்றும் நீங்கச் செய்யும் மலை
யுடைய காட்டைக் கடந்து, நிலையாப் பொருள் வேட்கை
யினுல் நம்மைப் பிரிந்து
சென்றூர் ; பிரியுங்காலத்தில் அவர்
முன்னே நின்று யாம் பனியினது கடுமையையுடையேம்
ஆதலின் போதலை யொழிமினென்று கூறினேமாயின்
போவாரோ ?

ஆலத்தூர்க் கிழார்.

## 351

[தலைவனது சுற்றத்தார் வரைவொடு வந்த வழி
அவருக்கு நமர் உடன் படுவரோ உடன் படாரோ என்று
ஐயுற்றபொழுது, தலைவியை

நோக்கித் தோழி 'நமர் உடன்
பட்டனர்' என்று கூறியது.]

வளையையணிந்த தலைவி! நம் சுற்றத்தார்; விரை தலை
யுடைய வளைந்த கால் பொருந்திய வளையின்கண் வாழும் நண்டு, தன் கூரிய நகத்தினால் கீறிய ஈரமுள்ள மணலை யுடைய நீருள்ள வழி சிதையும்படி, இழுமென்னுஞ் சப்தமுண்டாக இடியினது" முழக்கத்தையுடைய அலைக
ளுடையும் துறை பொருந்திய தலைவருக்கு, நீ உரியை என்
பதை உடன்பட்டுக் கூறினர். அதனை நான் அறிந்து
மகிழ்ந்தேன். விரிந்த பூக்களையுடைய புன்னை மரங்கள்
உயர்ந்து வளர்ந்த புலால் நாற்றமமைந்த சேரியினிடத்துள்ள, இனிய மகிழ்ச்சியையுடைய பெண்கள் கூட்டத்தோடு ஆரவாரத்தையுடைய இந்த ஊர் இன்னும் அலர் கூறுதற்றன்மையை யுடையதோ?

அம்மூவன்.

352

[பிரிவுக்காலத்தில் தலைவி மெலிந்து தோழிக்குக் கூறியது.]

தோழி! ஆழமாகிய நீரின்கண் வளர்ந்த ஆம்பலினது இலையின் புறத்தைப்போன்ற, வளைந்த மெல்லிய சிறையை யுடையனவாகிய கூரிய நகங்களைக் கொண்ட வெளவால்



கள்; அகன்ற இலைகளையுடைய பலாமரங்கள் பொருந்திய மலைச் சாரலை நோக்கிப், பகற்காலத்தில் தாம் வசித்தமரம் தனிமையை யடையும்படி போகும் சிறிய புல்லிய மாலை நேரம் உளதாதலை, அத்தலைவரைக் காணாத காலத்தில் அறிவேன்.

கடியலூர் உருத்திரங் கண்ணனார்.

353

[இரவுக்குறியை விரும்பிய தலைவனுக்குத், தோழி அக்குறியை மறுத்து வரைவு கடாயது.]

பகற் காலத்தில்; கொடுமுடிகள் உயர்ந்த நீண்ட மலையினது அடியிடத்திலே, ஓசை யினிதாகிய அருவியில் நிறைந்த முழக்கத்தைக்கொண்ட மலையையுடைய தலைவனது மார்பு தெப்பமாக விளையாடுதல் இனிது. இராக் காலத்தில் பஞ்சாலாகிய வெள்ளிய திரியையுடைய செவ்விய சுடரமைந்த தீபத்தைக் கொண்ட வீட்டின் கண்ணே; நந்தாய் பின்னல் தொங்குகின்ற பிடரியைத் தழுவி யணைப்ப, வரிசையாக இமைகள் ஒன்றோடு ஒன்று பொருந்தாத விழிகளோடு நாம் துயிலுதல் துன்பத்தை யுடையது.

உறையூர் முதுகூத்தன்.

## 354

[பரத்தையிற் பிரிந்து வாயில் வேண்டிச் சென்ற தலைவனுக்குத் தோழி வாயில் மறுத்தது.]

நீரில் நீண்ட நேரம் விளையாடினால் கண்களுஞ் சிவக்கும். நன்றாகச் சாப்பிட்டவர்களது வாயினிடத்திலே தேனும் புளிக்கும். ஆதலின் நீ யெம்மைப் பிரிந்து செல்லுவையாயின், அழகிய குளிர்ந்த பொய்கையை யுடைய எம் தந்தையினது எமது ஊரின் கண்ணே, கடுமையான நஞ்சினையுடைய பாம்புகள் ஒடுங்தெருவில், நடுங்கு

தற்குரிய மிகுந்த துன்பத்தை முன்பு நீக்கிய எம்மை நீ, எம்முடைய வீட்டிற்கு அழைத்துச் சென்றுவிடுவாயாக.

கயத்தூர்க்கிழான்.

## 355

[இரவுக்குறிக்கண் வந்த தலைவனைக் கண்ட தோழி நொந்து கூறியது.]

உயரத்தைக் கொண்ட மலையையுடைய தலைவனே!
பெய்கின்ற மழை கண்ணை மறைப்பதனால் ஆகாயத்தைக்
காண்பாயல்லை. நீர் எங்கும் பரவி ஓடுதலினால் பூமியைக்
காண்பாயல்லை. கதிரவன் போயினமையின் இருள் அதிக
மாக உண்டாயிற்று. இங்ஙனமாகப் பலர் தூங்கும்
நள்ளிரவில், எவ்வாறு வந்தாய்?

வேங்கைமரம் தனது
மலரின் வாசத்தை வீசுகிற எமது சிற்றூரை எவ்வாறறிந் தாய் ? நான் வருந்துகிறேன்.

கபிலர்.

## 356

[தலைவி தலைவனுடன் போயினபின் செவிலி வருந்திக் கூறியது.]

கையிலேந்திய செம்பொன்னாற் செய்யப்பட்ட பாத் திரத்திலுள்ள அழகிய பொரி கலந்த பாலையும், அதிக மென் றுண்ணாதாளாகிய வளைவு பொருந்திய குறிய வளையை யணிந்த தளிரை யொத்த என் மகள், நிழலடங்கி யற்றுப்போன நீரில்லாத கடத்தற்கரிய பாலை நிலத் திடத்தே ; கழலை யணிந்த தலைவன் தன்னைப் பாதுகாக்க விரைந்து சென்று, நீரற்ற சுனையின் பக்கத்தில் உலர்ந்து வெந்த மிகுந்த வெப்பத்தை யுடைய கலங்கல் நீரைத், தவ்வென்னும் ஓசை யுண்டாகும்படி குடிக்க எவ்வாறு வல்லமையையுடையவளாவாள் ?

கயமன்.



## 357

[தோழி தலைவன் கேட்கும் அண்மையளாகத்

தலைவிக்

குச் சொல்லியது.]

மூங்கிலினது அழகு நெகிழ்ந்த நின் தோள்கள்; வெறுக்கத்தக்க துன்பத்தால் வருந்தித் தூங்குதலில்லாத மையுண்ட கண்களில் உண்டாகுந் துளி குறுக்கே சென்று இப்பொழுது மென்மையை யுடைய வாகலான, தினைச்சாதியுள் அழகிய சிறிய தினையைக் காக்கும் பரண் மேலுள்ள குறவனது, கொள்ளிக்கட்டையினாற் பயந்து போன உயர்ந்த நல்ல யானையானது பிறகு விண்ணினின்றும் நட்சத்திரம் வீழ்தலாலுண்டாகிற ஒளியைக் கண்டு பயப்படுகிற, ஆகாயத்தை யளாவிய மலையையுடைய தலைவன் நின்னைச் சேர்வதற்கு முன்பு இவை நல்லவென்று கூறப்படும் சொற்களை யடைந்தன.

கபிலர்.

# 358

[தலைமகன் பிரிவிடைக் கிழத்தியைத்

தோழி வற்

புறுத்தியது.]

நெருங்கியிருந்த ஆபரணங்கள் நெகிழ்ச்சியையடைய அழுது, இவ்வாறு கண்ணீரை வெளிப்படுத்துங் கண்களோடு மயங்கற்க. ஆராயுங் கோடுகளைக் கிழித்துச் சுவரினிடத்தைப் பற்றி நிற்கும் நினது துயரம், நெடுந் தூரத்திற் போகும்படி மீண்டு வருவேம் என்று தலைவர் கூறிச் சென்ற பருவம் இதுதான் பார். முல்லையின் மெல்லிய அரும்புகள் தனிமையோர் இரங்குதற்குக் காரணமாகிய குளிர்ச்சி மிக்க மாலைக் காலத்தில், பல பசுக்களையுடைய இடையர்களது மாலையினிடத்திலே யிருந்து இப் பருவத்தைச் சொல்லுவனவற்றைப் போன்றன.

கொற்றன்.



## 359

[தலைவி புலவி தீர்ந்தமையைத் தோழி பாணனுக்குப் பகர்ந்தது.]

பாண ! வெற்றியையுடைய தலைவன்,

மாலைக்காலத் தில் விரிந்த குளிர்ச்சியையுடைய
வெள்ளிய நிலாவொளி யில் ; குறுங்காலையுடைய
கட்டிலினிடத்தே பொருந்திய நறுமலர்ப்
படுக்கையில் படுத்துள்ள யானையைப் போலப்
பெருமூச்சு விட்டானாகி, ஆசையினால் தன்

மகனைத் தழுவி ஞன். அம்மகனின் தாயாகிய தலைவி அத்தலைவனது புறத் தைத் தழுவினுள். இதனைப் பார்ப்பாயாக. இச்செயல்
மிக்க அழகையுடையது.

பேயன்.

## 360

[தலைவன் சிறைப்புறத்தானுகத் தலைவி தோழிக்குச் சொல்லியது.]

தோழி! மிக அதிகமாகவுண்டாகிற துன்பத்தை நாம் இன்று அடைந்தாலும், எனது நோயைத் தீர்க்கும் வழி வெறியாடுதலென்றுணர்ந்த வேலன்; நோய் மருந்தறியாஞதலை நம் தாய் காணும் பொருட்டு, மலைச்சாரலின் கண் பெண்யானையின் கையையொத்த, பெரிய கதிர்க் கொத்திலுள்ள தினையை உண்ணுகிற கிளியை விரட்டும் குறமகளின் கையிலுள்ள குளிரென்னுங் கருவி; சிலம் பைப் போல ஒலிக்கின்ற சோலைகள் விளங்குகிற மலை நாட்டையுடைய தலைவன், இராக்காலத்தே இங்கு வாரா தொழிக. இது எனது விருப்பம்.

மதுரை ஈழத்துப்பூதன் தேவன்.

## 361

[வரைவுக்குரிய முயற்சிகள் நடக்குங்காலை, தோழி தலைவியைப் பார்த்து; இதுவரை நன்கு ஆற்றியிருந்தாய் என்று கூறிய பொழுது தலைவி சொல்லியது.]



தோழி! ஒன்று சொல்லுவேன் கேட்பாயாக! தலைவருடைய மலையிலே மாலை நேரத்தில் பெய்த மழையினால் தோன்றிய மணம் கமழுகின்ற ஆற்றோடு, மறுநாட்காலையிலே இங்கே வந்த காந்தளினது மெல்லிய இலை குழையத் தழுவுதலையும், வீட்டிற் கொண்டு வந்து அதன் கிழங்கை நான் நட்டு வளர்த்தலையும் விலக்காதவளாகிய எனது தாய்க்கு, உயர்ந்த நிலையிலுள்ள தேவருலகமும் பிரதி பயனைக் கொடுக்கத் தொடங்கின் மிகச் சிறியதாகும்.

கபிலர்.

## 362

[வெறி விலக்கித் தோழி அறத்தொடு நின்றது.]

முருகனைப் போற்றுதல் செய்து வந்த அறிவுவாய்த்த

வேலனே! கோபித்தலை விடுவாயாக! நின்னை யொன்று

கேட்கிறேன். பலவேறு நிறத்தையுடைய சில

சோருகிய

பலியோடு, சிறிய ஆட்டுக்குட்டியைக் கொலை செய்து, இத்தலைவியினுடைய நல்ல நெற்றியைத் தடவி முருகனை வணங்கிப் பலியாகக் கொடுத்தியாயின் ; இவளை வருத்திய

வானத்தைத் தோய்ந்த பெரிய மலையையுடைய தலைவனது

ஒள்ளிய மாலையை யணிந்த மார்பும், நீ கொடுக்கும் பலியை

உண்ணுதல் செய்யுமோ ?

வேம்பற்றூர்க் கண்ணன் கூத்தன்.

## 363

[பிரிவை யறிந்த தோழி தலைவனுக்குச் சொல்லியது.]

தலைவ ! இனிய துணைவியைப் பிரிந்து, கண்ணியைப் போன்று வளைந்த கொம்பையுந் தலைமையையுமுடைய நல்ல மலை எருது, செவ்விய தண்டுகளையுடைய அறுகினது நீண்ட கொத்தைக் கறித்துத்தின்னும் மடப்பம் பொருந்திய கண்ணையுடைய மலைப் பசுவைப் பார்த்துப் பெருமூச்சு விட்டு, அற்பமான அடியையுடைய உகாய் மரத்தினது

புள்ளிகளமைந்த நிழலின் கண்ணே தங்குகின்ற துன் பத்தையுடையதும் கடத்தற்கரியதுமாகிய சுரத்தைக் கடத்தல் இனியதோ ?

செல்லூர்க்கொற்றன்.

**364**

[வேறொரு பரத்தைத் தன்னைப் புறங்கூறினாளெனக்
கேள்விப்பட்ட இற்பரத்தை அவளுக்குப் பக்கமாயினார்
கேட்பக் கூறியது.]

பிணக்கையுடைய கொடிப் பிரம்புகளைப் போன்ற
கோடுகள் பொருந்திய புறத்தையுடைய நீர் நாயானது,
வாளைமீனை
நாள்தோறும் இரையாகப் பெறுகின்ற ஊருக்

குத் தலைவனுடைய பொன்னாலாகிய திரட்சியோடு விளங்குகின்ற வளையை யணிந்த தனக்குப் பொருந்திய தகுதியுடைய பரத்தை, என்னைப் பழிப்பாளென்று கூறுவர். அது தெளிவு பெறும்படி வளைந்த சந்தையுடைய மூங்கிலைப் போன்ற தோள்களில், ஒளி பொருந்திய வளையை யணிந்த பெண்கள் துணங்கைக் கூத்தாடும் நாட்களும்

வந்தன. அந்நாளில் ஒருவர் கண்ணோடு மற்றொருவர் கண் போர் செய்யும்படி அத்துணங்கைக் கூத்திடத்து, அவரது மணத்தைக் கொள்ளும்பொருட்டு மள்ளர்களுடைய போரானது விரும்பிக் கொள்ளப்படும்.

**365**

ஔவையார்.

[நான் வரையும் வரையிலும் தலைவி ஆற்றுதற்கு வல்லமையுடையளோ என்று வினவிய தலைவனுக்குத் தோழி சொல்லியது.]

பொருந்துதற்கரிய உயர்ந்த மலைப்பக்கத்திலே ஒலிக்கின்ற அருவியானது, தண்ணென்ற ஓசையையுடைய முரசைப்போல ஒலிக்கின்ற ஆரவாரத்தை வெளிப்படுத்துவதும், பக்கத்திற் கொண்ட

பலாமரங்களையுடையதும்



ஆகிய பெரிய மலையையுடைய நாடனே! உன்னால் விரும்பப் பெற்ற தலைவியின் கண்கள், சங்குகளையறுத்துச் செய்து விளங்கும் வளைகள் நெகிழ, நாள்தோறும் உறங்குதலில்லாதனவாகிக் கலங்கி நீர்த்துளிகளை நீங்கா.

மதுரைநல்வெள்ளி. **366**

[காவல் மிகுதிக் கண் வேறுபட்ட தலைவியினது வேறு பாட்டைக்கண்டு, இது எதனாலுண்டாகியதென்று செவிலி கேட்பத் தோழி கூறியது.]

ஆராய்ந்து செய்யப்பட்ட ஆபரணங்களையணிந்த இத் தலைவியானவள், வெறியாடும் மகள் இந்நோய் முருகனால் வந்ததென்று கூறவுந் தெளியாதவளாய்; அதற்குப் பிறகும் பசிய இடத்தையுடைய கரிய

சுனையினிடத்தே
பல பிணிகளவிழ்ந்த வளப்பம் பொருந்திய இதழ்களை
யுடைய நீல மலரைப் பார்த்து, மனத்துள்ளே வருந்தி ;
அழுத கண்களையுடையளாகித் துணிந்தது குற்ற மற்றது. பழவினையினாலே வரையறுத்துப் பொருத்தப் பட்டதல்லாமல், தலைவர் திறத்தில் தகுதியை வரையறுத்து அறிவதற்கு நாம் எத்தகுதியையுடையேம் ?

பேரிசாத்தன்.

## 367

[வரை வுணர்த்தியதோழி, தலைவிக்கு அதிக உவகை
யேற்படாதிருக்கும்படி கூறியது.]

தோழி ! நெகிழ்ச்சியையுடைய பெரிய மழை பெய்வ தற்குத் தொடங்குதலினால் ; அத்
தலைவர் நாட்டிலேயுள்ள
ஆரவாரத்தையுடைய மகளிர் கூட்டம் விரும்பிச் சென்றாடுகின்ற நீரருவியானதுண்டாக. அவ்வருவியினால் நனைக்கப்பட்ட தண்ணிய நல்ல குண்டுக் கற்கள், கழுவிய மணியைப்போற் காணப்படுதற் கிடமாகி ஓங்கிய மலையை

யுடைய தலைவர், நினக்குத் தண்ணளி செய்யாராயினும்

## குறுந்தொகை வசனம்

151

வளைகள் விளங்கும் சந்துகளையுடைய நின் தோள்கள்,
அழகு பெறும்படி
அங்கே வந்தாயாகிக் காண்பாயாக.

மதுரை மருதன் இளநாகன். 368

[வரைவு மலிந்த தோழிக்குத் தலைவி சொல்லியது.]

மெல்லிய இயல்பை யுடையாய்! மெல்லிய இயல்பை யுடையாய்!! நல்ல நாளிலே நம்மைவிட்டு நீங்கிச்சென்ற
குற்றமற்ற மாமையின் இயல்பை ; வலிமையாற் பொறுப்ப
தல்லாமல்
அங்ஙனம் நீங்குவதற்குக் காரணமாகிய துன்பத்
தைச் சொற்களாற் சொல்லுதலுக்கு ஆற்றலில்லேம். சிறி
யோரும் பெரியோரும் வாழ்கின்ற ஊரில், 'ஒரு நாளேனும்

இடையீடு படாத செறிந்த நீரையுடைய வெள்ளத்தினது

திண்ணிய கரையிலே யுள்ள பெரிய மரத்தைப்போலத், தீ

தில்லாத நிலைமையிலே யிருந்து பலமுறை தலைவரைத் தழுவுவேமாக.

நக்கீரர்.

## 369

[தோழி தலைவிக்கு உடன் போக்குணர்த்தியது.]

தோழி! நந்தலைவர் தண்ணளி செய்தனர். ஆதலின் பாலை நிலத்திலேயுள்ள வாகை மரத்தின் ஓசையை யுடைய வெள்ளிய நெற்றுக்களை அவற்றின் விதை; உள்ளிடு பரலையுடைய சிலம்பைப்போல ஆரவாரிக்க, மேல் காற்றுனது அலைக்கின்ற பாலை நிலத்திற் செல்வோமாக.

குடவாயிற் கீரத்தனுர்.

## 370

[தலைவி தன்னைப் பழித்தாளெனக் கேட்டுப் பரத்தை, தலைவியின் பக்கத்தார் கேட்பக் கூறியது.]

பொய்கையிலேயுள்ள ஆம்பலினது அழகிய நிறத்தை யுடைய கொழுவிய முகையில், வண்டுகள் இதழைத்திறக் கும் தண்ணிய நீர்த்துறைகளையுடைய ஊருக்குரியவனுகிய

தலைவனோடு நாமிருந்தால் இரண்டு உடலையுடையேம். அவரோடு தூங்கினால்; வில்லை யகப்படும்படியாகப் பிடித்த விரலைப்போலப் பொருந்தி, அவனது நல்ல மார்பின் கண்ணே சேர்ந்தால் ஓர் உடலை யுடையேம்.

வில்லக விரலினார்.

## 371

[தலைவன் வரைவிடை வைத்துப் பிரிந்த காலத்தில், வற்புறுத்துந் தோழிக்குத் தலைவி சொல்லியது,]

தோழி! மேகங்கள் பொருந்துகின்ற மலையில் மலை
நெல்லை விதைத்து, அருவியினாலே விளையச் செய்கின்ற
நாட்டையுடைய தலைவனால் கைவளை நெகிழ்தலையும் சரீ
ரத்தின் கண்ணே பசப்பூர்தலையும் பெறேனாயினும் அக்
காமம் பெரிது.

உறையூர் முதுகூற்றன்.

[இரவுக்குறியில் வந்து ஒழுகும் தலைவன் கேட்பத்
தோழி, தலைவிக்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது.]

பனையின் உச்சியிலுள்ள கருக்கையுடைய நெடிய
மடல் குருத்தோடு மறைய, வேகத்தையுடைய காற்றுக்
கூட்டிய நெடிய வெள்ளிய மணற் குவியலாகிய தொகுதி
யைக் கொண்ட சிகரமமைந்த, வருத்துகின்ற கடற்கரை
யில் கடல் வீசிய கருமணற் சேற்றையுடைய அருவியால்
கூந்தலினிடத்தே பெய்யப்படுகின்ற எக்கராகக் குவிக்கப்
பட்ட குவியல், காயும் பருவத்தையடையாததற்குள்
இந்த ஆரவாரத்தையுடைய ஊரில் பழிமொழி யெழுந்தது.

விற்றூற்று மூதெயினனார்.

[அலர்மிக்கவிடத்துத் தலைவிக்குத்
தோழி சொல் லியது.]

குறுந்தொகை வசனம்

153

தோழி! நீண்ட மயிரையும் கூரிய
பற்களையுமுடைய
கருங்குரங்கினது கறுத்த விரலையுடைய ஆண்,
பக்கத்தில்
தோண்டியதனால் உடைந்து மலரின் மணத்தை
வீசும்
பலாப்பழம், காந்தளையுடைய அழகிய சிறிய
ஊரினிடத்

திலே மணக்கின்ற உயர்ந்த மலையையுடைய தலைவனோடு
பொருந்திய நமது நட்பானது, உலகம் இடம்மாறினாலும்,
நீருந்தீயுந் தம்மியற்கையினின்று மாறுபட்டாலும், விளங்
குகின்ற அலைகளையுடைய பெரியகடலுக்கு எல்லை தோன்றி
னாலும், கொடிய வாயையுடைய பெண்களது பழிச்
சொல்லுக்குப் பயந்து எவ்வாறு கெடுதலுடையதாகும்?

மதுரைக்கொல்லன்புல்லன்.

## 374

[தானறத்தொடு நின்றமையைத் தோழி தலைவிக்குச்
சொல்லியது.]

நந்தந்தையுந்தாயும் அறியும்படி அறிவித்து; இது
காறும் நாம் மறைத்து வைத்திருந்த களவொழுக்கத்தை
வெளிப்படும்படி யான் கூறிய பிறகு, மலைகள்

பொருந்திய

நாட்டிற்குத் தலைவன் தம்மிடத்திலே வந்து வரைவினை

யிரப்ப, நம்மவர் நன்மையைச் செய்யும் எண்ணத்தினால்

உடன்பட அதனால் வளைந்த சிறகையுடையனவாகிய தூக்கணங்குருவி, உயர்ந்த பெரிய பனையினிடத்திலே அமைத்த கூட்டைக் காட்டினும் மயக்கத்தை யடைந்திருந்த இந்த ஊரானது நம்மொடு ஒன்றுபட்டது.

உறையூர்ப்பல்காயனார்.

**375**

[இரவுக்குறிக்கண் தலைவன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைவிக்குச் சொல்லியது.]

தோழி! ஒன்று கூறுவேன் கேட்பாயாக. மலைப் பக்கத்தில் சிறிய தினைவிளைந்த அகன்ற இடத்தையுடைய

கொல்லையில், இ ர வி ல் தினைக்கதிரை யரிபவர்களைப் போலத், தொண்டகச் சிறுபறை நள்ளிரவிலும் இராக் காவலர் தூங்காமையினால் ஒலிக்கும். தலைவர் இன்று வாராரானால் நலமாகும்,

................

## 376

[பொருள் வலிக்கும் நெஞ்சிற்குத் தலைவன் சொல்லிச் செல வழுங்கியது.]

நிலைபெற்ற உயிர்த்தொகுதியினரால் முழுதும் அறியப் படாததும், நெருங்குதற்கரியதுமாகிய பொதிய மலையி லுள்ள தெய்வங்களையுடைய பக்கத்தில் வளர்ந்த சந்தனத் தைப்போல, வேனிற் காலத்தில் இததலைவி குளிர்ச்சியை யுடையாள். பனிக்காலத்தில்; அடக்கிக்கொண்ட சூரிய னுடைய கதிர்கள் மறையக்குவிந்து, அழகியதாக அசை கின்ற வெயிலை உட்பொதிந்த தாமரை மலரின் உள்ளிடத் தைப் போன்ற சிறிய வெம்மையையுடையாள்.

படுமரத்துமோசிக்கொற்றன்.

## 377

[வரைவிடை யாற்ருளெனக் கவன்ற தோழிக்குத் தலைவி சொல்லியது.]

தோழி! தன்னியல்பு முழுவதையும் அறிதற்குப் பொருந்தாத தலைவனோடு, நாம் செய்துகொண்ட ஒரு சிறிய நல்ல நட்பானது, பூவினையொத்த அழகையுடைய மையுண்ட கண்களின் மாட்சிமைப்பட்ட அழகு நீங்க; வளைபொருந்திய அழகிய மெல்லிய தோள் நெகிழ்ந்ததன் மேலும் மாற்ருகின்றது. அதைக்கருதி நான் ஆற்றி யிருக்கவும் நீ ஆற்ருயாகின்றனை.

மோசிகொற்றன்.

குறுந்தொகை வசனம்

155

378

[மகட் போக்கிய செவிலித்தாய் தெய்வத்தை வாழ்த்
தியது].

நம்மைப்பிரிந்து சுடர் பொருந்திய நீண்ட வேலை
யுடைய தலைவனோடு, மடப்பத்தையும் மாமையையும்
உடைய தலைவி சென்ற பாலை நிலம்; ஞாயிறு

வெயிலே

வீசாமல், மரத்தின் நிழல் பொருந்திய மலையினிடத்தே

யுள்ள சிறிய வழியின்கண் மணல் மிகப்பரவப் பெற்றுக்

குளிர்ந்த மழைபெய்வதாகுக.

கயமனா.

## 379

[அயலார் வரைய வந்த விடத்துத்தோழி அறத்தொடு நின்றது.]

தோழி! குன்றினிடத்தே பழையகுழியைத்தோண்டிய வேடுவன் கிழங்கோடு இடம் அகன்ற தூய மணியைப் பெறும் காட்டையுடையவனும்; நெருங்கிய வளையையுடை

யாய்! அறிவு நிரம்புகின்ற பருவத்தில் நீ எம்முடைய

வீட்டுக்கு இல்லறம் நடத்த வருவாயென்று கூறி, நெருக்கத்தை யுடைய கூந்தலைத் தடவியவனுமாகிய தலைவன் இப்பொழுது எவ்விடத்திலுள்ளானோ?

## 380

[குறித்த பருவத்தில் தலைவன் வராமைக்காகத் தோழி தனது ஆற்றுமை புலப்படச் சொல்லியது.]

தோழி! ஆகாயம் மறையும்படி பரவி; வேந்தர்கள் பகைவர்களைவென்று அறைகின்ற முரசைப்போல நன்ருகப்

பல முறை முழங்கி மேகம் மழை பெய்தலை நீங்காது. தலைவர் மிகத்தூரமாகவுள்ள நாட்டிலேயுள்ளார். அவர் நம்மை நினைக்கின்றிலர். ஈங்கையிலுள்ளனவாகிய நிறத்தையும் உளையையுமுடைய மலர்கள், உதிர இனிமேல்



தோன்றுதற்குரிய கடிய பனிப்பருவத்தில் நாம் என்ன செய்வோம்?

கருவூர்க்கதப் பிள்ளை.

## 381

[வரைவிடையாற்ருளாகிய தலைவியை ஆற்றுவிக்கத் தொடங்கிய தோழி தலைவனை இயற்பழித்தது.]

வெள்ளை நாரைகள் ஒலிக்கின்ற
தண்ணியதாகக் கம
ழும் கடற்கரையிலேயுள்ள பூ நிறைந்த
சோலைக்கண் பருவ மலர்களைக் கலக்கச் செய்து,
குறுக்கிடும் அலைகள் உடைந்து
செல்லுகின்ற துறையையுடைய தலைவனேடு,
விளங்கு
கின்ற பற்கள் வெளிப்படும்படி சிரித்து

மகிழ்ந்ததனுலாய பயன்; பழைய அழகழிந்து தோளினது நலம்மெலிய துன்பத்தையுடைய நெஞ்சோடு, இரவுதோறுந் தூங்காமற் பசலையுண்டாக நாம் அழிவதுவோ ?

## 382

[தோழி பருவத்தை மறுத்துக் கூறியது.]

குளிர்ந்த துளியை யெதிர்கொண்ட பசிய கொடி யாகிய முல்லையின் அரும்புமலர்ந்த மணம், புதலினிடத்தே பூமலிந்த செம்முல்லையோடு தேன் மணக்கும் வண்ணம் நெருங்கித் தோன்ற; மேகம் காலமல்லாத காலத்துப் பெய் யும் மழையைப் பெய்யும். இதுவம்பல்லாமல் கார்கால மாஞல் நமது தலைவர்வாராரோ ?

குறுங்கீரன்.

## 383

[உடன்போக வருந்துந் தலைவியை நோக்கித் தோழி சொல்லியது.]

உடன்போக நீ இயைந்தமையை நான் தலைவனுக்குக் கூறத், தலைவன் குறியிடத்தே வந்து நின்ருன். நீயோ

இன்றைப்பொழுது கழிக என்று கூறினுய்.
கையுங்கா



லும் ஒய்வனவாகி வருந்தத், தீயில் வீழ்ந்த தளிரைப்போல நடுங்கி நான் செய்யத்தக்கது ஒன்றுமில்லை.

படுமரத்துமோசிகீரன்.

**384**

[தோழி வாயில் மறுத்துக் கூறியது.]

தலைவ! உழுத்தங்காயை அடித்தற்குரிய
வயிரமுள்ள
தடியைப்போலக், கரும்பெழுதிய
தொய்யிலையுடைய
பருத்த தோளையும், நீண்ட பலவாகிய
கூந்தலையும், குறிய
வளைகளையுமுடைய பரத்தையரது பெண்மை
நலத்தை
நுகர்ந்து, இப்பொழுது துறந்து இங்கு

வருவையாயின் ;.

நீ அவரிடத்துச் செய்த சபதம் மிக நன்றாக இருந்தது.

ஓரம்போகியார்.

## 385

[வேற்று வரைவு மாற்றியது.]

பலாமரத்திற் பொருந்திய பழத்தை யுண்ட திரளை

யுடைய ஆண் குரங்குகள், சில மரத்தாற் செய்த வில்லை யுடைய வேட்டுவனது குறி பிழையாத செம்மையையுடைய

அம்புத் தொடைக்குப் பயந்து, போர்க்களத்தை யடைந்த

குதிரையைப்போல மேலெழுந்து ; சாரலிலுள்ள பெரிய மூங்கிலினது நீண்ட கோலசையப் பாய்கின்ற பெரிய மலைப்பக்கத்தையுடைய தலைவன்; என்றைக்கும் அன்றிருந் ததைப் போன்ற நட்பினையுடையவன் : அங்ஙனமாக, ஆரவாரத்தையுடைய இந்த ஊர் என் வரைவு குறித்து வந்த புதியவர்களையுடையது.

கபிலர்.

## 386

[ஆற்றல் வேண்டுமென்று வற்புறுத்துந் தோழியை நோக்கித் தலைவி கூறியது.]

158 குறுந்தொகை வசனம்

வெள்ளிய மணல் பரவியதும்; மலர் செறிந்த சோலை
களை யுடையதுமாகிய தண்ணிய கடற்கரைத் துறையை
யுடைய தலைவன், என்னைப் பிரியாதமுன் காலத்தில் நான்,
தூய அணிகலன்களை யணிந்த மகளிர் விழவுக்குரிய அலங்
காரங்களைச் செய்கின்ற மாலைக் காலத்தையே அறிவேனு
யினேன். இப்பொழுது அது போய்விட்டது. அம்
மாலைக் காலம் பூமியின் பரப்பைப் போன்ற பெரிய துன்பத்தோடு புலம்புதற்கிடமாக விருத்தலை அப்பொழுதறியேன்.

வெள்ளி வீதியார்.

[பிரிவிடை வற்புறுத்துந் தோழிக்குத் தலைவி கூறியது.]

தோழி! பகல் நீங்க, முல்லைக்கொடிகள் மலரச் சூரியனது வெப்பங் குறைந்த செயலறுதற்குரிய மாலைக் காலத்தையும், இராப்பொழுது எல்லையாக எண்ணி அது வருமட்டும் கடந்தோமாயின் அதன்மேல் வரும் இரவின் மிகுதி கடலைக் காட்டிலும் பெரியது. நாம் மாலையைக் கடப்பதால் வரும் பயன் யாது?

கங்குல் வெள்ளத்தார்.

## 388

[தலைவி, உடன்போக்கு விரும்பியதை யறிந்த தலைவன், பாலை நிலக் கொடுமை கூறி மறுத்தவிடத்துத் தோழி கூறியது.]

நீரைத்தன்னடியிலே கட்டப்பெற்ற வரிசையாகிய

இதழ்களையுடைய குவளை மலரானது, மேல் காற்று வீசி ஞலும் வாடாதாகும். கவணைப்போன்ற நுகத்தின் பிணிப்புப் பொருதமையால் வருந்துதலையுடைய உப்பு வாணிகருடைய எருதுகள் பூட்டிய வண்டிகளின் தொகுதியை வரிசையாக வைத்தாற்போன்ற, உலர்ந்த மரக்கிளை



களைப் பிளக்கும் வல்லமை யின்மையால் யானை தன்

துதிக்கையை மடித்து வருந்துகின்ற பாலைநிலங்களும்,

உம்மோடு வந்தால் தலைவிக்கு இனிமையுடையனவாகும்

ஔவையார். 389

[வரைவுக்காம் முயற்சிகள் நடைபெறுதலை யறிந்த

தோழி தலைவிக்குச் சொல்லியது.]

தோழி! பெரிய மலைநாட்டையுடைய தலைவன் வரை

வுக்குரிய முயற்சிகளை மேற்கொண்டானாகுக.
அவனுக்கு
முன்னே குற்றேவல் மகனே நலமா ? என்று கேட்டேன். நலமே என்று கூறிய அவன் நெய்ம்மிக ஊறிய சம்பாரத்தோடு கூடிய காடைக்கறியை உண்ணுகின்ற
பதத்தைப்
பெறுவானாகுக.

வேட்ட கண்ணன்.

## 390

[உடன் போக்கினிடைத்துக்கண்டார். பொழுது போனதையும் வழிபறிப்பாருண்மையையுங் கூறிச் செலவு தடுத்தது.]

சிறிய பெண்யானையைப் போன்றவளுக்குத் துணையாகியவனே ! கதிரோனும் விளக்கமில்லாதவனானான். வணிகர் கூட்டம் வந்து அடைந்ததாகப், பகைப்புலத்தே கொள்ளும் பகைமையைப்போல, வளையை யணிந்த நெடிய வேலையேந்திக் காவற் காட்டினிடத்தே வந்து பெயரும் ஆறலைப் போரது தண்ணுமை வாத்தியத்தின் முழக்கத்தையுடைய ஓசையையுங் கேள், நீ விரிருவரும் போதலை ஒழிமின்.

உறையூர்முதுகொற்றன்.

## 391

[பிரிவிடைப் பருவ வரவின்கண் ஆற்றுளெனக்கவன்ற தோழிக்குத் தலைவி சொல்லியது.]

தோழி! எருதானது வெறுத்து உழுதல் செய்யாமல் சோம்பிக் கிடக்கும்படியும், மான்வெம்மையால் புழுங்கும் படியும் மழை நீங்கிய முல்லை நிலத்தில், விரைந்து இடிக் கும் உருமேற்றினால் பாம்புகளின்படம் அழிய, இடியோடு கலந்து மழை இனியதாகப் பெய்தது. அங்ஙனம் பெய்த பெரிய மழையைப் பொருந்தித் தலைவரைப் பிரிந்த மகளிர் செயலறும்படி வந்த துன்பத்தைத் தரும் மாலைக்காலத்தில், பூவையுடைய கிளையிலிருந்த பிளந்தாற்போன்ற கண்களை யுடைய மயில்கள், பாய்கின்ற நீரையுடைய அகன்ற இடம் தனித்து வருந்தக் கூவாநின்றன. அவை மிகுந்த பேத மையையுடையன.

பொன்மணியார்.

## 392

[வரைவிடைக்கிழத்தியது நிலைமையைத் தும்பிக்குச் சொல்லுவாளாய்ச் சிறைப்புறமாகத் தோழி சொல்லியது.]

அழகிய சிறகுகளையுடைய தும்பியே! ஒன்று கூறுவேன் கேட்பாயாக. நல்ல மொழியை ஒருவரிடத்தில் சொல்லும் திறத்தில் பயம் இல்லை. அத்தலைவருடைய நாட்டிலுள்ள தலைமையை யுடைய உயர்ந்த மலைக்குச் செல்லுவையாயின், அரசர்களது வரிசையாகச் செல்லுதலை யுடைய நுண்ணிய கேடகங்களைப் போலத் தேனடைகள் தொங்குகிற மலையையுடைய தலைவரிடத்தில்; கடமை மான்கள் நெருங்கிய தோட்டத்திலுள்ள அழகிய சிறுதினையினிடத்தே, களைக் கொட்டை எறிவதனாலுண்டாகிய நுண்ணிய புழுதியை யுடைய களையெடுப்பாருடைய தங்கையாகிய தலைவி, தம்மவரிடத்தினின்றும் நீங்காளாயினாள் என்று சொல்லுவாயாக.

# 393

தும்பிசேர்கீரனார்.

[தலைவன் சிறைப்புறமாகத் தோழி அலர் பெரிதாயிற் றெனவுரைத்து வரைவுகடாயது.]

## குறுந்தொகை வசனம்

161

தலைவன் விராவிய மலரையுடைய நின்மாலை குழை
யும்படி சேர்ந்த நாட்கள் மிகச் சிலவேயாகும். பழிச்
சொல்லோ கோட்டானுகிய கோழியையுடைய வாகை
யென்னுமிடத்திலுள்ள போர்க்களத்தில், பசிய பூணை
யணிந்த பாண்டியனது ஏவலிலே வல்ல அதிகன் ; தனது
யானையோடு பட்டகாலத்தில் விளங்குகின்ற வாட்
படையையுடைய கொங்கர்களது வெற்றியாலுண்டாகிய
ஆரவாரத்தினும் மிக்கது.

பரணர்.

## 394

[வரைவிடை ஆற்ருளாகிய தலைவியை ஆற்றுவிக்குந் தோழி தலைமகனை இயற்பழித்துக் கூறியது.]

முழந்தாளையுடைய கரிய பிடியினது மெல்லிய தலையையுடைய கன்று, கள் மிகுந்த மலைப்பக்கத்தூரில் குறமகள் பெற்ற குறியகைச்சந்தையுடைய பிள்ளைகளோடு சுற்றி ஓடி ; முற்காலத்தில் இனிமையைத் தருவதாகிப் பிற்காலத்தில் அவர்களுடைய தினையை மேய்ந்தாற்போலத் தலைவர் முன்பு நகைத்து விளையாடியது, இப்பொழுது பகைமையையுடையதாகின்றது.

குறியிறையார்.

## 395

[வரைவிடை வைத்துப் பிரிய ஆற்ருளாகிய தலைவி நாம் தலைவனிருக்குமிடத்திற்குச் செல்வோமென்று தோழிக்குச் சொல்லியது.]

எனது நெஞ்சை நிறுத்துதல் செய்ய முடியாது. அத்தலைவர் நம்பால் அன்பின்மையால் அருளைப் பொருளெனக் கருதாதவராயினுர். வலிமைகொண்டு என்னை வற்புறுத்துதலில் வன்மை பெற்ருேர், பாம்பாலுண்ணப்படும் சந்திரன்

திறத்தில் இவ்வுலகத்திலுள்ளோர் செயலைப்போல, எனது துன்பத்தைக் களையாராயினும்; இனிமையாகத் தூங்கு

K



கின்றனர். பயப்படாதே என்று நம்மைத் தெளிவிப்பாரும் இவ்விடத்தில் இல்லை. ஆகையால் அங்கே அத்தலைவர் தங்குமிடத்திற்கு நாம் நீங்கிச் சென்றால் நமது நாணம் இரங்கத்தக்க விதமாக அழியும்.

........................

396

[மகட் போக்கிய தாய் உரைத்தது.]

பாலும் உண்ணாளாகிப், பந்தையும் விரும்பாளாகி, முன்னர்த் தன்னோடு விளையாடும் மகளிர் கூட்டத்தோடு விளையாடிய தலைவி, இப்பொழுது; காய்ந்த கிளையை யுடைய ஓமைமரத்தினைக் குத்திய உயர்ந்த கொம்பை யுடைய ஆண்யானை, வேனிலின் தன்மையையுடைய மலையினிடத்திலுள்ள வெம்மையாகிய அடிவாரத்தில், மேகம் முழங்குகின்ற கடிய முழக்கத்தைக் கவனித்துக் கேட்கும், மூங்கில்கள் காய்ந்த செல்லுதற்கரிய இடத் திலே, அத்தலைவனோடு செல்லுதல் எளிமையையுடைய தென்று அறிந்தாளோ? (கவனித்துக் கேட்பது, நீர் வேட் கையால் மழை வருமென்று.)

கயமன்.

## 397

[வரைவிடை வைத்து நீங்கும் தலைவனுக்குத் தோழி சொல்லியது.]

அரும்புகள் முதிர்ந்த ஞாழலினது முட்டையைப் போன்ற திரண்ட மலர்களை, நெய்தலது கரிய மலரிலே பெய்வதைப் போலக். குளிர்காற்றுத் தூவுகின்ற வன் மையையுடைய கடற்கரைக்குத் தலைவ! தாய் கோபித்து வருத்திய பொழுதும், வாய் திறந்து அன்னையே என்று அழும் குழந்தையைப்போல, என் தோழியாகிய தலைவி நீ துன்பந் தருவனவற்றைச் செய்தாலும், இனிதாகத் தலை யளி செய்தாலும் நின்னாற் காப்பாற்றப்படும் எல்லைக்குட்

பட்டவள். நின்னையல்லாமல் ; தனக்கு வருந்
துன்பத்
தைப் போக்குவாரைப் பெற்றிலள்.

## 398

அம்மூவன்.

[ஆற்றல் வேண்டுமென்ற தோழிக்குத் தலைவி சாற்றி
யது.]

தோழி ! குளிர்ச்சி யுண்டாகும்படி தூ
வு கி ன் ற
மழைத் துளியையுடைய துயரம் மிகுந்த
பொழுதில், கயலை
யொத்த மையுண்ட கண்களையும், கனத்த
குழையையு

முடைய மகளிர், தம் கையே கருவியாக நெய்யை வார்த்து ஏற்றிய விளக்குத் துயரத்தை யெழுப்புகின்ற மாலைக் காலத்தில்; பெறுதற்கரிய தலைவர் வந்தாராக; விருந்து செய்து உடம்பு பூரிக்கும் மகிழ்ச்சியோடு; கண் கலங்கிய தால் முன்னெழுந்து வீழ்ந்த நீர்த்துளியைத் துடைப் போரைக் காணும்.

பாலைபாடிய பெருங்கடுங்கோ.

## 399

[வரைவு நீட்டித்த விடத்துத் தலைவி தோழிக்குச் சொல்லியது.]

தலைவர் நம்மைத் தீண்டுந்தோறும் பசலையானது நம் முடலை விட்டகன்று, பிரியுந்தோறும் பரவுதலால்: ஊராலே உண்ணப்படுகின்ற நீரையுடைய கிணற்றின் கண், உண்ணுந் துறையினிடத்தே கூடிய பாசியைப் போன்றது.

பரணர்.

## 400

[வினைமுற்றி வந்த தலைவன் தேர்ப் பாகனைப் பாராட் டிக் கூறியது.]

நெடுந் தூரமாகிய வழியைக் கடந்து செல்லேமாயின், துன்பமில்லாமல்: தலைவியின் காம நோயைக் களைய

மாட்டோமென்று, நன்மையை விரும்பி நினைத்த மனத்தை யுடையையாகிப், பருக்கையையுடைய மேட்டு நிலத்திடம் விள்ளும்படிபோய்க் கரம்பை நிலத்திலே புதிய வழியை யுண்டாக்கிய தேர்ப்பாகனே! நோயினால் வருந்தி உறை யுந் தலைவியை இறந்து படாமற் கொடுத்தற்குக் காரண மாயினமையின்; இன்று நீ தேரை மாத்திரமல்லாமல் தலைவியையுந் தந்தாய்.

பேயனார்.

## 401

[மெய் வேறுபாடு கண்டு இற் செறிக்கப்பட்ட தலைவி தன்னுள்ளே சொல்லியது.]

அடும்பினது அழகிய மலரைக் கலந்து, நெய்தலா லாகிய நெடிய மாலையை யணிந்தவரும், நீரொழுகிய கூந் தலையுடையவரும் ஆகிய விளையாட்டுப் பெண்களுக்குப் பயந்து; ஈரத்தையுடைய நண்டு கடலுக்குள்ளோடுந் துறையையுடைய தலைவனோடு, ஒரு நாள் சிரித்து விளை யாடுதலையும்; சரீரத்தைத் தோய்ந்த நட்பு நீக்கி விட்டது. இது ஆச்சரியப்படத்தக்கது.

அம்மூவன்.

குறுந்தொகை வசனம் முடிந்தது.

வேலுமயிலுந் துணை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1 | Tamilagam | Author: N. S. Kandi | | | |
| 2 | Tamilar Charitram | " | | | |
| 3 | Pathupattu Vachanam | " | | | 0 |
| 4 | Agananuru Vachanam | " | ... | 1 | 0 |
| 5 | Pathirrupatha Vachanam | " | ... | 1 | 0 |
| 6 | Paripadal Vachanam | " | ... | 1 | 0 |
| 7 | Purapporul Vilakka Vachanam | " | ... | 1 | 0 |
| 8 | Arivuraimalai | " | ... | 0 | 10 |
| 9 | Arivuraikovai | " | ... | 0 | 10 |
| 10 | Kalithogai Vachanam | " | ... | 1 | 8 |
| 11 | Agananuru Vachanam Parts 2 and 3 | " | ... | 1 | 12 |
| 12 | Agaporul Oviam (50) | " | ... | 0 | 8 |
| 13 | Agaporul Kathai (Vachanam) | " | ... | 1 | 0 |
| 14 | Studies in Chilappathigaram | (R. P. Sethu Pillai B.A., B.L.) | ... | 1 | 8 |
| 15 | Story of Chilappathigaram | " | ... | 0 | 8 |
| 16 | Nine Lilies of the Tamil Land | " | ... | 0 | 8 |
| 17 | Rajarajan | (Mani Thirunavukkarasu Mudaliar) | ... | 1 | 8 |
| 18 | Sundarar | (Tholuvur Velayutha Mudaliyar) | ... | 0 | 10 |
| 19 | Thembavani Vachanam | | ... | 0 | 8 |
| 20 | Vinotha Charitram | | ... | 0 | 12 |
| 21 | Pulamai Vithaga Bodhini (Tamil Grammar) | | ... | 1 | 8 |
| 22 | Kurunthogai Vachanam | | ... | 1 | 4 |

(Detailed Catalogue sent free on application.)

